# கம்ப சித்திரம்

## பால காண்டம்

பி. ஸ்ரீ.

தமிழ் இலக்கியக் கழகம்
ஜி. டி. சென்னை

ஸமர்ப்பணம்

எனது நண்பரும்,

'ஆனந்த விகடன்' அதிபருமான

ஸ்ரீ. எஸ். எஸ். வாஸன்

அவர்களுக்கு.

18-5

## உள்ளுறை

முன்னுரை

# முன்னுரை

லோகோத்தரமான மகாகவிகளுள் ஒருவனுகிய கம்பனைக் குறித்தேனும், அவனுடைய கவியமிர்தைத் தாமும் அருந்தி இன்புற்று நமக்கும் பகிர்ந்தளித்து வரும் அறிஞர்களுள் ஒருவராகிய ஸ்ரீ பி. ஸ்ரீ. ஆசார்யா அவர்களைக் குறித்தேனும் யாதுங் கூறுதல் மிகை. இலக்கியக் கல்வியின் தலையாய வரம்பு என்று எண்ணத் தகுவது, கம்பனது கவிதைகளை நெறிப்பட ஆராய்ந்தறிந்து இன்புறுதலாகும். இங்ஙனம் கூறுதலைக் காட்டினும் சிறந்த புகழ் இருவர்க்கும் இல்லை.

கம்பனது கவிதையின்பத்தை உணர்தல் எளிய காரியமன்று. பதப்பொருளை அறிதலால், அது கைகூடாது. இலக்கணக் குறிப்புக்கள் தெரிதலால், அது தெரிந்ததாக மாட்டாது. விருத்தியுரையை உரைத்துக் கொள்ளுதலால், அது விளங்கிவிட மாட்டாது. முன்னூல்களிலுள்ள ஒப்புமைப் பகுதிகளை நுட்பமாக ஆராய்ந்து கொள்ளுதலால், அது நுகரப்பெற்றதாகாது. நூற்றுக் கணக்காகப் பாட்டுக்களை மனனம் பண்ணி ஒப்பிப்பதாலும், அது உணரப் பெற்றதாகாது.

கம்பனது கவிதையின் சொல்லும் பொருளும் பாவமும் உள்ளத்திலே உள்ளூறிக் கிடந்து கனியக் கனிய, அதன் இன்பம் உணரப்படும். அவனது கவித்வ சக்தியின் மர்மங்களை உணரவுணர, நமது இன்பவுணர்ச்சியும் மிகுதிப்படும். அவனது கவிதா சன்னதம் நம்மீது ஏற ஏற, கவிதைகளின் பேராற்றலும் பேரழகும் பேரின்பமும்

புலனாகிக்கொண்டே வரும். ஆதலால் இக்கவிதா சன்னதத்தை ஓரளவு பெற்றாரன்றி ஏனையோர்கள் கம்பன் கவியின்பத்தைப் பிறருக்குப் புலப்படுத்தி அவர்களை இன்புறச் செய்தல் கூடாதாகும்.

இக்கவிதா சன்னத நெறியில் நின்றே ஸ்ரீமாந் பி. ஸ்ரீ. கம்பனை அறிந்து இன்பமுறுதற்கு வழிகாட்டுகிறார். இவரது உணர்ச்சியின் ஆற்றலால், நம்மையும் உடனிழுத்துச் சென்று இன்பமாளிகையிற் கூட்டுவிக்கின்றார். தினந்தோறும் நாம் வழங்கும் பேச்சு முறையையே இவரும் கையாண்டு நம் உள்ளத்தை எளிதில் தம் வசமாக்குகிறார். நமக்கும் இவருக்கும் இடையில் எழுதுகோலோ, கடிதமோ, உயிரற்ற அச்செழுத்துக்களோ யாதும் இருப்பதாகத் தெரியவில்லை. நேருக்கு நேராக நின்று நம்மோடு பேசுகிறார். கம்பனது அதியற்புத கவிதா சித்திரங்களை நமது மனக்கண் முன்னே இவரும் சித்திரித்துக் காட்சியின்பத்தை அளிக்கின்றார். இவர் கூறும் ஒவ்வொரு வாக்கியமும் ஆற்றல் நிரம்பியுள்ளது ; நமது இன்பவுணர்ச்சியை மிகுவிக்கின்றது.

இந்த நெறியே கம்பனை நாம் நன்குணர்ந்து அனுபவித்தற்கு ஏற்ற நெறியென்பது இந்நூலைக் கற்போர் எளிதின் அறிவர்.

இப்பாலகாண்டம் போன்று ஏனைய காண்டங்களும் வெளிவந்தால், கம்பராமாயணவுணர்ச்சி நமது நாட்டில் மிக்க விரைவிற் பரவும். உண்மைக் கவிதையின்பமும் பெருகும் இவ்வெளியீட்டு முயற்சி இனிதின் நிறைவேறுமாறு எல்லாம் வல்ல இறைவன் அருள்புரிக.

சென்னை ஸர்வகலாசாலை
10—12—40

எஸ். வையாபுரிப் பிள்ளை
*தமிழாராய்ச்சித் துறைத் தலைவர்*

உலகம் யாவையும் தாமுள ஆக்கலும்,
நிலைபெ றுத்தலும், நீக்கலும், நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவர் : அன்னவர்க் கேசரண் நாங்களே.

# 1. கம்பன் கண்ட இராமாவதாரம்

இராமாயணம் காட்டிலே பிறந்தது; நாட்டிலே வளர்ந்தது. இக்காவியத்தை இயற்றிய வால்மீகி முனிவரின் ஆச்ரமம் காடுகளின் இயற்கை யழகுகளுக் கிடையே அமைந் திருந்தது. முனிவர் தம் சிஷ்யர்களோடு வசித்துவந்தார். ஆச்ரமம் ஒரு தபோவனமாகவும் குருகுல வித்தியாலயமாகவும் இருந்தது. அங்கே ரிஷிபுத்திரர்களும் இராஜகுமாரர்களும் ஒன்ருய்க் கூடிக் கல்வி கற்று வந்தனர்.

வால்மீகி காடுகளில் வசித்து வந்ததோடு, நாடுகளிலும் தாராளமாய்ச் சென்று அங்குள்ள அரசர்களோடும் ஜனங்களோடும் பழகுவதுண்டு. அவர் வட இந்தியாவிலுள்ள பிரதேசங்களை யெல்லாம் நன்கு அறிந்திருந்தார்; தென் இந்தியாவையும் ஒருவாறு அறிந்திருந்தார். வட நாட்டிலும் தென்னுட்டிலும் வழங்கிவந்த ரஸமான கதைகளையெல்லாம் கேட்டு ஆனந்திப்பதுண்டு. வீர சரித்திரங்களைக் கேட்பதில் ஜனங்களுக்கு எவ்வளவு ஆசை உண்டு என்பதை நன்ருய்த் தெரிந்துகொண்டிருந்தார். அத்தகைய சரித்திரங்களின் மூலமாகப் பல உயர்ந்த கருத்துக்களையும் இலட்சியங்களையும் ஜனங்களிடையே விதைப்பது எளிதென்பதும் அவருக்குத் தெரியும்.

எனவே, ஓர் உத்தம வீரனுடைய சரித்திரத்தைக் காவிய மாகச் செய்யவேண்டுமென்று வால்மீகி நீண்டகாலமாக எண்ணிக் கொண்டிருந்தார். மகரிஷி மகாகவியாகவும் இருந்ததால், அந்த எண்ணம் இனிது நிறைவேறியது. அவர் தவப்பயனுகத் தோன்றியது ஆதிகாவியமான இராமாயணம்.

ஆச்ரமத்திலே பிறந்த இராம கதை ஆதியில் ஓர் அற்புத வீர சரித்திரமா யிருந்தது. பிறகு அது அங்கே கற்றுக்கொண் டிருந்த இராஜகுமாரர்கள் வாயிலாக அரண்மனைகளுக்குச் சென்றது. இராமன் அரசர்களுக்கு முன்மாதிரியாகக் கருதப்பட்டதால், அவனது வீர சரித்திரம் ஓர் உயர்ந்த இலட்சிய புருஷனது சரித்திரமாக மதிக்கப்பட்டது.

ஆச்ரமவாசிகளுக்கிடையே வீரனுகத் தோன்றித் திகழ்ந்த இராமன், அரண்மனைகளிலே இலட்சிய புருஷனுக வளர்ந்தான். ஆச்ரமத்திலிருந்து அரண்மனைக்குச் சென்ற இராமாயணம் குடிசைகளிலும் புகுந்தது. இராமாயண புருஷர்கள் பொதுமக்கள் உள்ளம் புகுந்து வளரலாயினர். அரண்மனைகளில் இலட்சிய புருஷனுக விளங்கிய இராமன் மகாஜனங்களின் உள்ளத்திலே புருஷோத்தமனுன அவதார மூர்த்தியாகி வளரத் தொடங்கினுன். இராம கதை இராமாவதார மாயிற்று.

இராமனேடு இராமாயணமும் வளர்ந்துகொண்டே வந்தது. வால்மீகி காலத்திற்குப் பின்பு — அதாவது, வடநாட்டு நாகரிகமும் தமிழ்நாட்டு நாகரிகமும் ஒருமுகமாய்க் கூடிக் கலந்த பின்பு — மேனி செழித்து வளர்ந்தோங்கிய இந்து சமுதாயத்தோடு இராமாயண கதாபாத்திரங்களின் குணவிசேஷங்களும் வளர்ந்தோங்கி வந்தன. ஊற்ருய், ஓடையாய், அருவியாய், ஆருய்ப் பெருகி வந்த இராம சரிதம், தமிழருள்ளங்களில் ஓடிப் பாய்ந்து ஒரு சமுத்திரம் போலப் பொங்கிவிட்டதென்று சொல்லலாம்.

ஆழ்வார் - நாயன்மார் காலத்திற்குப் பின் தோன்றிய கம்பன் மகாகவியாக இருந்ததோடு பக்தனுகவும் இருந்தான். இவன் நெஞ்சிலே கோயில் கொண்ட இராமாயணம் என்ற பக்திவெள்ளம், பெருகிப் பெருகி வானளாவி வளர்ந்து உலகத்தில் இல்லாத ஏதோ ஒரு மகாசமுத்திரம்போல் பொங்கிக்கொண்டிருந்தது. இத்தகைய தெய்வமாக்கதை தமிழிலும் தனக்கு இசைந்த கவிதாரூபத்தில் அமையவேண்டுமென்று கம்பன் ஆசைப்பட்டான்.

'ஆனால் ஆசையை நிறைவேற்ற ஆற்றல் வேண்டாமா? சிந்தை செயலாக வேணுமே!' என்ற கவலையும் ஏற்பட்டது. தன்னுடைய நிலையையும், தன்னுடைய மனக்கண் முன் அலைமேல் அலை யெறிந்துகொண்டிருந்த அந்த மகாசமுத்திரத்தையும் நினைத்து நினைத்துப் பார்த்தான். என்ன ஆச்சரியம் : சமுத்திரம் பால் - சமுத்திரமாகிறது! என்ன விபரீதம்: கவிஞன் பூனை யாகிறான்! இந்த அற்புதம் நாதத்தோடு பொங்குகிறது :

ஓசை பெற்(று)உயர் பாற்கடல் உற்(று)ஒரு
பூசை முற்றவும் நக்குபு புக்கென,
ஆசை பற்றி அறையலுற் றேன்மற்(று)இக்
காசில் கொற்றத்(து) இராமன் கதையரோ!

[ பூசை - பூனை. நக்குபு - நக்குவதற்கு. புக்கென - புகுந்தாற்போல. அறைதல் - (1) சொல்லுதல்; (2) பறை முதலியன கொட்டுதல். காசில் - குற்றமற்ற. கொற்றம் - (1) வீரம்; (2) வெற்றி. அரோ - அசைச்சொல். ]

ருசி கண்ட பூனை. வீடுகளிலெல்லாம் பாலை ஜாக்கிரதையாக மூடிவைத்துவிட்டார்கள். 'எங்கே பால் கிடைக்கும்? எங்கே? எங்கே?' என்று அலைந்துகொண்டிருந்தது; தவித்துக்கொண் டிருந்தது. எப்படியோ அந்தப் பூனை ஒரு பாற்கடலையே கண்டுபிடித்துவிடுகிறதாம். அலைகள் மலைபோலப் புரண்டு வருகின்றன. என்ன ஓசை! என்ன உயரம்! எனினும் அந்தப் பூனை அஞ்சாமல் அந்தப் பாலைக் குடிக்க ஆசைப்படுகிறது. ஏன்? அந்தப் பாற்கடல் முழுவதையும் குடித்துவிடலா மென்றுகூட ஆசை. 'இதோ நக்கிவிடுகிறேன், ஒரு துளியும் மிச்சமில்லாமலே!' என்பது பூனையின் சங்கற்பம். நக்கிக் குடிப்பதைத் தவிர அதற்குத் தான் வேறு வழியில்லையே? ஆனால் அந்தப் பயங்கரமான அலை சுருட்டி இழுத்துவிட்டால்? என்ன ஆசை! ஆ, என்ன ஆபத்து!

இப்படிப்பட்ட ஒரு பூனையின் நிலைதான் தன்னுடைய நிலை என்கிறான். ஆசை வெட்கம் அறியுமா? ஆபத்தையும் அறிந்து

கொள்ளவில்லையே! 'பரிகாசத்துக்கும் பரிதாபத்துக்கும்தானு உரியது என்னுடைய நிலை?' என்பது குறிப்பு.

'ஓ!' என்று கோஷிப்பதை ஞாபகப்படுத்தும்படி 'ஓசை' என்ற சொல்லை எதுகையில் வைத்து, உயர்ந்த அலைகளைச் சுட்டிக் காட்டும்படி 'உயர்' என்ற சொல்லை மோனையில் வைத்திருக்கிறுன். இந்த முதல் வரியைப் பாடிப் பாடிப் பார்த்தால், 'ஓசை' 'உயர்' என்ற இரண்டு சொற்களும் சமுத்திரத்தை எப்படிக் கண்முன் கொண்டுவந்து விடுகின்றன என்பது தெரியவரும். 'ஓசை'யைப் போல், 'ஆசை' என்பதும் எதுகையில் அமைந்து, 'ஆ' என்று விழுங்குகிற ஆசையை ஞாபகப்படுத்துகிறது. 'ஓசை'க்கும் 'ஆசை'க்குமிடையே எதுகையில் நிற்கிறது பூனையைக் குறிக்கும் 'பூசை'.

பாட்டைப் பாடிப் பாடிப் பாருங்கள்: சப்த ஜாலம் ஏதோ ஓர் இந்திர ஜாலம் போல் நம் மனக்கண் முன் சித்திரித்துவிடுகிறது,— பாற்கடல் முன் பூனையையும், மனேபாவத்தால் தான் கண்ட இராமாயணக் கடலின் முன் கம்பனையும்.

கம்பனுடைய இந்த ஆசை உள்மனத்திலே ஊறி உயிரோடு உயிராய்க் கலந்திருந்ததென்று சொல்லவேண்டும். இந்த ஆசையை இவனுடைய 'ஆத்ம தாகம்' என்று சொல்லலாம். இளமையிலேயே இந்த ஆசை ஏற்பட்டு வளர்ந்துகொண்டே வந்திருக்க வேண்டும். இராம கதைக்கென்றே இவன் தன்னை மன மெய் மொழிகளிலும் அர்ப்பணம் செய்ததற்கு இந்த ஆசையே காரணம். இதுவே இவனது ஸ்தூல சூட்சும சக்திகளை யெல்லாம் ஒருமுகமாய்த் தூண்டி எடுத்த காரியத்தைத் தொடுத்து முடிக்கும் ஆற்றலை விளைத்ததென்று சொல்லவேண்டும். இந்த ஆசை இவனது தனிப்பெரு நோக்கம் — வாழ்வின் ஜீவநாதம். 'உண்ணும் நீரினும் உயிரினும்' கதாநாயகனையே உகக்கும்படி செய்த தெய்விகப் பேராசை அல்லது தெய்விகப் பைத்தியமான பக்தியும் இது.

# கம்பன் கண்ட இராமாவதாரம்

---

இராமனது தெய்வமாக்கதைக்குத் தகுந்தபடி தமிழ் கொண்டு ஒரு தெய்வமாக்காவியம் புனைந்து தர வேண்டுமென்று ஆசைப்படும் கம்பன், தான் தவறிவிட்டால் உலகம் தன்னை இகழக் கூடுமென்றும், தனக்குக் குற்றம் ஏற்படக்கூடுமென்றும் அஞ்சுகிறான். ஆனால் இந்த அச்சத்தையும் இலட்சியம் செய்யவில்லை ஆசை. 'என் புன்கவியைப் பார்த்து, தெய்வமாக் கவியின் பெருமைதான் பெருமை! — என்று தெரிந்து கொள்ளக் கூடுமல்லவா?' என்கிறான் — காக்காய்ப் பொன்னைப் பார்த்துப் பொன்னின் மாட்சியைத் தெரிந்துகொள்வதுபோலே:

> வையம் என்னை இகழவும், மாசெனக்(கு)
> எய்த வும்மி(து) இயம்புவ(து) யாதெனில்,
> பொய்யில் கேள்விப் புலமையி னோர்புகல்
> தெய்வ மாக்கவி மாட்சி தெரிக்கவே.

[ வையம் - உலகம்; கல்வி யறிவுள்ள பெரியோர். மாசு - குற்றம். பொய்யில் - பொய் இல்லாத. புகல் - மகிழ்ச்சியோடும் விருப்பத்தோடும் கொண்டாடுகிற. தெரிக்க - தெரிவிக்க. ]

கல்வி கேள்விகளில் சிறந்தவர்கள், 'உயர்ந்த கவிதை என்பது அபூர்வமான பொருள்; கவிதையே கலைகளுக்கெல்லாம் ராணி; உத்தமக் கவிதையின் மாட்சியே மாட்சி' என்று எவ்வளவு ஆசையோடும் மகிழ்ச்சியோடும் கொண்டாடுகிறார்கள்! அவர்கள் உயர்ந்த கவிகளைத் தங்கள் காதில் போட்டுப் போட்டுப் பார்த்த வண்ணமா யிருப்பார்களாம். அவர்களுடைய பண்பட்ட காதுகள் நல்ல கவிதைக்கு 'உறை' என்கிறான் — நகைகளுக்கு உறைகள் போலே. அந்த உறைகளில்தான் கவிதை என்ற அரும் பொருள் மாசு படாமல் பந்தோபஸ்தா யிருக்கிறதாம்.

'இப்படிப்பட்ட செவிகளிலா என்னுடைய கவிகளையும் போடத் துணிந்தேன்?' என்று மறுபடியும் அஞ்சுகிறான்:

துறைய டுத்தவி ருத்தத்தொ கைக்கவிக்(கு)
உறைய டுத்தசெ விகளுக்(கு) ஓதில்,யாழ்
நறைய டுத்தஅ சுணநன் மாச்செவிப்
பறைய டுத்தது போலும்என் பாவரோ !

[ அடுத்த - சார்ந்த ; சேர்ந்த ; ஆதாரமாகப் பற்றிய. தொகை - கூட்டம். உறை - கூடு. நறை - தேன். அசுணம் :- சங்கீதத்தை ரஸிக்கக்கூடிய ஒருவகைப் பிராணி. நன்மா - நல்ல மிருகம். ]

ரஸிகர் காதில் புன்கவிதைகள் விழுந்தால், ' அந்த அவஸ்தை கொஞ்சமோ ? மரணவஸ்தைதானே !' என்கிறுன். உதாரணமாக ஒரு கதை. அசுணம் என்று ஒரு கற்பனை மிருகம். அதற்குச் சங்கீதம் என்ருல் பிராணன். அசுணங்களை வேட்டையாடுவதற்கு ஒரு சுலபமான வழியிருக்கிறதாம். காட்டிலே ஒரு மரத்தடியில் போய் உட்கார்ந்துகொள்ள வேண்டியது. உட்கார்ந்து, யாழ் என்ற இசைக் கருவியை மீட்டவேண்டும். அவ்வளவுதான். அந்தப் பிராணிகள் அப்படியே வந்து மொய்த்துவிடும். அந்த நிலையில் அவற்றைக் கொல்வதற்குரிய கருவி எது, தெரியுமா ? யாழிசையைச் செவியால் பருகிக் கொண்டிருக்கும்போதே, ஒளித்து வைத்திருந்த பறைக் கொட்டைப் பளிச்சென்று எடுத்து ஒரு அடி அடித்துவிட வேண்டியதுதான். அப்படியே செத்து விழுந்துவிடுமாம் அந்த மிருகங்கள். ரஸிகத் தன்மைக்கு இதைக் காட்டிலும் ஒரு ' இதிகாசம் ' பண்ண முடியுமா ?

யாழின் இசையை ' யாழ் நறை '—அதாவது, யாழிலிருந்து வரும் தேன் — என்கிறுன். பூக்கள் முதலியவற்றிலிருந்து தேன் கிடைப்பது போல் யாழிலிருந்தும் கிடைக்கிறதாம். இவ்வளவு ரஸிகத்தன்மையோடு இசையைக் குறிப்பிடுகிறவன் அழகுக்கலைகளின் மகாராணியான கவிதையைக் குறித்தும், கலா ரஸிகர்களைக் குறித்தும், உயர்ந்த — கௌரவமான — அபிப்பிராயம் கொண்டிருப்பது நியாயம்தானே.

அத்தகைய ரஸிகர்கள் இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ் என்ற முத்தமிழையும் முறையாகக் கற்றுத் தேர்ந்திருப்பார்க ளல்லவா? அந்த ரஸிகர்களும் ஒருவிதத்தில் கவிகள்தானே. அவர் களே பாடக்கூடிய உத்தமக் கவிகளாகவு மிருந்தால், எப்படித் திருப்தி செய்ய முடியும் நம்முடைய கவிதையைக் கொண்டு? —என்ற கவலையும் ஏற்படுகிறது. அவர்களுக்கும் ஒரு சமாதானம் :

முத்த மிழ்த்துறை யில்முறை போகிய
உத்த மக்கவி கட்(கு)ஒன்(று) உணர்த்துவன் :
பித்தர் சொன்னவும், பேதையர் சொன்னவும்,
பத்தர் சொன்னவும் பன்னப் பெறுபவோ?

[ போகிய - நன்கு பயின்ற. பேதையர் - பெண்கள்; (இங்கே) காதலிகள். பன்ன - ஆராய. ]

'பைத்தியக்காரர் சொல்லை யாராவது ஆராய்ந்து கண்டனம் செய்வதுண்டா? அப்படியே என் பாடல்களும் தங்கள் ஆராய்ச்சிக்கு உரியனவோ? முத்தமிழும் முறையாய்க் கற்ற உத்தமக் கவிகளே!' என்கிறான். உலகமே ஒரு பித்தர் சாலை: ஒவ்வொருவனுக்கு ஒவ்வொரு பைத்தியம். கம்பனுக்குப் பைத்தியம், இராமாயணக் கடலைத் தமிழிலே கான வர்ஷமாகப் பெய்துவிட வேண்டுமென்பது. உலகம் தன்னைப் பித்தனென்றும் பேதையென்றும் சொல்லும்படி இவன் தனது இலட்சியத்திலேயே ஈடுபட்டு அதற்கே தன்னைப் பக்குவப்படுத்தி வந்தானென்று கருதவேண்டும்.

இப்படிப் பிறந்த கவிதையைக் காதலி காதல்வெறியிலே சொல்லும் சொற்களைப் போல் கொள்ளலாம். 'அல்லது என்னையும் ஒரு பக்தனாகப் பாவித்துக்கொள்ளலாமே: பக்தி பரவசமாய்ச் சொன்னவைகளெல்லாம் ஆராய்தற்கு உரியனவோ?' என்று கேட்கிறான். இந்த வாக்கோடு, 'காதலனும் பைத்தியக்காரனும் கவிஞனும் மனோபாவத்தில் ஒரே அச்சு!' என்ற ஆங்கிலக் கம்பனான ஷேக்ஸ்பியர் வாக்கை ஒப்பிடலாம். காதலுக்கும் பக்திக்கும்

கவிதைக்கும் ஸாராம்சத்தில் தொடர்பு உண்டென்பதும், கவிதைக்கு விசேஷ மனோபாவம் இன்றியமையாததென்பதும் குறிப்பு.

இன்னும் ஒரு வார்த்தை சொல்லி 'அவையடக்க'த்தை முடித்துக்கொள்ளுகிறான். 'சிறு பிள்ளைகள் வீடுகட்டுவது போலிருக்கிறது, நான் இந்தக் காவிய மாளிகையைக் கட்டி நிறுத்த முயல்வதும்!' என்று சொல்லிவிடலாமா? — என்று யோசிக்கிறான். ஆனால் அந்தப் பணிவிற்கும் தாழ்ந்ததொரு பணிவை நாடுகிறது உள்ளம். பிள்ளைகள் சிறு வீடு கட்டுவதை உபமானமாகச் சொல்ல விரும்பாமல், பளிச்சென்று அந்தச் சிறு பிள்ளைகளை வைத்துக்கொண்டே வேறொன்று சொல்லிவிடுகிறான்:

அறையும் ஆடரங் கும்படப் பிள்ளைகள்
தறையில் கீறிடில், தச்சரும் காய்வரோ?
இறையும் ஞானமி லாதஎன் புன்கவி
முறையில் நூலுணர்ந் தாரும் முனிவரோ?

[ ஆடரங்கு - ஆடு + அரங்கு - நடன மண்டபம். பட - தோன்ற. தச்சர் - சிற்பிகள். காய்வரோ - கடிந்து கூறுவரோ. இறை - அற்பம். முனிவரோ - கோபிப்பார்களோ. ]

விளையாடும் பிள்ளைகள் கரியைக் கொண்டு தரையில் கீறுகிறார்கள். அவர்கள் உருவமாக ஒன்றும் வரையவில்லை. ஏதேதோ கீறிக்கொண்டிருக்கிறார்கள்: அவ்வளவுதான். சில கீறல்களை வீடென்று நினைத்துக்கொள்கிறார்கள். வீட்டுக்கு அறையொன்று வேண்டாமா? அதற்கு ஒரு கீறல். வேறு சில கீறல்கள், கன்னபின்ன வென்று. அந்தக் கீறல்களுக்கு என்ன பெயர் கொடுக்கலாம்? வீட்டிலே நடன மண்டபமும் இருந்தால் எவ்வளவு அழகு! ஆம், ஆம்; அந்தக் கோடுகள்தான் நடனசாலை! அப்படியெல்லாம் படுகிறதாம் குழந்தைகள் மனத்திலே. நல்லது: சிற்பிகள் வந்து பார்க்கிறார்கள். 'ஓஹோ, சிற்ப இலக்கணத்தின்படி இது வீடில்லையே!' என்று கண்டிக்கிறார்களா? 'அப்படியே, ஞான

மில்லாத என்னுடைய புன் கவிதையையும் கண்டு கோபிக்க மாட்டார்கள் — கண்டனஞ் செய்யமாட்டார்கள் — இலக்கண இலக்கிய விற்பன்னர்கள்' என்கிறான்.

இந்த மகாகவியும் இவ்வளவு பெரும் பணிவோடு அவையடக்கம் சொல்லுகிறானே யென்று அதிசயிக்கிறோம். இவன் கொண்ட லட்சியத்திற்கு, இவன் கண்ட இராமாவதாரத்திற்கு, எவ்வளவு கவித்வ சக்தி யிருந்தாலும் போதும் என்ற திருப்தியாவது இறுமாப்பாவது ஏற்பட்டிருக்க முடியுமா? உள்ள படியே கொஞ்சம் தளர்வு தோன்றித்தான் இப்படி அவையடக்கம் சொல்லுகிறான்.

பாடப் பாடப் பொங்கி வருகிறது, கடல் போலே — கடலமுதம் போலே — கம்பராமாயணம் என்ற தெய்வமாக் கவிதை. மனத் தளர்வு மறைந்துபோகிறது. ஸம்பூர்ண - ராமன் அவதாரஞ் செய்கிறான் தமிழுலகத்திலே — தமிழிலே!

## 2. ஜீவ நதியும் ஜீவ வாக்கும்

மலையில் மேகம் படிகிறது. மழை பொழிகிறது. வெள்ளம் மலைச் சரிவுகளிலே புரண்டு ஆறாகச் சேர்ந்து, காட்டிலே பாய்கிறது; நாட்டிலே பெருகுகிறது; முடிவில், கடலோடு கலந்துவிடுகிறது. இது நதியின் கதை. எல்லாருக்கும் தெரிந்த இந்தக் கதையின் பலவேறு பகுதிகளையும் வருணித்த பிறகுதான் தமிழ்க் கவிகள் தாங்கள் பாட விரும்பும் கதைக்குள் பிரவேசிப்பது வழக்கம்.

இப்படி நீர்வளத்தை வருணித்த பிறகும் பளிச்சென்று கதைக்கு வந்துவிட மாட்டார்கள். நீர்வளத்திலிருந்து நிலவளம்: நாட்டின் செழிப்பை வருணித்துவிட்டு, நகரத்தின் சிறப்பை வெளியிடுவார்கள். அப்பால் அங்கே ஆட்சி செய்யும் அரசனுடைய மாட்சியைப் பாடுவார்கள் — பிராசம் பிசகாமல் — மோனை முறியாமல்.

இத்தகைய கவி மரபினை மேற்கொண்டே கம்பனும் தனது காவியத்தைத் தொடங்குகிறான். எனினும் முதலாவது படலமாகிய 'ஆற்றுப்படலத்'திலும் இவன் கவியுள்ளம் ஒருவாறு காணப்படுகிறது; அவ்வுள்ளத்திலே கனிந்த ஓர் உயர்ந்த தத்துவமும் இலைகளில் மறைந்திருக்கும் கனி போலக் காணப்படுகிறது.

மலைமேல் பரவியெழுந்து ஒன்றாகக் கூடிக் கறுக்கும் மேகங்களைப் பார்த்திருக்கிறீர்களா? கருங் கடலே அப்படி வானத்தில் கிளம்பி மலைக்கு மேலே வந்து கிடப்பது போலத் தோன்றும். அந்தத் தோற்றத்தைக் கம்பன் பல முறையும் பார்த்திருக்கவேண்டும். கண் முன் தோன்றிய காட்சி இப்போது கற்பனைக் கண்ணுக்கு முன் எப்படி வருகிறது, பாருங்கள்:

பம்பி மேகம் பரந்தது : ‘ பானுவால்
நம்பன் மாதுலன் வெம்மையை நண்ணினன் ;
அம்பின் ஆட்டுதும் ’ என்(று)அகல் குன்றின்மேல்
இம்பர் வாரி எழுந்தது போன்றதே.

[ பம்பி - நெருங்கி. பரந்தது - பரவியது. பானு - சூரியன். நம்பன் - ஆணில் சிறந்தவன். மாதுலன் - மாமன். நண்ணினன் - அடைந்தான். அம்பின் - நீரினல். ஆட்டுதும் - ஆட்டுவோம். இம்பர் - இவ்வுலகம். வாரி - கடல். ]

மலையிலே பிறந்து கடலிலே கலக்கும் நதிக்கு மலையைத் தந்தையாகவும் கடலைக் கணவனுகவும் வருணிப்பதுண்டு. எனவே கடலுக்கு மலை மாமன் முறை. ‘மாமா வெயிலில் தாப மடைந் திருக்கிருரே’ என்று பரிந்து மாப்பிள்ளை நீராட்டப் போகிருனம். மனைவி மேலுள்ள மோகத்தால் தந்தையைக் காட்டிலும் பெண்ணைக் கொடுத்த மாமனிடம் அதிகமான பிரியம் ஏற்படுவதும் உண்டல்லவா? இப்படிப்பட்ட மனித உணர்ச்சியை வைத்துக்கொண்டு, மலை மேல் நீருண்ட மேகங்கள் கூடி ஒரு சமுத்திரம் போலப் பரந்து காணும் காட்சியை வருணிப்பது எவ்வளவு ரஸமா யிருக்கிறது !

கார்காலத் தொடக்கத்தில் இப்படி நீலமாய் மாறி மலையிற் படிந்த மேகங்கள் கோடைக் காலத்தில் திருநீறணிந்த சிவபெருமான் போல் வெண்மையா யிருந்தனவென்றும், கடல் நீரை உண்டு திருமால் போல் திரும்பி வந்தனவென்றும் இதற்கு முன்னமே வருணித்து விட்டான். நெருப்பைப் போல் காய்ந்துகொண்டிருக்கும் கோடை வானத்திலுள்ள வெண்மேகத்திற்கு நெருப்புமயமான மேனி மறை யும்படி திருநீறு பூசியிருக்கும் சிவபெருமானை உபமானமாக்குவதும், கார்மேகங்கள் மின்னலோடு வருவதற்கு மின்னற் கொடி போன்ற திருமகளைத் திருமால் தம் மேனியில் தரித்திருப்பதை உபமான மாக்குவதும் எவ்வளவு பொருத்தமானவை!

நீர் பொழியாது செல்லும் வெண் மேகத்தை அழித்தற் கடவுளாகிய சிவபிரானுக்கு ஒப்பிடுவது, நிறத்தில் மாத்திர

மல்லாது தொழிலிலும் ஒருவாறு பொருத்தமுடையதே. அப்படியே கருமேகம் திருமாலின் நிறத்தோடு அவருடைய காத்தல்-தொழிலையும் ஞாபகப்படுத்துகிறது; அந்தத் தொழிலுக்கு இன்றியமையாத அருள்வடிவமான மகாலட்சுமியையும் ஞாபகப்படுத்துகிறது. மேலும் வெண்மேகமே கருமேகமாக மீண்டதால், உருவத்திலும் தொழிலிலும் வேறுபாடு தோன்றின போதிலும் அவை உண்மையில் ஒன்றே. அரனும் அரியும் தொழிலுக்கேற்ற உருவத்தோடு நடித்தபோதிலும், தன்மையில் வேறுபட்டுத் தனித்திருப்பதில்லை யென்ற உட்கருத்தும் இந்த உபமானத்திலே புதைந்து கிடக்கிறது. உலகத்திற்கு உயிர்நிலையாகிய மேகத்தைக் கொண்டு இந்தத் தத்துவத்தைக் குறிப்பிடுவது ரஸமா யிருக்கிறதல்லவா?

மழை பொழிவது வள்ளலை நினைப்பூட்டுகிறது. தன்னையே அடியவர்களுக்கு நல்கும் திருமாலை ஒத்த மேகங்கள் வள்ளல்களைப் போல் வழங்கின என்கிறார். 'உள்ளி, உள்ளவெலாம் உவந்து ஈயும் அவ்வள்ளியோரின் வழங்கின மேகமே.' வரையாது கொடுக்கும் வள்ளல்களின் தன்மையை 'உள்ளி, உள்ளவெலாம் உவந்து ஈயும்' தன்மையென்று விளக்குகிறான். உள்ளுவதென்றால், தான தருமங்களால் புண்ணியமும் சுவர்க்கமும் கிடைக்குமே யென்று நினைத்துப் பார்ப்பதன்று. 'அழியும் செல்வத்தைக் கொடுத்துவிட்டு அழிவில்லாத செல்வத்தை வாங்குவேன்!' என்பது வியாபாரியின் பேரம். 'இன்னும் என்னிடத்தில் என்ன இருக்கிறது?' என்று நினைத்து நினைத்துப் பார்த்து, மறந்தும் தனக்கென்று வைத்துக் கொள்ளாத மனநிலைதான் வள்ளலின் நிலை. தன்னிடத்திலிருந்து எடுத்துக் கொடுப்பதன்று; மேகம் போல் தன்னையே கரைத்துக் கொடுப்பது வண்மை — தியாகம்.

இத்தகைய வள்ளல்களைப் போல் வானம் பொழிய, அந்த வெள்ளம் சரயு நதியாக ஓடுகிறது:

# ஜீவ நதியும் ஜீவ வாக்கும்

இரவி தன்குலத்(து) எண்ணில்பல் வேந்தர்தம்
பரவு நல்லொழுக் கின்படி பூண்டது
சரயு என்பது, தாய்முலை அன்ன(து)இவ்
உரவு நீர்நிலத்(து) ஓங்கும் உயிர்க்கெலாம்.

[ இரவி - சூரியன். பரவு - புகழ்தற்குரிய. படி - வடிவம். உரவு நீர் - உலாவும் தன்மையுள்ள கடல். நிலம் - கோசல நாடு. ]

சரயு ஜீவநதி — என்றும் இடை வற்றாமல் ஓடுகிறது. அதற்கு அந்த நதி பாயும் கோசலநாட்டு மன்னர்களின் நல்லொழுக்கம் உபமானமாகிறது. பிரசித்திபெற்ற சூரிய குலத்தைச் சேர்ந்த அந்த அரசர்கள் ஒருவர் பின் ஒருவராக நெடுங்காலமாய் ஆண்டு வருகிறார்களாம். அவர்களுடைய வம்சப் பிரவாகம் இடைவற்றாம லிருக்கிறது : ஒழுக்கமும் அப்படியே இடையறாது பெருகி வந்திருக் கிறது — என்பதை நதியை வருணிக்கும்போதே ஞாபகப்படுத்தி விடுகிறான். இப்படிப்பட்ட அரசர்கள் ஆளும் இராஜ்யத்தை வளஞ் செய்து அழகு செய்யும் ஜீவ நதி பாலூட்டிச் சீராட்டிக் குழந்தைகளை வளர்க்கும் தாயை ஞாபகப்படுத்துகிறது. 'சரயு என்பது தாய் முலை அன்னது' — எவ்வளவு சிறந்த உவமை!

சரயு வெள்ளம் மேடுகளைப் பள்ளமாக்கிக்கொண்டும், பள்ளங் களை மேடாக்கிக்கொண்டும் ஓடுகிறது.

முல்லையைக் குறிஞ்சி யாக்கி, மருதத்தை முல்லை ஆக்கிப்
புல்லிய நெய்தல் தன்னைப் பொருவறு மருத மாக்கி,
எல்லையில் பொருள்க ளெல்லாம் இடைதடு மாறு நீரால்,
செல்லுறு கதியிற் செல்லும் வினையெனச் சென்ற தன்றே.

[ முல்லை - காடும், காடு சார்ந்த நிலமும். குறிஞ்சி - மலையும், மலை சார்ந்த நிலமும். மருதம் - வயலும், வயல் சூழ்ந்த இடமும். புல்லிய - அற்பப் பயனைத் தருகிற. நெய்தல் - கடலும், கடல் சார்ந்த இடமும். பொருவறு - நிகரற்ற. நீரால் - தன்மையினால். அன்றே - ஈற்றசை. ]

என்று இந்த ஆற்று வெள்ளத்திற்கு 'வினை' அல்லது விதியின் விசித்திர கதியை ஒப்பிடுகிறார்.

காரண - காரிய வெள்ளமாகிய விதியையும் கடந்து, தமது வினையையும் சமுதாய வினையையும் தமது நல் விருப்பத்திற்கு இணங்க நிர்மாணஞ் செய்து முடிக்கவல்ல பேராண்மையும் பேராற்றலும் வாய்ந்தவர்களைப் பெரு வீரரென்றும் அவதார மூர்த்திகளென்றும் உலகம் போற்றுகிறது. இத்தகைய வீரமூர்த்தி களில் தலைசிறந்தவன் இராமன் என்பது கம்பன் கொள்கை. இத் தெய்வ வீரர்களின் வழிபாட்டைப் பல வேறு சமயங்களும் பல வித மாக வற்புறுத்தி வருகின்றன.

எனவே, பல பெருஞ் சமயங்களிலும் ஒருவித ஒற்றுமை காணப் படுகிறது. 'ஆற்றுப் படலத்'தின் தொடக்கத்தில் கம்பனுள்ளத்திலே தோன்றிய சமரச உணர்வு, பெருக்கெடுத்தோடும் சரயுவோடு பொங்கிப் பரந்து வருகிறது :

**கல்லிடைப் பிறந்து போந்து கடலிடைக் கலந்த நீத்தம்,**
**எல்லையில் மறைக ளாலும் இயம்பரும் பொருள்ஈ தென்னத்**
**தொல்லையில் ஒன்றே யாகித் துறைதொறும் பரந்த சூழ்ச்சிப்**
**பல்பெருஞ் சமயம் சொல்லும் பொருளும்போல் பரந்த தன்றே.**

[ கல் - மலை. நீத்தம் - வெள்ளம். இயம்பரு - சொல்லுதற்கு அருமையான. தொல்லை - ஆதி. ]

இச்செய்யுள் கம்பனது சர்வ சமய சமரச உணர்வினை எவ்வளவு நன்றாக வெளியிடுகிறது !

மலையிடைப் பிறந்து கடலிடைக் கலந்த சரயு ஆதியில் ஒன்றாகவே யிருந்தும், ஏரி குளம் முதலிய இடங்களிலெல்லாம் பல படியாகப் பரவிப் பல பெயரோடு வழங்கலாயிற்று. அனந்தமான வேதங்களாலும் அளவிட்டுரைத்தற்கு அருமையான உண்மைப் பொருளும் ஒன்றேயாகி, பல சமயங்களும் 'என் தெய்வம்! என் தெய்வம்!' என்று வழக்கிடும்படி எங்கும் வியாபித்திருக்கிறது. ஆற்று வெள்ளம் ஒன்றே; துறைகள் பல. ஞானானந்த வெள்ளமாகிய பரம்பொருளும் ஒன்றே; எனினும் சமயங்களாகிய

துறைகள் பல. திருமால் சிவபிரான் முதலிய பெயர்களும், வடிவுகளும், குறிகளும், கோயில்களும் பரம்பொருளுண்மையை மக்கள் உணர்ந்து உய்யுமாறு பல பெருஞ் சமயத்து நல்லறிஞர் செய்து வைத்த 'சூழ்ச்சி'களே.

சமய உணர்ச்சி மக்களைச் சன்மார்க்க நெறியில் சேர்ப்பதற்கு இன்றியமையாதது. ஆனால் சமய உணர்ச்சி மதவெறியாக மாறுவது சன்மார்க்க நாசத்திற்கே ஏதுவாகும். எனவே, பல துறைகளையும் அடைந்து பெருகி வரும் சரயு வெள்ளத்தின் வாயிலாகக் கவிஞன் நமக்குச் சர்வ சமய சமரச நன்னிலையை நன்கு வெளியிடுகிறான். இக் கொள்கை இவ்வுலகிலுள்ள பெருஞ் சமயங்களிலெல்லாம் இந்து சமயத்திற்கே சிறப்பாக உரியதென்று கருதுதல் கூடும்.

இந்தச் செய்யுளை அடுத்து வரும் செய்யுள் ஆற்றுப் படலத்தின் இறுதிப் பாட்டு. இந்தப் பாட்டிலே கம்பன் தனது சர்வ சமய சமரச சன்மார்க்கத்தின் உறுதியான, உயிர்நிலையான, அடிப்படையான தத்துவத்தை எவ்வளவு அழகாக அமைத்திருக்கிறான், பாருங்கள் :

**தாதுகு சோலை தோறும் சண்பகக் காடு தோறும்**
**போதவிழ் பொய்கை தோறும் புதுமணத் தடங்கள் தோறும்**
**மாதவி வேலிப் பூக வனந்தொறும் வயல்கள் தோறும்,**
**ஓதிய உடம்பு தோறும் உயிரென உலாய தன்றே.**

[ தாது - மகரந்தத் தூள். உகு - சிந்துகிற. போது - அரும்பு. அவிழ் - விரிகிற. பொய்கை - இயற்கையாய் உண்டான நீர்நிலை, தடங்கள் - தடாகங்கள். மாதவி - ஒருவகையான குருக்கத்தி. பூகம் - கமுகு. ]

பச்சைப் பசேலெனத் தழைத்திருக்கும் சோலைகள் தோறும், வனங்கள் தோறும், பலவகையான நீர்நிலைகள் தோறும், தோட்டங்கள் தோறும், வயல்கள் தோறும் சரயு நதி உலாவி வருகிறது. கோசல நாடு பசுஞ் சோலைகளாலும், காடு காடாய்ச் செழித்துக் கிடக்கும் புஷ்ப வனங்களாலும், வயல்கள் தோட்டங்கள்

தடாகங்கள் முதலியவற்றுலும் நிறைந்து பொலிகிறது. இத்தகைய பலவேறு வளங்களுக்கும் அழகுகளுக்கும் உயிர்நிலை சரயு ஒன்றே. எனவே இந்த நதி பல வேறு உடம்புகளிலும் பரந்து உலாவும் ஒருயிரை நினைப்பூட்டுகிறது.

இந்த ஒருயிரே இறைவனுயிர் — பரம்பொருள். பரம்பொருள் ஒன்றே, உலகம் யாவையும் உடம்பாகக் கொண்டு உலாவுகிறது; உயிர்க்குயிராகி உயிர்களையெல்லாம் ஒன்றுக இணைக்கிறது. இத்தகைய பந்தமே சகோதர பந்தம். 'கோத்தகால் ஒன்றினென்று குலமெனப் பிரிந்த தன்றே' என்றபடி பல வாய்க்கால்களில் பிரிகிறது சரயுவெள்ளம். நீளச் சென்று ஒரு கால்வாயிலிருந்து மற்றொரு கால்வாயாக, குலம் பல கிளைகளாய்ப் பிரிவது போல், சரயுவும் பிரிந்து போகிறதென்கிறுன். சச்சிதானந்த வெள்ளமாகிய இறையுயிரும் தன்னிலே தொடர்ந்து கிளைத்தெழுந்த பல வேறு குலங்களாய்ப் பிரிந்து காண்கிறது. சரயு ஒன்றே பல கால்களால் ஓடுகிறது. உயிர்க் குலமும் ஒன்றே; அது பல வேறு குலங்களாய்ப் பெருகுகிறது. இவ்வுண்மை யுணர்ச்சியே சகோதர தர்மமாக விளைய முடியும். இவ்வுணர்ச்சியும் ஒழுக்கமும் ஆன்ம நேய ஒருமைப்பாடாகிய சகோதர தர்மத்தின் உறுதியான அடிப்படை.

சகோதர தர்மம் அதிசூட்சுமமான ஓர் இயற்கை விதி. இத்தகைய தர்மத்தை மீறுவது, எங்கும் கரந்து பரந்துள்ள இறைவனுக்கே துரோகம் செய்வது. இச்சகோதர தர்மத்தை மக்களிடையே வளர்க்கும் எண்ணம், விருப்பம், சொல், செயல் ஆகிய இவையெல்லாம் புண்ணியம். இத்தருமத்தைச் சிதைக்கும் எண்ணம், விருப்பம், சொல், செயல் ஆகிய இவையெல்லாம் பாவம். இவ்வாறு உணர்ந்து ஒழுகுவது நல்லொழுக்கம். நல்லொழுக்கத்தின் சிகரம் வள்ளன்மை அல்லது தியாகம். இவ்வுண்மைகளை நேரடியாக உபதேசித்தால் கவிதை யாகாதென்று, ஆறு செய்யும் உபதேசமாக்குகிறுன்.

## ஜீவ நதியும் ஜீவ வாக்கும்

பொதுவாகச் சூரிய குலத்தரசர்களின் குண விசேஷங்களையும், சிறப்பாக இராமனது குணாதிசயத்தையும் நினைக்கும்போது, சரயுவின் உபதேசம் நமக்கு இனிது புலப்படுகிறது. நல்லொழுக்கம் இராமனது முன்னோரான அரசர்களிடையே ஆறு போல் பரம்பரையாகப் பெருகி வந்து கடலிடைக் கலப்பது போல் இராமனோடு கலந்து பொங்குகிறது.

சுருங்கக் கூறுமிடத்து, எங்கும் மறைந்து பரந்து கிடக்கும் ஒருயிர் - உண்மையினை உணர்ந்து, சர்வ ஜாதீய சர்வ சமய சமரச நன்னிலையாகிய சகோதர தர்ம ஒழுக்கத்தையே சன்மார்க்க நோன்பாகக் கொண்டு, கர்ம வீரனாகவும் தியாக மூர்த்தியாகவும் விளங்குவது மக்கட் குல மாட்சிக்குரிய உன்னத லட்சியமாகும். இது இராமாயணம் வளர்க்கும் இந்து தர்மம். இராம ராஜ்யத்தை அழகு செய்யும் ஜீவநதியின் ஜீவ வாக்காக முழங்கும் இப்பேருண்மையைக் கம்பராமாயணத்தின் ஜீவ நாதமாகவும் அடிப்படை யுண்மையாகவும் மதிக்கக்கூடும்.

இவ்வுண்மையினை முற்றும் உணர்ந்து, உலகத்திற்கு வழி காட்டியாக ஒழுகும் புருஷோத்தமன் காவிய நாயகனாகிய இராமன். இவ்வுண்மையைச் சொல்லிலும் செயலிலும் மறுப்பவன் இராவணன். எனவே இராமன் லோக - ராமனாக — உலகத்தை மகிழ்விக்கும் இஷ்ட தெய்வமாக — நம் கண்முன் வருகிறான். இராவணனோ லோக - ராவணனாக — உலகத்தை இருள்வித்துக் கதறச் செய்யும் இராட்சஸ அரசனாகச் — சித்திரிக்கப்படுகிறான்.

ஆற்று வெள்ளத்தோடு பொங்கி வருகிறது கம்பனுக்குச் சிந்தனை - வெள்ளம். மேகம், மழை, வெள்ளம், ஆறு, கால்வாய், கடல், — மறுபடியும் மேகம், மழை......இந்தக் கதை கவிஞனுக்குச் செய்யும் உபதேசம் எவ்வளவு அதிசயமானது! எனினும் எவ்வளவு இயற்கையானது! ஒரு சமயம் இந்த அரும்பொருள் வெளிப்படையாகத் தோன்றுகிறது. ஒரு சமயம் முத்துக் குளிப்பது போல் ஆழத்திலே முழுகிப் பார்க்க வேண்டியிருக்கிறது.

## 3. கோசலம் என்னும் கனவு

அந்திவானம் எத்தனை இந்திரஜாலங்களைக் காட்டுகிறது! ஒரு சமயம் போர்க்களம் போல் சிவந்து காண்கிறது. பிறகு விபரீத இராட்சஸ உருவங்களும் மாயப் போர்களும் மறைந்துவிடுகின்றன. இப்போது வர்ணக் களஞ்சியங்களெல்லாம் கருங்கடலில் கரைந்து போகின்றன. திசைகளை இருள் போர்த்துவிடுகிறது.

கருந் திரையை விலக்கிக்கொண்டு முகங் காட்டும் நட்சத்திர - மாதர்கள் அந்தரத்திலே நடனஞ் செய்துகொண்டு, ஏதோ ஓர் அரிய இரகசியத்தை வெளியிட விரும்புவது போல் நமது கவிஞனைக் கண் சிமிட்டி அழைக்கிறார்கள். தென்றல் மிருதுவாக மூச்சு விடுகிறது.

ஆ, ஆ! என்ன! அதிசயம்! வயல்களின் வரப்புக்களிலெல்லாம் முத்துக்கள்; வாய்க்கால்களின் கரைகளிலெல்லாம் தங்கக் கட்டிகள்; பரம்படித்துச் சமமாக்கிய இடங்களிலெல்லாம் பவழங்கள். தண்ணீர் தத்திப் பாயும் மதகுகளிலெல்லாம் சங்குகள்: செந்நெற் பயிரோடு அன்னப் பறவைகள். கரும்பெல்லாம் செந்தேன்; சோலைகளிலெல்லாம் வண்டுகள். தேனிலேதான் எத்தனை வகை!

ஆலைவாய்க் கரும்பின் தேனும், அரிதலைப் பாளைத் தேனும்,
சோலைவாய்க் கனியின் தேனும், தொடையிழி இறலின் தேனும்,
மாலைவாய் உகுத்த தேனும், வரம்பிகந்(து) ஓடி வங்க
வேலைவாய் மடுப்ப, நுங்கி மீனெலாம் களிக்கும் மாதோ.

[ ஆலைவாய் - கரும்பாலைகளில். மாலை - பூமாலை. இகந்து - கடந்து. வங்கம் - அலை. வேலை - சமுத்திரம். மடுப்ப - நிறைக்க. நுங்கி - விழுங்கி. ]

இத்தேனாறுகள் போய் விழுவதால், உவர்க்கடலும் தேன்கடலாகிறது. 'இதுவோ சோழநாடு!' என்று கவிஞன் பிரமிக்கிறான்.

## கோசலம் என்னும் கனவு

வயல்களுக்கிடையே ஒரு காட்சி. அன்னப் பறவைகள் தங்கள் அருமைக் குழந்தைகளான இளங் குஞ்சுகளை மலர்ப் படுக்கையிலே கிடத்துகின்றன. அருகே வந்த எருமைகள் ஊரிலே விட்டுவந்த கன்றுகளை நினைத்துக் கனைக்கின்றன. அப்பொழுது தாரையாகச் சொரியும் பால் அன்னக் குஞ்சுகளுக்கு உணவாகிறது. பிறகு அக்குஞ்சுகள் இனிது துயிலுமாறு பச்சைத் தவளைகள் தாலாட்டுப் பாடுகின்றன.

சேலுண்ட ஒண்க ணாரில் திரிகின்ற செங்கா லன்னம்
மாலுண்ட நளினப் பள்ளி வளர்த்திய மழலைப் பிள்ளை,
காலுண்ட சேற்று மேதி கன்(று)உள்ளிக் கனைப்பச் சோர்ந்த
பாலுண்டு துயிலப் பச்சைத் தேரைதா லாட்டும் பண்ணை.

[ சேலுண்ட - சேல்மீனை ஒத்த. ஒண்கணாரில் - ஒளி பொருந்திய கண்களையுடைய பெண்கள் போல். மாலுண்ட - பெருமை பொருந்திய. நளினம் - தாமரை மலர். வளர்த்திய - கிடத்திய. காலுண்ட - காலிற்பட்ட. மேதி - எருமை. உள்ளி - நினைத்து. சோர்ந்த - (தானே) வடிந்த, பண்ணை - வயல்கள். ]

இந்தக் காட்சியைக் கண்டதும், 'இப்படியும் ஒரு சமுதாயமா ? ஊரார் பிள்ளையை ஊட்டி வளர்த்தால், தன் பிள்ளை தானே வளரும்' என்று கவிஞன் தனக்குள் தானே சொல்லிக்கொள்ளுகிறான்.

ஒரு பசுஞ் சோலையில் இரண்டு காட்சிகள். ஒரு புறம் மயில்கள் ஆடக் குயிற்காதலர் பச்சை மரக் கிளைகளிலே புதுமணஞ் செய்கின்றனர். ஒரு புறம் ஓர் அரச அன்னம் (ராஜ ஹம்ஸம்) தன் மலர்ப் படுக்கையிலிருந்து துயிலெழுமாறு வண்டுகள் பண்பாடுகின்றன:

குயிலினம் வதுவை செய்யக் கொம்பிடைக் குனிக்கும் மஞ்ஞை,
அயில்விழி மகளி ராடும் அரங்கினுக்(கு) அழகு செய்யப்
பயில்சிறை அரச அன்னம் பன்மலர்ப் பள்ளி நின்றும்
துயிலெழத் தும்பி காலைச் செவ்வழி முரல்வ சோலை.

[ வதுவை - மணம். கொம்பு - மரக் கிளை. குனிக்கும் - ஆடும். மஞ்ஞை - மயில். அயில் - வேல். பயில் - நெருங்கிய. சிறை - சிறகு. தும்பி - வண்டு. செவ்வழி - காலையில் பாடும் பண். ]

சோலையில் வேறொரு காட்சி. மயில்கள் தோகை விரித்து நாட்டியப் பெண்கள் போல் நடனம் பயிலுகின்றன. அப்பொழுது செந்தாமரை-மாதர் பொன் விளக்கு ஏந்துகிறார். மேகங்கள் மத்தளம் கொட்டுகின்றன. வண்டுகள் வீணகானம் செய்கின்றன. நீல மலர்கள் ஆச்சரியமாய்க் கண் விழித்து நோக்குகின்றன. அந்த நடனக் கச்சேரியைப் பார்த்துக்கொண்டு, அந்தச் சோலையே கொலு மண்டபமாகக் கம்பீரமாய் வீற்றிருக்கிறாள் ஒரு மகாராணி. அந்தக் காட்சியைத் தடாகத்தில் தோன்றும் அலைகள் திரையிட்டு மறைப்பதும் வெளிக் காட்டுவதுமா யிருக்கின்றன. 'அவளே இந்த நாட்டின் அதிதேவதை' என்று கம்பன் ஊகிக்கிறான் :

தண்டலை மயில்கள் ஆடத் தாமரை விளக்கம் தாங்கக்
கொண்டல்கள் முழவின் ஏங்கக் குவளைகண் விழித்து நோக்கத்
தெண்டிரை எழினி காட்டத் தேம்பிழி மகர யாழின்
வண்டுகள் இனிது பாட, மருதம்வீற் றிருக்கும் மாதோ.

[ தண்டலை - சோலையில். விளக்கம் - விளக்கு. கொண்டல் - மேகம். முழவு - மத்தளம். ஏங்க - ஒலிக்க. தெண்டிரை - தெண் திரை - தெளிந்த நீரலைகள். எழினி - திரைச் சீலை. தேம்பிழி - இனிய தேன். யாழின் - யாழின் இசைகள் போல. மருதம் - வயல்களும், வயல் சூழ்ந்த இடமும். ]

நாடு முழுமையும் அமைதி நிலவுகிறது. ஆனால் இந்த அமைதி ஜீவ சக்தியின் நிறைவேயாகும். உறங்குவது போல அமைதியில் மூழ்கிக் கிடக்கும் இந்நாடு உண்மையில் உயிர்ச் சக்தி நிறைந்து ததும்பும் விழிப்பு நிலையிலேதான் இருக்கிறது.

இத்தகைய நாட்டிலே, இப்பொழுதுதான் உறக்கத்திலிருந்து விழித்தெழுந்து தமது கருங் கண்களால் கவிஞனை நோக்கும் பெண் மணிகள் காட்சி தருகிறார்கள். இவர்கள் எவ்வாறு துயிலுணர்ந்து எழுகின்றார்! பாருங்கள் :

## கோசலம் என்னும் கனவு

தெள்விளிச் சிறுயாழ்ப் பாணர் தேம்பிழி நறவம் மாந்தி
வள்விசிக் கருவி பம்ப வயின்வயின் வழங்கு பாடல்,
வெள்ளிவெண் மாடத்(து) உம்பர் வெயில்விரி பசும்பொற் பள்ளி
எள்ளருங் கருங்கண் - தோகை இன்துயில் எழுப்பு மன்றே.

[ தெள்விளி - தெளிவான இசை. நறவம் - கள். மாந்தி - குடித்து. வள்விசிக் கருவி - வாரினல் கட்டிய மத்தளம். பம்ப - ஒலிக்க. வயின் வயின் - அந்த அந்த இடங்களில். மாடம் - மாளிகை. உம்பர் - மேலிடம். எள்ளரு - புறக்கணித்தற்கரிய கண்கள். தோகை - மயில் போலும் சாயல் உள்ள மகளிர். ]

மயில் போலும் சாயலுள்ள பெண்மணிகள், வெள்ளி போல் வெண்ணிறமான மாடத்தின் மேல் பசும்பொற் கட்டில்களின்மீது சுகமாகப் படுத்து உறங்குகிருர்கள். அதிகாலையில் பாணர்கள் யாழ் கொண்டு பாடும் இன்னிசைப் பாடல்களைக் கேட்டு விழித்துக் கொள்ளுகிருர்கள். உயிரை உருக்கும் அமுதப் பாடல்களைக் கேட்டுக்கொண்டே அவர்கள் உறங்குவார்களென்றும் ஊகித்துக் கொள்ளலாம். என்ன அழகான வழக்கம் ! ஆனந்தமான காலை வேளை யில் ஆனந்தமான இசைத்தேன் பருகி எழும் இம்மாதரது தினசரி வாழ்க்கை எவ்வளவு அழகா யிருக்கவேண்டும்!

இப்பெண்மணிகளின் கருங் கண்களிலே அழகுகளெல்லாம் செறிந்து கிடக்கின்றன. அறிவு குதிகொள்ளும் கண்கள் — கவிதை மிதக்கும் கண்கள்! ஆனந்த ஊற்று — ஆத்ம சக்தியின் பலகணி — நெறியின் புறத்தே செல்லாத அம்பு! ‘இதுதானே என்னைப் போன்ற கவிஞர்கள் தேடித் தவிக்கும் ஆனந்த நாடு?’ என்று கவிஞன் கேட்கிருன். ‘இதுதான் கோசல நாடு; நீ சிருஷ் டித்துக்கொண்டிருக்கும் இராம ராஜ்யம்!’ என்று ஆகாயவாணி சொல்லுகிருள்.

இந்த இராஜ்யத்திலுள்ள பெண்களின் கண்கள் பரிசுத்தம் வாய்ந்த அவர்களது உள்ளத்தின் புற வாசலாகக் காண்கின்றன. இப்பெண்கள் தங்கள் இயற்கையான அகத் தூய்மையைச்

செயற்கையான கல்விப் பயிற்சியால் விசேஷமாய்ப் பண்படுத்தி அபிவிருத்தி செய்துகொள்ளுகிறார்கள். இதனால் அந்த இராஜ்யம் ஓர் அறிவுக் கோயிலாகத் தழைக்கிறது.

பெருந்த டங்கண் - பிறைநுத லார்க்கெலாம்
பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்,
வருந்தி வந்தவர்க்(கு) ஈதலும் வைகலும்
விருந்தும் அன்றி விளைவன யாவையே?

[ நுதல் - நெற்றி. வைகலும் - தினந்தோறும். ]

எங்கே பார்த்தாலும் அறிவுக் கண்கள், அழகுக் கண்கள், ஆனந்தக் கண்கள், அறம் வளர்க்கும் கண்கள். இப்பெண்களுக்கு அறிவுத் துறையில் சுதந்திரம் இருப்பது போல், பொருளாதார நிலையிலும் சுதந்திரம் இருக்கிறதாம். நிலத்தின் தன்மை பயிர்க்கும் உண்டு. சுதந்திர மங்கையர் சுதந்திர மக்களை நாட்டிற்கு அளிக்கிறார். ‘ தாயைப் போலே பிள்ளை ; நூலைப் போலே சேலை ’.

ஆம், தாயின் சக்தி அபாரமானது. எவ்வளவு தியாகம் வெளிப்படுகிறது, — எவ்வளவு தெய்வத்தன்மை மறைந்திருக்கிறது, — தாய்வடிவத்திலே! குழந்தைக்குப் பாலூட்டும் தாய், உயிர்களையெல்லாம் ஊட்டி வளர்க்கும் லோகமாதாவின் பிரதிபிம்பம். பாலூட்டும் போதே ஞானப்பாலையும் ஊட்டக் கூடியவள். பாலோடு பாலாய்ச் சுதந்திர உணர்வையும் உயர்ந்த இலட்சியங்களையும் ஊட்டக் கூடியவள். இத்தகைய தாய்மார் இராம ராஜ்யத்தை உருவாக்குகிறார்கள்.

தாலி ஐம்படை தழுவு மார்பிடை
மாலை வாயமு(து) ஒழுகு மக்களைப்
பாலின் ஊட்டுவார் செங்கை, பங்கயம்
வாளி லாவுறக் குவிவ மானுமே.

[ தாலி ஐம்படை - ஐம்படைத் தாலி : திருமாலின் பஞ்சாயுதங்களின் வடிவமாக அமைத்துப் பிள்ளைகளுக்குக் காப்பாக இந்தத் தாலியை

அணிவதுண்டு. மாலே - ஒழுங்கு. பங்கயம் - தாமரை. வானிலா - வானத்தி லிருந்து வீசும் வெண்ணிலா. மானும் - ஒத்திருக்கும். ]

என்று தாய்மார் குழந்தைக்குப் பால் கொடுக்கும் காட்சியை வருணிக்கிருன். முகத்திலே அன்பும் கருணேயும் இன்பமும் ததும்பத் தாயின் கை, குழந்தையின் தலையை அணேத்துக்கொண்டு, வெண் ணிலாவில் குவிந்திருக்கும் தாமரைப் பூவைப் போல் குவிந்திருக் கிறதாம்.

இப்படியெல்லாம் சிந்தனே செய்யும் கவிஞன், அப்பெண் மக்களின் 'பெருந் தடங்கண்'களிலே வேருெரு விசேஷத்தையும் காண்கிருன். அக்கண்கள் அறிவுநூல்களாகவும் அழகுநூல்களாகவும் அமைந்து, 'கலேதெரி கழக'ங்களில் காலங் கழிக்கும் ஆண் மக்களுக்கும் அறிவை ஊட்டுகின்றனவாம்:

பந்தினே இளேயவர் பயிலிடம், மயிலூர்
கந்தனே அனேயவர் கலேதெரி கழகம்:
சந்தன வனம்அல, சண்பக வனமாம்;
நந்தன வனம்அல, நறைவிரி புறவம்.

[ இளேயவர் - இளேய மங்கையர். ஊர் - ஊர்ந்து செல்லுகிற. நறை - தேன். புறவம் - காடு; முல்லேக் கொடி. ]

சந்தனச் சோலேகளிலும் சண்பகக் காடுகளிலும் நந்தவனங் களிலும் வேறு பல மலர்வனங்களிலும், 'கலேதெரி கழக'ங்கள் இயற்கைப் பேரழகுகளுக்கு இடையே அமைந்துள்ளன. இவ்விடங்கள், பைங்கிளிகள் போலப் பறந்து திரியும் பெண்மணிகள் அங்கும் இங்கும் ஓடி யாடிப் பந்து பயிலும் இடங்களாகவும் அமைந் துள்ளன. எனவே, அழகுக் கலேகள் பயிலும் ஆடவர்கள் ஏடுகளி லிருந்து படித்தறிவதைக் காட்டிலும் அதிக அளவில் இப்பெண்மணி களின் கண்களிலிருந்தே அருங் கலேகளேயும் தெரிந்துகொள்ளுகிருர் களாம். அறிவுக் கோயில் அழகுக் கோயிலாகவும் இருக்கிறது.

'இப்பெண்களின் வதனம் பூர்ண சந்திரனையும் பழிக்கிறது; விழிச் சுடரோ விதியையும் இகழ்கிறது!' என்று அழகுக் கலைஞரான ஆடவர் கருதுகிறார். குற்றமில்லாத இடத்தில் விதி ஏது? கூற்றம்தான் ஏது?

இத்தகைய நாட்டைக் கம்பன் படம் பிடித்துக்கொள்ள விரும்பினன். பெரிதும் சிறிதுமான பல படங்களைப் பிடித்துக் கொண்டான். இவன் பிடித்துள்ள சின்னஞ் சிறு படங்களில் ஒன்று:

கூற்றம் இல்லைஓர் குற்றம்இ லாமையால்;
சீற்றம் இல்லைதம் சிந்தையிற் செம்மையால்;
ஆற்ற நல்லறம் அல்ல திலாமையால்
ஏற்றம் அல்ல(து) இழித்தக வில்லையே.

[ கூற்றம் - அகால மரணம். ஆற்ற - செய்ய. இழித்தகவு - இழிவு. ]

அறிவுக் கோயில் — அழகுக் கோயில் — அறக் கோயிலாகவும் இருக்கிறது. இந்நாட்டில் குற்றம் இல்லாமையால் கூற்றமும் இல்லை. இந்நாட்டவர் தங்கள் மனத்தைச் செம்மையாகப் பண்படுத்திக் கொண்டேயிருப்பதால், அவர்களது உள்ளத்தில் கோபம் முதலிய தீய குணங்கள் தோன்றுவதில்லை. அவர்கள் எப்பொழுதும் நல்ல அறச் செயல்களிலேயே ஈடுபட்டிருப்பதால், நாடு முன்னேற்ற மடைந்துகொண்டேயிருக்கிறது. 'அறத்தின் மூர்த்தி வந்து அவதரி'க்க வேண்டிய அறப் பெருங் கோயிலல்லவா?

பொற்பில் நின்றன பொலிவு; பொய்யிலா
நிற்பில் நின்றன நீதி; மாதரார்
அற்பில் நின்றன அறங்கள்; அன்னவர்
கற்பில் நின்றன கால மாரியே.

[ பொற்பு - குண அழகு. பொலிவு - உருவ அழகு. அற்பு - அன்பு. ]

என்ற அடிகளில் கம்பன் பிடித்துள்ள வேறொரு படம் புலனுகிறது. கோசல நாட்டில் ரூப சௌந்தரியம் (புற அழகு) குண

சௌந்தரியத்திலே (அக அழகிலே) வேரூன்றி வளர்கின்றது. நீதி பரிபாலனம் சத்தியமாகிய நிலையிலே நிலைபெறுகின்றது. அறப் பெருங் கோயிலாகிய இந்நாட்டின் அஸ்திவாரம் கலா சுந்தரிகளான பெண்களின் ஆழ்ந்து அகன்ற பேரன்பிலே நிலைபெற்றிருக்கக் காண்கிறோம்.

'நாமுதற் படுவ மெய்யும் நாமநூற் பொருளும் மன்னோ' என்ற செய்யுளடியில் கோசல நாட்டின் வேறொரு சிறு படத்தைப் பார்க்கிறோம். இந்த நாட்டிலுள்ளவர்கள் நாவை உண்மை உரைப் பதற்காகவும், சிறந்த நூல்களைப் பயில்வதற்காகவுமே உபயோகித்துக் கொள்ளுகிறார்களாம்.

கோசல நாட்டின் உண்மை நிலையையும் கலா சௌந்தரியத்தை யும் வியந்து நோக்கும் கவிஞன் தான் கண்ட அற்புத நாட்டை ஓர் அரும் பெருஞ் சித்திரமாகத் தமிழ் மக்களுக்கு எழுதிக் காட்ட வேண்டுமென்று உறுதி கொள்ளுகிறான்..........

கம்பன் விழித்துக்கொண்டான். கோசல நாடு மறைந்து, தாய் நாடாகிய சோழ வளநாடு மீண்டும் கட்புலனாயிற்று. அருகே ஆருயிர்த் தோழரான சடையப்பர் நின்றுகொண்டிருந்தார். கவிஞன் தான் கண்ட கனவை வள்ளலுக்குக் கூறினான். 'இது சாதாரணமான கனவு அன்று. நீர் கண்டது பழைய கோசல நாடுமன்று: ஒரு புதிய சமுதாயம் — எதிர்கால உலகம்!' என்று சடையப்பர் சொன்னார்.

அப்பொழுது கவிஞன் வள்ளலை நோக்கிக் குறும்பாகச் சிரித்துக் கொண்டு, 'நான் கண்ட எதிர்கால உலகத்தில் நமது மகாராஜாவாகிய ஆதித்த ராஜகேசரியைப் போன்ற வீரர்களுமில்லை; அவனது முன்னோருள் ஒருவனாயிருந்த அரிச்சந்திரனைப்போன்ற "உண்மைக்கு ஒருவ" னுமில்லை; உம்மைப் போன்ற வள்ளல்களுமில்லை!' என்று கூறினான்.

வள்ளலும் வெட்கமடைந்து இளநகை அரும்பி, 'கவிச்சக்கர வர்த்தியே! உம்மைப்போன்ற மேதாவிகளும் அங்கே இல்லையோ?' என்று கேட்டார். உடனே கம்பனும்,

'வண்மை யில்லையோர் வறுமை யின்மையால்;
திண்மை யில்லைநேர் செறுநர் இன்மையால்;
உண்மை யில்லைபொய் உரையி லாமையால்;
ஒண்மை யில்லைபல் கேள்வி ஓங்கலால்'

[ திண்மை - வலிமை. நேர் செறுநர் - எதிர்த்துப் போர் செய்யும் பகைவர். ஒண்மை - மிகுதியான நல்லறிவு. ]

என்று பாடினன்.

'வண்மை' என்பது, ஒரு கைக்குக் கீழே தாழ்ந்திருக்கும் 'தரித்திரக்' கைகள் இரண்டு உண்டு என்பதை வற்புறுத்திக் காட்டுகிறது. 'திண்மை' வாய்ந்த வல்லரசு, எதிர்ப்பு அல்லது பகைமை யுணர்ச்சியை வெளிப்பட முடியாதபடி அடக்கிக் காட்டு கிறது. 'உண்மைக்கு ஒருவன்' பிறரை யெல்லாம் பொய்ய ராகக் காட்டுகிறுன். மேதாவி யென்பவன் பலரையும் கல்வி கேள்வி யற்ற பாமரர்களாகக் காட்டுகிறுன். எனவே, கம்பன் கண்ட கனவு - லோகம் வேறு விதமாக அமைந்திருந்தது. அங்கே வறுமை இல்லாத தால் வண்மையும் இல்லை; பகைவர் இல்லாததால் பராக்கிரமமும் இல்லை; பொய் இல்லாததால் உண்மையும் இல்லை: நாடெங்கும் கல்வி கேள்விகள் ஓங்கிக்கொண்டே யிருப்பதால், அந்நாட்டிலே ஒருவனை மேதாவியென்று சுட்டிக் காட்டவும் முடியாது.

'உமது கனவு - நாட்டை எதிர்மறையில் வருணித்தது போதும்' என்று சடையப்ப வள்ளல் சிரித்துக்கொண்டே சொன்னர். அப்பொழுது கம்பன்,

## கோசலம் என்னும் கனவு

'கோதைகள் சொரிவன குளிர்இள நறவம்;
பாதைகள் சொரிவன பருமணி கனகம்;
ஊதைகள் சொரிவன உயிர்உறும் அமுதம்;
காதைகள் சொரிவன செவிநுகர் கனிகள்'

[கோதைகள் - பூமாலைகள். நறவம் - வாசனை. பாதை - மரக்கலம். கனகம் - பொன். ஊதை - காற்று. உறும் - மிகுகிற. காதை - கதை; பாட்டு.]

என்று பாடினன்.

கோசல நாட்டார், பூக்களாலும் பூமாலைகளாலும் பூம்பந்தல்களாலும் தங்களையும் தங்கள் வீடுகளையும் தங்கள் நாட்டையும் அழகு செய்துகொள்வதில் கண்ணும் கருத்துமா யிருக்கிறார்கள். அப்பூக்களும் மாலைகளும், இரஸிகர் உள்ளமும் உடம்பும் குளிரும்படி இள மணஞ் சொரிகின்றன. அழகுச் செல்வத்திற்கு அடுத்தபடியாக அந்நாட்டவர்கள் பொருட் செல்வத்தையும் போற்றுகிறார்கள். விளை பொருள்களில் எஞ்சியவற்றைப் பிறநாடுகளுக்கு ஏற்றிச் செல்லும் மரக்கலங்கள் பொன்னோடும் இரத்தினங்களோடும் திரும்பி வந்து, அப்பொருள்களை இந்நாட்டிலே சொரிந்து முதுகு ஆற்றுகின்றன.

அழகுச் செல்வத்தையும் பொருட் செல்வத்தையும் அனுபவிப்பதற்கு ஆரோக்கியம் இன்றியமையாததல்லவா? கோசல நாட்டார் ஆரோக்கியத்தை வைத்தியர்களின் மருந்துப் புட்டிகளில் காண்பதில்லை; அதை அவர்கள் தங்கள்மீது அமுதம் சொரிந்து உயிர்த் தீயை ஊதி ஜ்வாலை செய்யும் குளிர்ந்த பூங்காற்றிலே, கண்டு அனுபவிக்கிறார்கள்.

அழகு, செல்வம், ஆரோக்கியம் ஆகிய இம்முப்பொருளையும் உள்ளவாறு அனுபவித்துப் பயன்படுத்திக்கொள்வதற்கு அடிப்படையாக அமைவது கேள்விச் செல்வமே (culture). இப்பெருஞ் செல்வம், விசேஷமாகக் கோசல நாட்டினர்க்கு உத்தமக் கவிஞர்களின் தெய்வப் பாடல்களின் வாயிலாகக் கிடைக்கிறது.

இப்பாடல்கள் அறிவின் கனிகளே — அனுபவத்திலே கனிந்த கனிகளைச் சொரிந்து தருகின்றன, கற்பக தருவைப் போலே. தோலில்லாத, கொட்டையில்லாத கனிகள் ; செவியே வாயாகக் கொண்டு — செவியுள் நாவின் சுவை கொண்டு — சுவைத்துச் சுவைத்து இன்புறும் கனிகள் !

இத்தங்கய கருத்தமைந்த பாட்டைக் கம்பன் பாடியபோது, சடையப்பர் தமக்கு யாதினும் இனிய பேரன்பராக இருந்த கவிஞர் பெருமானைக் கண்குளிர நோக்கி, 'தனலட்சுமியும் ஆரோக்கிய லட்சுமியும் அழகுலட்சுமியும் கவிதாதேவியின் அருள் நோக்கி வாழ்வு நடத்துகிறார்கள் !' என்று வாய் குளிர மனம் குளிரச் சொன்னார்.

இவ்வண்ணம் வள்ளலும் கவிஞனும் உல்லாசமாக உரையாடிக் கொண்டிருந்தனர். இத்தகைய சம்பாஷணைகள் அவர்களுக்கிடையே அடிக்கடி நிகழ்வதுண்டு. இச்சம்பாஷணைகளின் எதிரொலிகள் பலவேறு சப்த சித்திரங்களாகப் பரிணமித்துக் கம்பராமாயணம் என்னும் காவிய அரண்மனையை அழகு செய்கின்றன.

கம்பன் கண்ட கனவு, கம்பராமாயணத்தின் 'நாட்டுப் படல' மாக விரிகிறது. வாசகர்களே ! இப்படலத்தில் பொதிந்துள்ள கோசல நாட்டின் சித்திரத்தைக் கற்பனைக் கண்ணோடு உற்று நோக்குங்கள். அப்பொழுது உங்களுக்கு ஒரு புதுமை யுலகம் — ஓர் இலட்சிய சமுதாயம் — புலனாகக் கூடும்.

இப்புதிய சமுதாயத்திலே பொருளும் பொங்குகிறது ; ஒழுக்கமும் ஓங்குகிறது.

கலம்சு ரக்கும் நிதியம் ; கணக்கிலா
நிலம்சு ரக்கும் நிறைவளம் ; நன்மணி
பிலம்சு ரக்கும் ; பெறுதற்(கு) அரியதம்
குலம்சு ரக்கும் ஒழுக்கம் குடிக்கெலாம்.

[ கலம் - மரக்கலம். பிலம் - கனிகள். ]

## கோசலம் என்னும் கனவு

'பொருள் பெருகுகிறது; மக்களோ அழிகிறார்கள்!' என்னும் மேலைநாட்டுக் கவிஞனது பிரலாபம் இங்கே கேட்கவில்லை.

கடல் தந்த லட்சுமியையும் நிலம் தந்த லட்சுமியையும் ஒருங்கே உபாஸிக்கிறார்கள் ஜனங்கள். பொருள்களை அவர்கள் பெருக்கிக் கொள்ளும் முறையே ஒழுக்க வளர்ச்சிக்கும் சாதகமா யிருக்கிறது. இப்படி அறவழியில் பெருகும் செல்வத்தையே கம்பன் 'மெய்த் திரு' என்கிறான்.

# 4. கலை வாழ் நகரம்

இராம ராஜ்யம் என்பது இறந்தகால உலக சரித்திரத்திலே காணும் இராஜ்யங்களில் ஒன்றன்று; அது தீர்க்க தரிசிகளான மகாகவிகளின் காட்சியிலே காணப்படும் எதிர்கால உலகம். கம்பன் வருணிக்கும் கோசல நாட்டின் இராஜதானி, உண்மையில் கற்பனை நாட்டின் மானஸ ராஜதானி.

கம்ப சித்திரமாகிய அயோத்தி ‘ஞானக் கலை வாழ் நகர’ மாக நம் கண்முன் வருகிறது.

ஏகம் முதற்கல்வி முளைத்தெழுந்(து), எண்ணில் கேள்வி
ஆகும் முதல்திண் பணைபோக்கி, அருந்த வத்தின்
சாகம் தழைத்(து),அன்(பு) அரும்பித்தரு மம்ம லர்ந்து,
போகம் கனியொன்று பழுத்தது போலு மன்றே.

[ முதல் - வித்து. முதல் திண் பணை - சிறந்த வலிய கிளைகள். சாகம் - இலை. ]

என்ற பாட்டை ஆராயுங்கள். கல்வி என்னும் வித்திலிருந்து முளைத்து வளரும் மகாவிருட்சத்தைப் பாருங்கள். நாலு திசைகளிலும் வளர்ந்து செல்லும் இதன் கிளைகளே எண்ணிறந்த கேள்விகள் அல்லது ஆராய்ச்சிகள். இக்கற்பக விருட்சத்திற்குத் தவம் அல்லது ஒழுக்கமே இலைகள். இத்தவம் அன்பாக அரும்புதல் வேண்டும். அன்பிலிருந்து இயற்கையாக மலரும் மலரே தருமம். சமுதாய தருமம் அல்லது சகோதர தருமத்திலிருந்து பழுக்கும் பழமே கலைச் செல்வர்கள் விரும்பிப் போற்றும் போகம் அல்லது இன்ப வாழ்வு. இந்த இன்ப வாழ்வு, கல்வி யென்னும் கற்பக விருட்சத்தில் கொம்பிலே கனிந்த கனியாக இராமராஜ்ய வாசிகளுக்குக் கிடைக்கிறது.

## கலை வாழ் நகரம்

கம்பன், கலைகளை 'உன்னரும் அருமறை' என்றும், 'பன்னருங் கலை' என்றும் இரு பெரும் பிரிவுகளாகப் பிரித்துக் கூறுகிறான். நினைத்தற்கும் அரிய அருமறை என்பது, தத்துவஞான ஆராய்ச்சி முதலிய அறிவுக் கலைகளைக் குறித்து நிற்பது. எடுத்து உரைப்பதற்கு அருமையாயுள்ள கலைகள் (பன்னருங் கலைகள்) சிற்பம், சித்திரம், நடனம், சங்கீதம், கவிதை ஆகிய அழகுக் கலைகள். இந்த இருவகைக் கலைகளில் அறிவுக் கலைகள் வாழ்க்கைக்கு இன்றியமையாத அறிவுப் பயிற்சி தருகின்றன; அழகுக் கலைகளோ சௌந்தரிய உணர்ச்சியைப் பெருக்கி வாழ்க்கைக்கு வளம் தருகின்றன. அயோத்தி வாசிகள் அறிவுக் கல்வியை விரும்பிப் போற்றுவது போலவே, இதயத்தை வசமாக்கி மலரச் செய்யும் அழகுக் கல்வியையும் காதலிக்கிறார்கள். அவர்களது நகர நிர்மாண மும், மாளிகைகளின் அமைப்பும், வாழ்க்கை முறையும் குணாதிசயங் களும் பொழுதுபோக்குகளும், அவர்களிடையே வளரும் இரு வகைக் கல்விச் சிறப்பிற்கும் தக்க சான்று தருகின்றன.

இனி நாம் கம்பனது மானஸ லோகத்தை அடைந்து, இராம ராஜ்யமென்னும் ஞானபூமியை நோக்குவோம். நம்மை அங்கே சேர்க்கும் பொருட்டு அவனது ஞானரதம் காத்திருக்கிறது. இரதத்தில் ஏறுவது ஒரு கணம்; மறுகணம் அயோத்திமாநகரத்தின் ஆகாயம் அளாவிய கோபுரங்களும் சிகரங்களும் நம்மை எதிர்நோக்கி வருகின்றன. மலைபோல் ஓங்கி நிற்கும் மதிலும், அதனைக் கடல் போல வளைந்து கிடக்கும் அகழியும் கண்முன் வருகின்றன. அகழியைச் சூழ்ந்த சோலை, கோபுர வாசலில் அமைந்துள்ள சிற்ப விசேஷங்கள், மாட மாளிகைகளின் சித்திர விசித்திரங்கள், நுண்ணிய வேலைப்பாடுகள் அமைந்த பொதுமன்றங்கள், செய்குன்றங்கள், பொன்மண்டபங்கள், பூம்பந்தல்கள் ஆகிய காட்சிகள் நம் கண்முன் வருகின்றன. நகர நிர்மாண முறையினையும் ஓங்கி உயர்ந்த கட்டடங் களின் வேலைப்பாட்டையும் வியந்துகொண்டே, அத்தகைய அழகு களுக்கு இடையே, கலைச் செல்வத்தோடு எல்லாப் பெருஞ் செல்வமும்

படைத்துப் பெருவாழ்வு வாழும் நகர மாந்தரைச் சந்திக்கிறோம்.

நகரத்தின் மதிலே இராம ராஜ்ய வாசிகளின் இருவகைக் கலைப் பயிற்சியையும் நமக்கு நினைப்பூட்டுகிறது. அம்மதிலில் கொசுவையும் கருடனையும் காற்றையும் பகைவர் மனத்தையும்கூட எறிய வல்ல மிகப் பலமான யந்திர வகைகள் அமைந்திருக்கின்றன. எனினும் அம்மதில் நகரத்திற்குக் காவலாக அமையவில்லை; ஓர் அணியாகவே அமைந்திருக்கிறது என்று கவிஞன் குறிப்பிடுகிறான். அகழியைச் சூழ்ந்துள்ள பசுஞ் சோலையைத் தூரத்திலிருந்து பாருங்கள். இப்பொழுது மதிலை அடுத்துத் தோன்றும் அச்சோலை, பொன் மதிலுக்கு உடுத்தின நீல ஆடை போலக் காண்கிறது.

சோலையையும் அகழியையும் மதிலையும் உற்று நோக்கிக் கொண்டே சென்று, நல்ல வழி காட்டும் நாலு வேதம் போல நாலு திசையிலும் நேராக ஓங்கி நிற்கும் கோபுர வாசல்களைப் பார்க்கிறோம். அவ்வாசலில் அமைந்துள்ள சிற்பச் செல்வங்களும், அவ்வாசலுக்கு மேல் பளிங்குக் கற்களாலும் தங்கத் தகடுகளாலும் பலவகை இரத்தினங்களாலும் அமைந்துள்ள அமைப்பு விசித்திரங்களும் நமது கவனத்தை வசீகரிக்கின்றன. கோபுர வாசல்களின் வழியாக ஜனங்கள் நகரத்திற்குள்ளே புகுவதும் வெளிப்படுவதுமாக இருக்கிறார்கள்.

இப்பொழுது நாம் இந்த வாசல்களின் வழியாகச் சென்று கொண்டிருக்கும் ஜனக் கூட்டத்தோடு நெருங்கிச் சென்று நகரத்தைப் பகுதி பகுதியாகப் பார்வையிடாமல், கோபுர சிகரத்திற்கு மேலிருந்தே நகர மாளிகைகளின்மீது நமது திருஷ்டியைச் செலுத்த விரும்புகிறோம். உடனே நமது கவிஞனின் இரதத்தில் மீண்டும் ஏறிக்கொள்ளுகிறோம். ஞானரதம் பளிச்சென்று பறந்து கோபுரத்தின்மீது மெள்ள வட்டமிடுகிறது. ஆ! என்ன அற்புதமான காட்சி! இராஜ்ய லட்சுமிக்குச் சூட்டிய இரத்தின கிரீடம் போல் கோபுரம் நிமிர்கின்றது. நகரத்தின் வெண்ணிற மாளிகை

களோ ஒரே கடலாகக் காண்கின்றன. அக்காட்சி பாற்கடலில் கடுங் காற்று வீசும்போது மலை போல் பொங்கி எழும் அலைகளை ஒத்திருக் கிறது :

திங்களும் கரிதென வெண்மை தீற்றிய
சங்கவெண் சுதையுடைத் தவள மாளிகை,
வெங்கடுங் கால்பொர மேக்கு நோக்கிய
பொங்கிரும் பாற்கடல் தரங்கம் போலுமே.

[ தீற்றிய - பூசிய. சங்க வெண்சுதை - வெண் சங்குகளைச் சுட்டுச் செய்த சுண்ணும்புச் சாந்து. தவளம் - வெண்ணிறம். வெங்கடுங்கால் - பயங்கரமான பெருங்காற்று. பொர - மோத. மேக்கு - மேல். இரும் பாற்கடல் - பெரிய பாற்கடல். தரங்கம் - அலை. ]

சரஸ்வதிதேவி ஆனந்த நடனம் செய்துகொண்டிருக்கும் அயோத்திமாநகரம் அத்தேவிக்கு உரிய தூய வெண்மை நிறம் தோன்ற அமைந்திருப்பது எவ்வளவு பொருத்தமானது !

இனி, இம்மாளிகைகளில் வாழும் கலைச்செல்வர்களான மகா ஜனங்களையும், அவர்களது குணுதிசயங்களையும், பொழுதுபோக்கை யும் ஒருவாறு நோக்குவோம். கவிஞனது ஞான ரதம் கீழே இறங்கு கிறது. நாம் இப்பொழுது காணும் காட்சியை என்னென்று கூறு வது ? பெரிய மாளிகைகளில் ஒடுங்கிக் கிடக்கும் உள்ளங்களைக் காட்டிலும், குடிசைகளில் காணப்படும் ஓங்கி உயர்ந்த உள்ளங்கள் எவ் வளவு மனோகரமானவை !— என்று மேலைநாட்டு நல்லறிஞர் ஒருவர் கூறுகிறார். கம்பரது ஞானபூமியிலோ, வானத்தை அளாவிய மாளிகைகளில் வானத்தை அளந்த உள்ளங்களைச் சந்திக்கிறோம். இரத்தின மயமான மாடங்களில், ஜீவரத்தினங்களாகிய பெருமக் களைப் பார்க்கிறோம். ஜோதிமயமான மனைகளில், மனையறம் வளர்க்கும் ‘ஜகஜ்ஜோதி’களான பெண்களைக் காண்கிறோம்.

இம்மனைகளில் வாழும் குடிகளில் ஒவ்வொருவரும் ஓர் அரசனைப் போலப் பெருவாழ்வு வாழ்கின்றார். ‘கோன்நிகர் குடிகள்தம்

கொள்கை சான்றன.' இக்குடிகளிடம் 'நாம் எல்லாரும் மன்னர்!' என்னும் உணர்ச்சி நிறைந்திருக்கிறதாம்.

இத்தகைய 'ஜோதி மாளிகை' ஒன்றை உற்று நோக்குவோம். இம்மாளிகையின் ஜோதிக்குக் காரணம்தான் என்ன?

தணிமலர்த் திருமகள் தயங்கு மாளிகை,
இணரொளி பரப்பிநின்(று) இருள்து ரப்பன,
திணிசுடர் நெய்யுடைத் தீவி ளக்கமோ?
மணிவிளக் கல்லன; மகளிர் மேனியே

[ தணி - குளிர்ச்சி. தயங்கு - விளங்குகிற. இணர் - தொகுதி. துரப்பன - ஓட்டுபவை. திணி - செறிந்த. ]

என்று ஆராய்ந்து முடிவு கட்டுகிறோம். இம்மாளிகையில் ஒளி வீசி இருளை ஓட்டுவது நெய் விளக்கோ? மணி விளக்கோ? இரண்டும் அல்ல. பின் எது? நெய் விளக்கும் மாணிக்க விளக்கும் கீழ்ப்படும்படி ஒளி வாய்ந்த பெண்ணரசியின் மேனிதான் அப்படிச் சுடர்கின்றது.

பேரொளியும் பேரழகும் வாய்ந்த இப்பெண்கள் ரூபசுந்தரிகளாக விளங்குவதுபோல், ஞானசுந்தரிகளாகவும் விளங்குகிறார்கள். இவர்கள் சித்திரம் எழுதும் காட்சி யொன்று நம் கண்முன் வருகிறது:

பொழுதுணர் வரியஅப் பொருவில் மாநகர்த்
தொழுதகை மடந்தையர் சுடர்வி ளக்கெனப்
பழுதறு மேனியைப் பார்க்கும் ஆசைகொல்,
எழுதுசித் திரங்களும் இமைப்பி லாதவே?

[ உணர்வரிய - உணர்வதற்கு அருமையாயுள்ள. பொருவில் - ஒப்பில்லாத. தொழு தகை - தொழும் தகுதி. ]

சித்திர உருவங்கள் படிப்படியாக வளர்கின்றன. அவை கண் மலர்ந்து அப்பெண்மணிகளை நோக்கும்போது, உயிர் பெய்த

உருவங்களாகவே காண்கின்றன. ஆனால் கண் இமைக்கவில்லையே !— என்று ஓர் ஆசங்கை. தம்மைப் படைத்து விடும் பெண்மணிகளின் சுடர்மேனியைப் பார்க்கும் ஆசையினால், அவை கண் கொட்டாமல் பார்த்துக்கொண்டே யிருக்கின்றனவோ ? — என்று கவிஞர் காரணம் கற்பித்து ஒரு கேள்வி கேட்கிறார். இத்தகைய உயிர்ச் சித்திரங்களை எழுதிக்கொண்டிருக்கும் ஞானசுந்தரிகளைத் தொழுது நோக்கிய பின், நாமும் கவிஞரோடு மீண்டும் ஞானரதத்தில் ஏறி வேறு காட்சிகளைப் பார்க்கச் செல்லுகிறோம்.

இந்நாட்டிலுள்ள இளம் பெண்களின் மழலைச் சொற்களே புல்லாங்குழல் போலக் குளிர்ந்து இசைக்கின்றன. ஏனைப் பெண்களின் வார்த்தைகளோ, வீணைகானம்போலக் கொஞ்சுகின்றன. பெண்களின் பேச்சே பாட்டைப்போல் இனிமையாக இருக்கிறதென்றால், அவர்கள் சங்கீதத்தில் மூழ்கித் திளைக்கும் காட்சியை என்னென்பது?

பெண்கள் பாடுகிறார்கள். அவர்களுடைய கண்டத் தொனியோடு மகரயாழ் முதலிய இசைக் கருவிகள் ஒன்றுபட்டு இசைக்கின்றன. பெண்களின் உள்ளத்தே யுள்ள காதல், துயரம், உற்சாகம் முதலிய உணர்ச்சிகள் பாட்டாகப் பொங்கும்போது, அந்த வாய்ப் பாட்டோடு யாழிசையும் ஆரோகண அவரோகணக் கிரமத்தில் நிமிர்ந்தும் இறங்கியும் செல்லுகிறது. அதற்கு இசைய மத்தளங்களும் ஒலி செய்கின்றன. பெண்கள் பாடும்போது, அவர்கள் வளர்க்கும் கிளிகளும் அவர்களோடு பாட்டை ஓதி வருகின்றனவாம். எனினும் இசைவிருந்தால் மயங்கி அக்கிளிகள் கண்மூடி உறங்கி விடுகின்றன. உணர்ச்சி மிகுதியால் பாடும் பெண்களோ மெய்ம் மறந்து பாடிக்கொண்டே யிருக்கிறார்கள்:

> இறங்குவ, மகரயாழ் எடுத்த இன்னிசை,
> நிறங்கிளர் பாடலால் நிமிர்வ ; அவ்வழி
> கறங்குவ வள்விசிக் கருவி ; கண்முகிழ்த்(து)
> உறங்குவ மகளிரோ(டு) ஓதும் கிள்ளையே.

[ கிளர் - விளங்குகிற. கறங்குவ - ஒலிப்பன. வள் - வார். விசி - கட்டு. முகிழ்த்து - மூடி. கிள்ளை - கிளி. ]

இத்தகைய 'சங்கீதக் கச்சேரிகள்' வீடுதோறும் காணப்படு கின்றன. 'வீடுதோறும் கலையின் விளக்கம்' என்னும் புதுமைக் கவிஞர் வாக்கு இராமராஜ்யத்திற்கு அன்றோ பொருந்தும்? — என்று நினைக்கிறோம்.

சங்கீதத்தைப்போல், நாட்டியமும் இந்நகரத்தில் விசேஷமாகக் காணப்படுகிறது. ஆடல் பாடல்களில் வல்ல சுந்தரிகள் மத்தள ஒலிக்கும், தாள ஒத்துக்கும், பண்சுமந்த பாட்டுக்கும் இசைய அடி வைத்துப் பலவிதமாக நாட்டியம் ஆடுகிறார்கள், காலிலுள்ள சதங்கைகள் 'கலீர் கலீர்' என்று ஜயகோஷம் செய்ய. இத்தகைய பரத நாட்டியங்கள் நடைபெறுவதற்காகவே பொது மண்டபங்களான நடனசாலைகள் அமைக்கப்பெற்றுள்ளன. அயோத்தியில் சிறப்புற்று விளங்கும் நால்வகை மண்டபங்களில் நர்த்தன மண்டபமும் ஒன்று.

'மன்னவர் தருதிறை அளக்கும் மண்டபம்;
அன்னமென் னடையவர் ஆடு மண்டபம்;
உன்னரு மருமறை ஓது மண்டபம்;
பன்னருங் கலைதெரி பட்டி மண்டபம்'

[ திறை - கப்பம். பட்டி மண்டபம் - கல்வி மண்டபம் ]

என்று கவிஞன் காட்டி வருகிறான். இராமராஜ்ய வாசிகள் நடனத்தையும் ஓர் அருங் கலையாகப் பயில்கின்றார். அழகுக் கலைகளில் நாட்டியக் கலைக்கு மட்டும் தனி மண்டபம் அமைந் திருக்கிறது. வேறு அழகுக் கலைகளுக்கெல்லாம் வேறு மண்டபம்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த நடன மண்டபம் காதலின் வளர்ப்புப் பண்ணையாகவும் காண்கிறது. நடன மண்டபத்தில் பெண் மணிகள் சந்தோஷ மிகுதியால் நர்த்தனம் செய்கிறார்கள். அப் பெண்களது கடைக்கண் நோக்குக்குச் சில மைந்தர்களின் நெஞ்சங்கள் இலக்காகின்றன. காதல் பிறக்கிறது; வளர்கிறது. உயிர் தேய் கிறது; உள்ளம் உருகுகிறது:

முளைப்பன முறுவல்,அம் முறுவல் வெந்துயர்
விளைப்பன: அன்றியும் மெலிந்து நாடொறும்
இளைப்பன நுண்ணிடை; இளைப்ப மென்முலை
திளைப்பன முத்தொடு செம்பொ னாரமே.

[ திளைப்பன - நெருங்குவன; அசைவன. ]

ஆடவர் நெஞ்சிலே காதலும், நடன மாதர் முகத்திலே புன்சிரிப்பும் முளைக்கின்றன. இப்புன்சிரிப்பு காதலர் நெஞ்சிலே கொடிய வேதனையை விளைவிக்கிறது. மைந்தர் துன்பம் மகளிர் இன்பம் ஆகிறது!

காதலர் உலகில் மகளிர் மைந்தர்க்குத் துயரம் விளைப்பதுபோல், மைந்தரும் மகளிர்க்குத் துன்பம் விளைக்கிறார். காதலர் புதுப் பூச் சூடும் வியாஜத்தால் எடுத்து வீசிய பூ மாலைகள், காதலிகளான நடனப் பெண்களின் கால்களிலே மன்றாடுவதுபோல விழுந்து, பின்பு காற்சிலம்புகளை ஒலிக்கவிடாமல் விலங்குபோலக் கட்டுகின்றனவாம்.

காதலரைப் பிரிந்த காதலிகளிற் சிலரைப் பூஞ்சோலைகளில் சந்திக்கிறோம். அச்சோலைகளில் மெல்லென உலாவிவரும் தென்றற் காற்றும், தேனை நாடிச் செல்லும் வண்டுகளும் விரக தாபத்தை ஜ்வாலை செய்யக் காண்கிறோம். ஆடவர்க்கு ஆசைநோய் தரும் மாதர், தாமும் அந்த நோயால் மெலிந்து தனிமை நாடுகிறார்.

இத்தகைய காதற் காட்சிகளோடு வேறு காட்சிகளையும் பார்க்கிறோம். யானைகளோடு விளையாடும் சிறுவர்களையும், பந்து விளையாடும் பெண்களையும், கிண்கிணி மாலை ஒலிக்க ஆடிவரும் குதிரைகளையும், அக்குதிரைகள்மீது உல்லாசமாக ஏறிச் சவாரி போவாரையும், கொடிகளோடு செல்லும் இரதங்களையும், குபேர நகரத்தைத் தோற்கச் செய்யும் கடைவீதிகளையும், கால்களில் வீரக்கழல் அதிரக் கைகளில் வேலாயுதம் பளபளக்க உலாவி வரும் மைந்தரையும், சிலம்புகள் புலம்ப இளநகை அரும்பி வரும் கன்னியரையும் கண்டு கண்டு களிக்கிறோம்.

இராம ராஜ்ய வாசிகள் அருங்கலை விநோதர்கள். படிப்பைப் போல், விளையாட்டும் பொழுதுபோக்கும்கூட அவர்களால் கலைகளாக மதிக்கப்படுகின்றன. இம்மக்களுக்கு வாழ்க்கையே ஓர் அரும் பெருங் கலை. அறிவுக் கலையும் அது; அழகுக் கலையும் அதுவே. இவர்கள் வாழ்க்கையைக் காதலிக்கிறார்கள்; கலைகளைக் காதலிக்கிறார்கள்; இயற்கை யழகுகளைக் காதலிக்கிறார்கள்.

இந்த இராஜ்யத்தில் களவும் இல்லை, காவலும் இல்லை; வறுமையும் இல்லை, வண்மையும் இல்லை. உண்மையில், இம்மக்களிடையே காவல் இல்லாத ஒரு புதுமை - அரசு நடைபெறுகின்றது. 'ஆ, ஆ! இம்மகாராஜ்யத்திலே ஏழைகளுமில்லை, கள்வர்களுமில்லையே!' என்று அதிசயிக்கிறோம். உடனே கவிஞன் தன் கண்களிலே ஒரு புதிய ஒளி தோன்ற,

'கல்லாது நிற்பார் பிறரின்மையின், கல்வி முற்ற
வல்லாரு மில்லை; அவைவல்லரல் லாரு மில்லை:
எல்லாரும் எல்லாப் பெருஞ்செல்வமும் எய்த லாலே
இல்லாரும் இல்லை, உடையார்களும் இல்லை மாதோ!'

[ அவை - அக்கல்வி கேள்விகள். ]

என்று பாடிக்கொண்டே, 'இந்த இராஜ்யத்தில் ஏழைகளு மில்லை, முதலாளிகளுமில்லை; எனவே கள்வர்களுமில்லை!' என்று வியாக்கியானம் செய்கிறான். 'இது ஒரு புதிய சித்தாந்தம் — ஒரு புதிய உலகம்' என்று தீர்மானிக்கிறோம்.

'இதுதான் "கவிஞர் அனைவரும் வடநூல் முனிவரும் புகழ்ந்தது;" கலைச் செல்வமாகிய கற்பகமே இப்படி முளைத்துச் செழித்துக் கனிந்து வருகிறது' என்கிறான் கவிஞன்.

# 5 அரசியல்

ஒரு நதியின் பெருமை முழுவதும் அதன் உற்பத்தி ஸ்தானத்திலே காணப்படுவதில்லை. எனினும் ‘இது கங்கா நதியின் உற்பத்தி’ ‘இது காவேரியின் உற்பத்தி’ என்று போற்று வோருண்டு. அப்படியே இராமன் தந்தையாகிய தசரத சக்கரவர்த்தி யையும் ‘கதாநாயகனாகிய இராமனைத் தந்த தருமமூர்த்தி’ என்று கம்பன் கௌரவித்துப் பேசுகிறான். இத்தகைய சக்கரவர்த்தியின் ஆட்சி ‘அரசியற் படலம்’ என்ற ஒரு சிறு படலத்தில் வருணிக்கப் படுகிறது.

அரசர்களுக்கு இருக்க வேண்டிய குணங்களெல்லாம் இந்தச் சக்கரவர்த்தியின் சன்னிதியிலே ‘நான் என்ன பணி செய்யவேணும்? நான் என்ன செய்ய வேணும்?’ என்று பணி கேட்டு நின்றனவாம்: கம்பன்முன் தமிழ்மொழி பணி கேட்டு நிற்பது போலே.

தாயொக்கும் அன்பின்; தவமொக்கும் நலம்ப யப்பின்;
சேயொக்கும், முன்நின்(று) ஒருசெல்கதி உய்க்கும் நீரால்;
நோயொக்கும் என்னின், மருந்(து)ஒக்கும்; நுணங்கு கேள்வி
ஆயப் புகுங்கால் அறி(வு)ஒக்கும் எவர்க்கும் அன்னான்.

[ பயப்பின் - அளிப்பதில். சேய் - புத்திரன். உய்க்கும் - செலுத்தும். நீரால் - நீர்மையினால்; தன்மையினால். நுணங்கு - நுண்ணிய. ]

என்று வருணிக்கிறான் இந்தச் சக்கரவர்த்தியின் மாட்சியை.

எல்லோருக்கும் அன்பினால் தாயாக இருந்தானாம் தசரதன். தந்தையாக இருந்தான் என்று சொல்லாதது கவனிக்கத் தக்கது. ஜனங்களுக்கு மகனாக இருந்தான் என்றுகூடச் சொல்லுகிறான், நல்ல கதியில் அவர்களைச் செலுத்திக் கொண்டிருந்ததால்.

அரசாங்கம் மக்களுக்குத் தாயாகவும் சேயாகவும் அமைகிறது என்பது குறிப்பு. மேலும் நலம் தருவதில் தவத்தை ஒத்திருந்தானும். அறிவுக்குச் சமானமாகவும் விளங்கினனும், ஜனங்களெல்லோருக்கும். குற்றங்களைக் கண்டிப்பதிலும் தண்டிப்பதிலும் நோயை ஒப்பானுயினும், மருந்தையும் ஒப்பான் என்கிறார். தண்டனையின் நோக்கம் குற்றவாளிகளைச் சீர்திருத்துவது தானே.

ஜனங்களுக்கு அறிவை ஒத்தவன், தானே அறிஞனுகவும் விளங்கி யிருக்க வேண்டுமல்லவா ? இவன் அறிவு என்னும் சமுத்திரத்தைக் கடந்தானும், நூலாராய்ச்சி யென்னும் கப்பலின் உதவியால். என்ன என்ன சமுத்திரங்களை எப்படி எப்படிக் கடந்தான்! பாருங்கள் :

ஈந்தே கடந்தான் இரப்போர்கடல்; எண்ணில் நுண்ணூல்
ஆய்ந்தே கடந்தான் அறிவென்னும் அளக்கர்; வாளால்
காய்ந்தே கடந்தான் பகைவேலை; கருத்து முற்றத்
தோய்ந்தே கடந்தான் திருவிற்றொடர் போக பௌவம்.

[ இரப்போர் - யாசகர். அளக்கர் - சமுத்திரம். காய்ந்தே - கோபித்து. அழித்தே. வேலை - சமுத்திரம். திருவின் - செல்வத்தினேடு. போக பௌவம் - இன்பசாகரம். ]

யாசகக் கடலைக் கொடைக் கப்பலால் கடந்து கரையேறினனும், — ஆம், 'யாசகர் இன்மை' யென்ற அந்தக் கரையிலே. அயல் நாட்டவராகிய அந்த யாசகர்களும் திரும்ப வந்து யாசிக்காதபடி அவ்வளவு மிகுதியாகக் கொடுத்தானும். இத்தகைய சக்கரவர்த்தி அறிவுக் கடலைக் கடந்ததோடு பகைக் கடலையும் கடந்து 'பகையின்மை' என்ற கரையை அடைந்தானும். இவன் போக சமுத்திரத்தையும் ஆசை தீர அனுபவித்துக் கடந்தான் என்கிறுன்.

தசரத ராஜ்யத்தில், 'வெள்ளமும் பறவையும் விலங்கும் வேசையருள்ளமும் ஒருவழி' ஓடினவாம். அங்கே அதிவிருஷ்டி (கெடுதி செய்யும்படி அவ்வளவு மிகுதியான மழை)யும் இல்லை;

அனுவிருஷ்டி (மழையின்மை)யும் இல்லை. எனவே, சரயு வெள்ளம் என்றும் ஒரு வழியாக இடையறாது ஓடிக்கொண்டிருந்ததாம். ஒன்றுக்கொன்று பகையுடைய மிருகங்களும் பறவைகளும் கூடத் தங்கள் இயற்கைப் பகைமையை மறந்து அன்பு பூண்டு ஒரே வழியில் ஓடிக்கொண்டிருந்தனவாம், நாட்டு மக்களின் நற்பழக்கத்தினுல். வேசியர் மனம் கூட ஒருவழி ஓடி ஒரு நாயகனைப்பற்றியிருந்ததாம். இவ்வளவு சிறப்பும் ஆட்சியின் சிறப்பே என்கிறுன் கவிஞன்.

தசரதன் மன்னுயிரெல்லாம் தன்னுயிர் போலப் பாதுகாத்து வந்தான் என்றுல் போதாதாம், இந்த ஆட்சியின் சிறப்பை உள்ளபடி குறிப்பிடுவதற்கு.

வயிரவான் பூண்அணி மடங்கல் மொய்ம்பினுன்
உயிரெலாம் தன்னுயிர் ஒப்ப ஓம்பலால்,
செயிரிலா உலகினிற் சென்று நின்றுவாழ்
உயிரெலாம் உறைவதோர் உடம்பும் ஆயினுன்.

[ வான் - பெருமை. பூண் - ஆபரணம். அணி - அணிந்த. மடங்கல் - சிங்கம். மொய்ம்பு - வலிமை. செயிரிலா - குற்றமற்ற. சென்று வாழ் உயிர் - சஞ்சரிக்கும் உயிர்கள்—சரம். நின்று வாழ் உயிர் - இடம் பெயராத உயிர்கள் - அசரம். ]

மன்னுயிரையே தன்னுயிராகப் பாதுகாத்து வந்தானும், தன்னை அம்மன்னுயிரைத் தாங்கும் உடம்பாகவே கருதி. 'உயிரெலாம் உறைவதோர் உடம்பும் ஆயினுன்' என்று குறிப்பிடுவது விசேஷ கவனத்திற்கு உரியது.

உடலைக் காட்டிலும் உயிர் அருமையானதல்லவா? தசரதனும் தன்னைக் காட்டிலும் குடிகளை அருமையாக மதித்தான். அரசனும் குடிகளும் உடலும் உயிரும்போ லிருக்கவேண்டும் என்பது ஒரு பழைய கொள்கைதான். 'மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்' என்பது சங்கப்புலவர் வாக்கு: 'அரசன் அல்லது அரசாங்கமே

உயிர்; ஜன சமூகம் உடம்பு' என்பது கருத்து. ஆனல் இந்தக் கொள்கைக்கும் கம்பன் கொள்கைக்கும் எவ்வளவு வித்தியாசம்!

ஜனங்களை உடம்பாகவும் அரசாங்கத்தை உயிராகவும் மதித்துப் போற்றிய கொள்கை, கள்ளங் கவடற்ற வீரத் தமிழ் மன்னர்கள் வாழ்ந்த பழைய காலங்களில் நல்ல பயனை அளித்து வந்ததென்று ஊகிக்கலாம். ஆனல் நாகரிகம் ஏற ஏறச் சூதும் வாதும் சுயநலமும் மலிந்துவிட்டன. அப்படிப்பட்ட பிற்காலத்தில் பழைய அரசியற் கொள்கை அரசர்கள் கையில் ஜனங்களை அடக்கி ஆளுவதற்கு உரியதொரு கருவியாக மாறக்கூடுமல்லவா?

உடம்பிற்காக உயிரா? உயிருக்காக உடம்பா? உயிருக்கு உடம்பும் உடம்பிற்கு உயிரும் இன்றியமையாதவை என்ற கருத்தோடு பண்டைப் பழங்காலங்களில் ஆட்சி நடந்து வந்திருக்கலாம். ஆனல் பிற்காலத்திலே, 'உயிராகிய எங்களைத் தாங்குவதே உடம்பாகிய ஜனசமூகத்தின் கடமை' என்று அரசர்கள் நினைத்தார்கள். உடம்பின் ஒரு பகுதியை அறுத்துச் சுட்டாவது உயிரைக் காப்பது அவசியமென்ற கருத்தோடு இரண வைத்தியர்கள் இரண சிகிச்சை செய்கிருர்கள்: அப்படியே அரசாங்கத்தையும் காப்பாற்ற வேண்டுமென்றுர்கள் அரசர்கள். இப்படிப்பட்ட கருத்திற்கு 'மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்' என்ற பழைய கொள்கை இடம்தரக் கூடும்.

எனவே, கம்பன் ஒரு புதிய கொள்கையை வெளியிடுகிருன். 'அரசாங்கம் உயிர்; ஜன சமூகம் உடம்பு' என்பது பழைய கொள்கை. 'அரசாங்கமே உடம்பு; ஜன சமூகமே உயிர்' என்பது புதுமைக் கொள்கை. எவ்வளவு லேசாகப் பழைய கொள்கையை மாற்றி விடுகிருன்! அந்தக் கொள்கை அரசனைத் தலைமையில் வைக்கிறது: புதிய கொள்கையோ குடிகளைத் தலைமையில் வைத்து, அவர்களின் நன்மையையே பிரதானமாக்குகிறது. தம் உடம்பாதலால் அரசாங்கத்தைப் பாதுகாத்து ஒழுகுவதும் குடிகளின்

கடமையாகும். இப்படி உடம்பை உயிர் காத்தும், உயிரை உடம்பு காத்தும், இரண்டும் ஒன்றுய் அறநெறியில் ஒழுகி இன்ப வாழ்க்கை வாழ வேண்டுமென்பது கம்பன் குறிப்பு. இப்படிப்பட்ட கருத்துக் களை யெல்லாம் அடக்கி 'உயிரெலாம் உறைவதோர் உடம்பு' என்று ஒரு சூத்திரம்போல் வெளியிட்டிருக்கிறுன், அரசாங் கத்தைப்பற்றிய தனது தனிப் பெருங் கொள்கையை. இது அடுத்த காண்டத்திலே வசிஷ்ட முனிவர் வாயிலாக ஒரு விரிவுரை பெறப் போகிறது.

இத்தகைய கொள்கையை உணர்ந்து ஆட்சி செலுத்தி வந்த தசரதன் எவ்வளவு கவனமாக இராஜ்யம் முழுவதையும் ஆண்டு வந்தான் — தெரியுமா ?

எய்யென எழுபகை எங்கும் இன்மையால்,
மொய்பொரு தினவுறு முழவுத் தோளினுன்,
வையக முழுவதும் வறிஞன் ஓம்பும்ஓர்
செய்யெனக் காத்(து)இனி(து) அரசு செய்கின்றுன்.

[ எய்யென - (அம்புகளை) எறியென்று. எழு - எழுகிற ; மேல் வருகிற. மொய் பொரு தினவு - போர் செய்வதற்கு உண்டாகும் தினவு. முழவுத் தோள் - மத்தளம்போலத் திரண்டு உருண்ட தோள்கள். செய் - வயல். ]

போர் செய்யப் பகைவரே இல்லாமற் போய்விட்டதால், சக்கரவர்த்தி தன் கவனம் முழுவதையும் அரசாட்சியிலேயே செலுத்தி வந்தானும். ஒரே வயலை ஆஸ்தியாகவுடைய ஏழை ஒருவன் எவ்வளவு ஜாக்கிரதையாக அந்த வயலைக் காத்துக் கிடப்பானே, அவ்வளவு ஜாக்கிரதையாகக் காவல் செய்து வந்தானும் இராஜ்யத்தை. 'ஓர் செய்யெனக் காத்து' என்பதால், அப்படி இராஜ்யம் முழுவதையும் காவல் செய்து வந்தபோதிலும், கொஞ்சமும் சிரமம் தோன்றவில்லை யென்பது குறிப்பு. அவ்வளவு உத்ஸாகம் ஜனங்களுக்குத் தொண்டு பூண்டு உழைப்பதிலே.

'இதோ பாருங்கள்! அப்படித்தானே அரசு செய்து கொண்டிருக்கிறான்!' என்று வியந்து நம் கண் எதிரே காட்டுவதுபோல், 'இனிது அரசு செய்கின்றான்!' என்று நிகழ் காலத்தால் கூறி முடிக்கிறான்.

ஆம்: நாமும் பார்க்கிறோம், 'உயிரெலாம் உறைவதோர் உடம்பு' என்று பாராட்டப்பெறும் அந்த ஆட்சியை — 'இராம ராஜ்யம்' என்னும் கவிஞன் கொள்கையின் வித்தாக — இராமாயணம் என்னும் ஞானகங்கையின் உற்பத்தி ஸ்தானமாக.

## 6. அவதார ரகஸ்யம்



ப்படி அரசு செய்துவரும் சக்கரவர்த்திக்கும் ஏதாவது குறை இருக்குமா? எப்படி யிருக்க முடியும்? ஆனால் இவன் தன் குலகுருவும் மந்திரியுமான வசிஷ்டரிடம் தனக்கும் ஒரு குறை யிருப்பதை விண்ணப்பஞ் செய்து கொள்கிறான் :

'அறுபதி னுயிரம் ஆண்டு மாண்டுற,
உறுபகை ஒடுக்கிஇவ் வுலகை ஓம்பினேன் :
பிறிதொரு குறையிலை ; எற்பின் வையகம்
மறுகுறும் என்பதோர் மறுக்கம் உண்டரோ.

[மாண்டுற - மாட்சியுற்றுப் பொருந்த, எற்பின் - என் பின். மறுகுறும்- கலங்கிவிடும். மறுக்கம் - மனக்கலக்கம்.]

'அருந்தவ முனிவரும் அந்த ணாளரும்
வருந்துத லின்றியே வாழ்வின் வைகினர் ;
இருந்துயர் உழக்குவர் எற்பின் என்பதோர்
அருந்துயர் வருத்தும்என் அகத்தை' என்றனன்.

[வைகினர் - தங்கியிருந்தார். இருந்துயர் - மிக்க துன்பம். உழக்குவர் - வருந்துவார்கள்.]

பிள்ளை யில்லாத குறைதான் சக்கரவர்த்திக்குள்ள ஒரே ஒரு குறை. ஆனால் இந்த விஷயத்தில்கூட இவனுக்குச் சுயநல உணர்ச்சி கொஞ்சமும் இல்லையாம். தனக்குப் பிள்ளை வேண்டுமே — என்ற வருத்தமில்லை. 'எனக்குப் பின் ஜனங்களுக்குத் தொண்டு பூண்டு உழைக்க ஒரு காவலன் வேண்டுமே : சாதுக்கள் துன்பமடைய லாகாதே' என்றுதான் கவலைப்படுகிறானாம். இராஜ்யத்தைப்

பற்றிய கவலைதான் தசரதனுடைய பெருங்கவலை, சந்ததியைப்பற்றி யோசிக்கும்போதும்.

அந்தத் தங்கமான உள்ளத்தை அறிந்துகொண்டதும் வசிஷ்டர் உடனே பதிலொன்றும் சொல்லவில்லை. அவருடைய உள்ளம் கால வெள்ளத்தை எதிர்த்துப் பின்னோக்கி ஓடுகிறது, ஏதோ ஒரு பூர்வ கதையை நினைத்துக்கொண்டு. 'ஆம்: அந்தக் கதைக்கும் தசரதன் குறைக்கும் தொடர்பு இருக்கிறது' என்று எண்ணத் தொடங்குகிறார்.

'அலைகடல் நடுவணோர் அனந்தன் மீமிசை
மலையென விழிதுயில் வளரு மாமுகில்,
கொலைதொழில் அரக்கர்தம் கொடுமை தீர்ப்பனேன்(று)
உலைவுறும் அமரருக்(கு) உரைத்த வாய்மையை'

[நடுவண் - நடுவிலே. ஓர் - ஒப்பற்ற. அனந்தன் - ஆதிசேஷன். மீமிசை - மேலே. முகில் - மேகம். உலைவுறும் - வருத்தம் மிக்க. அமரர் - தேவர். வாய்மை - வாக்குறுதி.]

— ஞாபகப்படுத்திக் கொண்டதும், அந்தக் காட்சி இன்றுதான் நடைபெறுவதுபோலத் தோன்றுகிறது !

கொலையே தொழிலாக அமைந்த அரக்கரைக் குறித்துத் தேவர்கள் முறையிடுவதும், அப்போது திருமால் கருடன்மேல் பிரசன்னமாய் அபயமளிப்பதும், அந்த ஞானியின் ஞானக்கண் முன் எவ்வளவு பிரத்தியட்சமாகத் தோன்றுகின்றன !

'கருமுகில் தாமரைக் காடு பூத்துநீ(டு)
இருசுடர் இருபுறத்(து) ஏந்தி ஏடவிழ்
திருவொடும் பொலியஓர் செம்பொற் குன்றின்மேல்
வருவபோல், கலுழன்மேல் வந்து தோன்றினன்'

[நீடு - நெடுந்தூரம் விளங்கும். இருசுடர் - சூரிய சந்திரர். ஏடவிழ் - (ஏடு + அவிழ்) — இதழ் விரிந்த (தாமரைப் பூவிலுள்ள). திரு - லட்சுமி. கலுழன் - கருடன்.]

—என்று நினைத்துப் பார்க்கிறாரா? அல்லது அந்த மூர்த்தியைத் தாமும் அப்படியே பார்க்கிறாரா, தியான வாசலைத் திறந்து?

கோடை வெயிலால் தவித்துக்கொண்டிருக்கும் உலகம் மழை முகம் கண்டதுபோலக் கண்டார்களாம் தேவர்கள் திருமாலை. அப் பெருமான் மனிதனாக அவதரிப்போம் என்று வாக்களித்தாராம். இந்தக் கதை நினைவில் வந்ததும், தசரதன் குறை தீரத் தேவர்கள் குறை தீருமென்றும், தேவர்கள் குறை தீரத் தசரதன் குறை தீர வேண்டுமென்றும் முடிவு கட்டி, வசிஷ்டர் சக்கரவர்த்தியைப் 'புத்திர காமேஷ்டி' என்னும் யாகம் செய்யும்படி தூண்டுகிறார்.

அந்த யாகத்தின் பயனாக அவன் மனைவியரில் மூத்தவளான கோசலைக்கு இராமனும், கைகேயிக்குப் பரதனும், சுமித்திரைக்கு இலட்சுமண சத்துருக்கனரும் பிறந்தார்கள். அவர்களில் இராமன் 'கருமுகிற் கொழுந்தெழில் காட்டும் சோதி' — அதாவது, தேவர்களுக்குக் கருமுகிலாகக் காட்சி யளித்த அழகனும் தேஜோரூபியுமான திருமால்தானாம். குழந்தைகள் பிறந்ததுமே, தேவர்களும் தேவமாதர்களும் 'அரக்கர்கள் அழிந்தார்கள்!' என்றே பூரித்துப்போனார்களாம். தசரதனும் பூரித்துப் பொக்கிஷ சாலையைத் திறந்துவைத்து, 'அங்குள்ள செல்வத்தை யெல்லாம் ஏழைகள் அவரவர் வேண்டியபடி எடுத்துப் போகலாம்' என்று பறை யறைவித்தான்.

இராமனுடைய பேரழகைப் பார்த்துப் பார்த்துப் பூரித்துப் போன சக்கரவர்த்தி, இந்த இராமனை யல்லாமல் தனக்கு வேறொரு உயிரும் உடம்பும் உண்டென்றே எண்ணியதில்லையாம்.

காவியும் ஒவிர்தரு கமலமும் எனவே
ஓவிய எழிலுடை ஒருவனை அலதோர்
ஆவியும் உடலமும் இலதென, அருளின்
மேவினன் உலகுடை வேந்தர்தம் வேந்தன்.

[காவி - நீலோற்பல மலர். எழில் - அழகு. அருளின் - அருளோடு.]

தசரத புத்திரர்கள் வளர்ந்து பல கலைகளையும் பயின்றார்கள், வசிஷ்ட முனிவரிடம். இவர்களில் இராம லட்சுமணர் இணை பிரியாமலே எங்கும் திரிந்தார்கள். அப்படியே பரத சத்துருக்கனரும் ஒருவரையொருவர் பிரியாத பேரன்புடையவரா யிருந்தார்கள்.

இராமன் இளமையிலேயே ஜனங்களிடம் விசேஷ அன்புள்ள வனா யிருந்தான்.

எதிர்வரும் அவர்களை எமையுடை இறைவன்
முதிர்தரு கருணையின் முகமலர் ஒளிரா,
'எதுவினை ? இடரிலை ? இனிதுநும் மனையும்
மதிதரு குமரரும் வலியர்கொல் ?' எனவே,

[ இறைவன் - தலைவனான இராமன். முதிர்தரு - மிக்க. கருணையின் - கருணையுடனே. ஒளிரா - ஒளிர்ந்து. வினை - தொழில் இலை - இல்லை. மனை - மனைவி. மதிதரு - புத்தியுள்ள. வலியர்கொல் - க்ஷேமமா யிருக்கிறார்களா ? என - என்று வினவ. ]

அவர்களும் 'உன்னை அரசாக வுடைய எங்களுக்கும் குறையுண்டோ ? நீ ஊழி காலம் ஆட்சி செய்வாய் !' என்று வாய்குளிர வாழ்த்துவார்க ளாம்.

குழந்தையா யிருக்கும்போதே இராமன் எதிரே வரும் ஜனங் களை நோக்கி முகம் மலர்ந்து, 'உங்கள் தொழில் எது ? துன்பம் ஒன்றும் இல்லையே ? மனைவி மக்கள் சுகமாயிருக்கிறார்களா ?' என்றெல்லாம் கருணையோடு யோக க்ஷேமங்களை விசாரிப்பானாம். தான் இராஜகுமாரனாயிருக்க, அவர்கள் சாமானியர்கள்தானே — என்று நினைப்பதே யில்லையாம். இத்தகைய கருணை பின்னாளில் ஒப்பற்ற தியாகமாகக் கனிந்து, பிறப்பு முதலிய எந்த வகையான வேறுபாடுகளையும் கருதாமல், வேடனையும் வானரத்தையும் அரக்கனையும் சகோதரராகத் தழுவிக்கொள்ளுகிறது.

இத்தகைய ஸர்வ ஜீவ சகோதரத்வத்திற்கு இன்றியமையாத கருணையும் தியாகமும் மக்கள் உள்ளத்தில் மறைந்தொளிரும் தெய்வத்தன்மையை வெளிப்படுத்துகின்றன என்பதும், சகோதர தர்மத்தை வளர்த்து உலகத்தை வாழ்விக்கும் தெய்விக சக்தி இராமனைப்போன்ற தியாகமூர்த்தி வாயிலாக வெளிப்படுகிறது என்பதும் கம்பன் காட்டும் அவதார ரகஸ்யம் என்று ஊகிக்கலாம்.

## 7. திருமணத் தூதர்

இரத்தின கசிதமான சபா மண்டபத்திலே அருமையான வேலைத்திறங்கள் அமைந்துள்ள சிங்காதனத்தில் ஓர் இராஜசிங்கம் போலக் கொலு வீற்றிருந்தான் தசரதன். அவன் எதிரில் தவராஜ சிங்கமாகிய விசுவாமித்திரர் எதிர்பாராத நிலையில் திடீரென்று தோன்றினர். சக்கரவர்த்தி தன் மார்பில் அணிந்துள்ள இரத்தின ஹாரம் ஜொலிக்க விரைந்தெழுந்து அடி வணங்கி வரவேற்றான்.

'நிலஞ்செய்தவம் என்றுணரின் அன்று;நெடி யோய்!என்
நலஞ்செய்வினை உண்டெனினும் அன்று;நகர் நீயான்
வலஞ்செய்துவ ணங்களெி வந்தஇது, முந்(து)எம்
குலஞ்செய்தவம்!' என்றினிது கூற,முனி கூறும்.

[ நெடியோய் - பெரியவனே. நகர் - நகரத்தில். எளிவந்த - எளிதில் வந்தருளிய. முந்து - முன்பு. ]

தபோவனங்களில் தேடிப்போய் வணங்கவேண்டிய முனிவர் பெருமான், தன்னுடைய நகரத்திலேயே தான் வணங்கும்படி வந்து விட்டாரல்லவா? இப்படிப்பட்ட பாக்கியத்துக்குக் காரணம் இந்த நாட்டிலுள்ளவர்கள் செய்த தவமாயிருக்கலாம் என்று முதல் முதல் யோசித்தான் அரசர் பெருமான். தன்னையே அவர் தேடி வந்து விட்டதால், 'இந்தப் பெரும் பாக்கியத்துக்கு என் தவப்பயனே காரணமாயிருக்கலாமோ?' என்றுகூட யோசிக்கலானான் அந்தக் குதூகலத்திலே. ஆனால் 'அடியேனும் பிரஜைகளும் அவ்வளவு தவஞ் செய்திருக்க முடியாது' என்று உடனே உணர்ந்து முடிவு கட்டி அந்த முடிவைப் பணிவோடு தெரிவித்துக்கொண்டான். எனவே,

'எங்கள் குலத்து முன்னோர் யாவரும் — அதாவது, என்னைப் போன்ற அரசர்களான என் மூதாதையரும், அவர்கள் பிரஜைகள் பல கோடியினரும் — செய்த தவத்தொகுதிதான் உம்முடைய வருகைக்குக் காரணமா யிருக்க வேண்டும்!' என்று துதி செய்தான்.

என்ன உள்ளக் கிளர்ச்சி! புத்திர சம்பத்தாகிய பாக்கியத்தை அனுபவித்துக் கொண்டிருந்தவன், விசுவாமித்திரரை வணங்கி அந்த மகரிஷியின் ஆசியையும் பெற்று வாழலாமென்ற நினைப்போடு, அவருடைய விஜயத்தை மகாபாக்கியமாக மதித்தான்.

அந்தப் புகழ் மாலையை மனமுவந்து அப்படியே சூடிக்கொண்ட முனிவர், வந்த காரியம் இனிது நிறைவேறுவதற்காகத் தாமும் சக்கரவர்த்தியைத் துதி செய்யத் தொடங்கினர்; தாமும் ஒரு புகழ் மாலை சூட்டினர்:

'என்அனைய முனிவரரும் இமையவரும்
இடையூறுஎன்(று) உடைய ராறல்,
பன்னகமும் நகுவெள்ளிப் பனிவரையும்
பாற்கடலும் பதும பீடத்(து)
அந்நகரும் கற்பகநாட் டணிநகரும்
மணிமாட அயோத்தி யென்னும்
பொன்னகரும் அல்லாது புகலுண்டோ?
இகல்கடந்த புலவு வேலோய்!'

[அனைய - போன்ற. முனிவரர் - ரிஷி சிரேஷ்டர்கள். இமையவர் - தேவர்கள். பன்னகமும் நகு - பல மலைகளையும் அவமதித்துச் சிரிக்கிற. வரை - மலை. பதும பீடத்து அந்நகர் - (பிரமனது சிங்காதனமாகிய) பத்மாசனத்தையுடைய அழகிய நகரம். கற்பக நாட்டணி நகர் - கற்பக விருட்சத்தையுடைய சுவர்க்க லோகத்திலுள்ள அமராவதி பட்டணம். இகல் - பகை. புலவு - மாமிசம்.]

முனிவர்களுக்கும் தேவர்களுக்கும் இடையூறு ஏற்பட்டால், அதைத் தீர்க்கும் வல்லமையுள்ளவர் யார்? திரிமூர்த்திகளும்

தேவேந்திரனும்தான். அவர்களோடு தசரதனையும் சேர்த்து வைத்துப் போற்றுகிறார் விசுவாமித்திரர். சிவபெருமானுடைய இருப்பிடமான கைலயங்கிரி, திருமால் தங்குமிடமான பாற்கடல், பிரமன் வசிக்கும் சத்தியலோகம், இந்திரன் வாழும் இராஜதானியான அமராவதி பட்டணம் ஆகிய இவற்றோடு தசரத ராஜதானியான அயோத்தி மாநகரத்தையும் சேர்த்து 'மணிமாட அயோத்தி யென்னும் பொன்னகர்' என்று பேரபிமானம் தோன்றப் பேசுகிறார். இதற்கு மேலான ஒரு புகழ் மாலையை எந்தச் சக்கரவர்த்திக்கு எந்த முனிவர்தான் சூட்டப் போகிறார்?

ஆனால் பேசுகிறவர் இராஜ ரிஷியான விசுவாமித்திரர் அல்லவா? ரஜோகுணம் தொனிக்கிறது, 'என் அனைய முனிவரரும்' (என்னைப் போன்ற சிறந்த ரிஷிகளும்) என்று பேச்சைத் தொடங்கும்போதே. தசரதன் இராஜ சிரேஷ்டன் என்றால், தாம் முனி சிரேஷ்டர் என்ற அபிப்பிராயம் தம்மை யறியாமலே குமுறிக்கொண்டு வருகிறது. இப்படி ஆரம்பமாகும் பேச்சைத் தற்புகழ்ச்சியாக வளரவிடாமல், தாம் முனி சிரேஷ்டர்களில் ஒருவரென்று தெரிவித்துக் கொண்டபோதிலும், 'அப்படிப்பட்ட முனி சிரேஷ்டர்களுக்கும் நீயே கதி' என்று சாதுரியமாக முடித்துக் காரியத்திலேயே கண்ணு யிருக்கிறார்.

மேலும் பேசுகிறார் மகரிஷி, சக்கரவர்த்தியின் வீரத்தையும் வண்மையையும் வாயாரப் புகழ்ந்து :

'இன்தளிர்க்கற் பகநறுந்தேன் இடைதுளிக்கும்
நிழலிருக்கை இழந்து போந்து,
நின்றளிக்கும் தனிக்குடையின் நிழலொதுங்கிக்
குறையிரந்து நிற்ப, நோக்கிக்
குன்றளிக்கும் குருமணித்தோட் சம்பரனைக்
குலத்தோடும் தொலைத்து நீகொண்(டு)

அன்றளித்த அரசன்றே, புரந்தரன்இன்(று)
ஆள்கின்ற(து) அரச!' என்றான்.

[ இன் - இனிய. நறுந்தேன் - வாசனையுள்ள தேன். நின்று அளிக்கும் - (ஆதாரமாக) நின்று காக்கும். தனி - ஒப்பற்ற. குன்று அளிக்கும் - குன்றை ஒத்த. குருமணி - ஒளியுள்ள மணி. தோட் சம்பரன் - தோள்களையுடைய சம்பரன் என்னும் அசுரன். புரந்தரன் - இந்திரன். ]

தேவலோகத்திலுள்ள அமராவதி நகரத்தைப்போல் அயோத்தி நகரமும் சாதுக்களுக்குப் புகலிடமென்று சொன்னவர், அமராவதியிலுள்ள தேவேந்திரனுக்கும் இடையூறு ஏற்பட்ட காலத்தில் அயோத்தியே புகலிடமாயிருந்ததென்கிறார். கற்பகச் சோலையில், தேன் துளிக்கும் நிழலிலே, அமைந்துள்ள அந்தச் சிங்காசனத்தை ஒரு காலத்தில் சம்பராசுரன் கைப்பற்றிக்கொண்டானாம். அரசிழந்த இந்திரன் 'புகலிடம் எங்கே?' என்று தேடித் தவித்தானாம். கடைசியாக மண்ணுலகத்தில் அயோத்திக்கு வந்து சேர்ந்து தசரத சக்கரவர்த்தியின் வெண் கொற்றக் குடை நிழலிலே ஒதுங்கிக் குறை யிரந்து நின்றானாம். அந்தப் பரிதாப நிலையைக் கண்டு இரங்கித் தசரதன், துஷ்ட அசுரனை வம்சநாசம் செய்துவிட்டானாம். அப்போது இந்திர பதவி தசரதனுக்கு உரியதாகி விட்டதல்லவா? அந்த இந்திர பதவியை இந்திரனுக்கே கொடுத்துவிட்டானாம். 'இந்திரனுக்கு மீண்டும் பேரும் பதவியும் கொடுத்தாய்! இன்று தேவேந்திரன் ஆளும் அரசு, நரேந்திரனாகிய நீ அன்று கொடுத்த பிச்சைதானே!' என்று துதிக்குமேல் துதி பாடுகிறார் விசுவாமித்திரர்.

என்ன கம்பீரமான வாக்கு! எவ்வளவு இனிமையாகவும் வசீகரமாகவு மிருக்கிறது அந்தக் குரல்! ஆம்: சக்தி மயமான அந்தக் குரல்தான் எப்படிக் கெஞ்சுகிறது, கொஞ்சுகிறது! தசரதனுக்கு மகிழ்ச்சி பொங்கிக்கொண்டிருக்கிறது. விசுவாமித்திரர் பேசிக்கொண்டிருக்கும்போதே, நாணத்தால் தலை குனிந்து கேட்டுக் கொண்டிருந்தவன், மெள்ளத் தலை நிமிர்ந்து முனிவர் முகத்தைப் பார்க்கிறான்.

உரைசெய்யு மளவில்அவன் முகம்நோக்கி,
உள்ளத்தில் ஒருவ ராலும்
கரைசெய்ய அரியதொரு பேருவகைக்
கடல்பெருகக் கரங்கள் கூப்பி,
'அரசெய்தி யிருந்தபயன் எய்தினன்,மற்(று)
இனிச்செய்வ தருளு' கென்று
முரசெய்து கடைத்தலையான் முன்மொழியப்
பின்மொழியும் முனிவன் ஆங்கே.

[முரசு எய்து கடைத்தலையான் - முரசுகள் முழங்குகிற் தலைவாசலை யுடைய சக்கரவர்த்தி. மொழியும் - மொழிவான்.]

கேவலம் முகஸ்துதி யல்ல: முகத் தோற்றம் அப்படியே உறுதிப்படுத்துகிறது அந்த வார்த்தைகளை. தசரதனுள்ளத்தில் உவகை கடல்போலப் பெருகிவிடுகிறது. அறிவாளி யல்லவா? அந்தக் கடலுக்கு அணைபோட முயல்வதுபோல் கைகூப்பி அஞ்சலி செய்து, 'அடியேன் அப்படிச் செய்தேனென்றால் அது என் கடமை தானே: அரசனுயிருந்த பயனைத்தானே பெற்றேன்? இனி அதைக் குறித்துப் பேசாமல் இன்னும் நான் என்ன பணி செய்யவேணு மென்பதை நியமித்தருள்வீராக' என்று கேட்கிறான், பெரும்பணிவு தோன்ற. உடனே அதுதான் சமயமென்று விசுவாமித்திரர் காரியத்தை முடித்துக்கொள்ளப் பார்க்கிறார்.

இந்தப் பாட்டைப் பாடிப் பாடி அனுபவிப்போம். தசரத னுடைய உள்ளத்திலே பெருகிக் கொண்டிருக்கும் உவகை, நம்முடைய உள்ளத்திலும் பரவுகிறது, மணற்பரப்பிலே பாயும் நீர்போல. இவ்வளவு ஓசை நயத்தோடு வந்து விழும் சொற்களிலும் சொற்றொடர்களிலும் பொருள் நிறைந்து பொங்கி வழிகிறது.

உவகைக் கடல் வற்றி வறண்டு போகும்படி செய்து விடுகிறது விசுவாமித்திரர் பதில்:

'தருவனத்துள் யான்இயற்றும் தவவேள்விக்(கு)
இடையூருத் தவஞ்செய் வோர்கள்
வெருவரச்சென்(று) அடைகாம வெகுளியென
நிருதர்இடை விலக்கா வண்ணம்,
" செருமுகத்துக் காத்தி ''யென நின்சிறுவர்
நால்வரினும் கரிய செம்மல்
ஒருவனைத்தந் திடுதி 'யென, உயிர்இரக்கும்
கொடுங்கூற்றின் உளையச் சொன்னன்.

[ தருவனம் - மரங்கள் அடர்ந்த காடு. தவவேள்வி - தவத்தோடு கூடிய வேள்வி. வெருவர - வெருவ - அஞ்சும்படி. அடை - அடைகிற. வெகுளி - கோபம். நிருதர் - அரக்கர். செருமுகத்து - போரில். காத்தி - காப்பாய். செம்மல் - புத்திரன். கூற்று - யமன். உளைய - (மனம்) வருந்த. ]

தவ வேள்விக்கு இடையூருக வரும் புறப் பகைவரான அரக்கர்களுக்கு, உட்பகைகளில் கொடிய காமக்குரோதங்கள் முதலான இராட்சஸ குணங்களை உவமையாக்குவது கவனிக்கத் தக்கது. இந்த உவமை விசுவாமித்திரர் வாயிலாக வருவதும் கவனத்திற்கு உரியது. இந்த மகரிஷியின் அருந்தவத்திற்குக் காமம் வெகுளி முதலியவை இடையூருக விளைந்தன என்பது புராணப் பிரசித்தம். எனவே, இப்பெரியார் வாக்கிலேயே இவருடைய தற்சரிதம் ஒருவாறு பிரதிபலிக்கிறதென்று கருதலாம்.

'செருமுகத்துக் காத்தி' என்று அரசனை நோக்கிக் கூறிப் பின்பு 'என நின்' என்று கூறுகிருர், 'படைகளைத்தான் அனுப்பும்படி சொல்லப்போகிருரோ?' என்று கருதும்படி. பிறகு 'சிறுவர்' என நெருக்கியதும், தசரதன் திகைத்துப் போயிருக்கவேண்டும். முனிவரோ கருமமே கண்ணுக, 'நால்வரினும்' என்கிருர். 'அவர்களில் எவனைக் கேட்கப்போகிருரோ?' என்று அரசன் ஏங்கும்போதே, 'கரிய' என்று வரையறுத்துப் பேசுகிருர். 'அப்படியானுலும் கரிய நிறமுள்ள பரதனை அனுப்பிவிடலாமா?'

என்று அரசன் தளர்ச்சியோடு யோசனை செய்யக்கூடும். கடைசியாகச் 'செம்மல் ஒருவனைத் தந்திடுதி' என்று துணிந்து மூத்தவனைச் சுட்டிக் குறிப்பிடுகிறார். திடீரென்று 'இராமனைத் தந்துவிடு' என்று கேட்டுவிடவில்லை. அவன்மீது சக்கரவர்த்திக்குப் பேரன்பு உண்டென்பதை முனிவர் ஊகித்திருக்கிறார். எனவே, உசிதமாகவும் சாதுரியமாகவும் உரையாடிக் காரியசித்திபெற விரும்புகிறார்.

மகரிஷி இப்போது மகரிஷியாகவே தோன்றவில்லை, சக்கர வர்த்தியின் கண்களில். கொடிய யமனாக மாறிவிடுகிறார்! உயிரை எப்படியாவது கொண்டு போகவேண்டுமென்று வந்த யமன், வழக்கம் போல் அதைக் கொண்டுபோவதற்கு மாறாக, 'நான் யாசகத்திற்குத் தான் வந்திருக்கிறேன்!' என்கிறானாம். நேருக்கு நேராக வந்து அவன், 'நான் யாசிப்பது உன் உயிரைத்தான்: தயவுசெய்து அதைத் தந்துவிடு' என்று ஒருவன் கண் முன்னே நின்று கேட்டால், அந்த மனிதனுடைய மனநிலை எப்படி யிருக்கும்! அதே நிலை — அதே உளைச்சல் — சக்கரவர்த்திக்கும் இப்போது ஏற்படுகிறது.

அதிலும் இந்த 'யமன்' ஒரே அடியாகக் கேட்டுவிடவில்லையாம். முதலில் 'நின் சிறுவர்' என்கிறான். என்றதும், தசரதன் மார்பிலே யாரோ வேல் எறிந்து குத்துவது போலிருக்கிறதாம். பின்பு 'நால்வரினும்' என்றதும், வேல் குழித்த புண்ணில் புரையோடியது போல் தோன்றுகிறதாம். அப்பால் 'கரிய' என்றதும், புரை 'பெரும்புழை' அல்லது பெரிய துவாரமாகிறதாம். கடைசியாகச் 'செம்மல்' என்கிறான். அவ்வளவிலே புரையோடிய புழையில் கனல் நுழைவதுபோல் அந்தச் செய்தி காதிலே நுழைகிறதாம்.

இப்படி யெல்லாம் சக்கரவர்த்தி அடைந்த மனத் துன்பத்தை இதோ பாருங்கள், ஏதோ ஒரு ஜாலக்கண்ணாடியால் பார்ப்பதுபோல:

எண்ணிலா அருந்தவத்தோன் இயம்பியசொல்,
　　மருமத்தின் எறிவேல் பாய்ந்த
புண்ணிலாம் பெரும்புழையிற் கனல்நுழைந்தால்
　　எனச்செவியிற் புகுத லோடும்,
உள்நிலா வியதுயரம் பிடித்(து)உந்த
　　ஆருயிர்நின்(று) ஊச லாடக்
'கண்ணிலான் பெற்றிழந்தான்!' எனஉழந்தான்
　　கடுந்துயரம் கால வேலான்.

[எண் - எண்ணம். மருமம் - மார்பு. ஆம் - உண்டான. புழை - துவாரம். உள் நிலாவிய - உள்ளத்தில் உண்டான. உந்த - தள்ள. ஊசல் - ஊஞ்சல். உழந்தான் - வருந்தினன். கால வேலான் - யமனையொத்த வேலாயுதத்தையுடைய தசரதன்.]

எவ்வளவு சோகத்திலே தள்ளாடித் தடுமாறித் தயங்கி வருகிறது பாட்டு!

விசுவாமித்திரர் எவ்வளவு சாதுரியமாகப் பேசிய போதிலும், எத்தகைய அருந்தவத்தை யுடையவராயிருந்த போதிலும், தம் வார்த்தையால் தசாதனுக்கு 'இவ்வளவு துன்பம் உண்டாகுமே!' என்று எண்ணிப் பார்த்தாரில்லை. அவருடைய வார்த்தை செவியில் புகுந்ததும், உள்ளத்தில் உண்டாகிய துன்பம் உயிரைப் பிடித்து வெளியே தள்ளியதாம். ஊஞ்சலைப் பிடித்துத் தள்ளத் தள்ள, அது திரும்பத் திரும்ப முன்னிருந்த இடத்திற்கு வருகிற தல்லவா? துன்பம் தள்ளத் தள்ள உயிரும் உடலுக்கு மீண்டும் மீண்டும் திரும்பியதாம்.

இப்படி உள்ளும் புறமுமாக ஊஞ்சலாடும் உயிரோடு கூடிய தசரதன், 'ஐயோ! நான் மலடனாகவே யிருந்திருக்கலாகாதா? எனக்கு ஏன் இந்தப் பிள்ளை பிறந்திருக்க வேண்டும்?' என்றுகூட எண்ணினன். பிறவிக் குருடன் வாழ்க்கை முழுதும் குருடனாகவே



8

யிருந்துவிட்டால் அவனுக்கு விசேஷமான வருத்தமில்லையாம். ஒரு சமயம் தெய்விகமாகக் கண்களைப் பெற்று உலகிலுள்ள அழகிய பொருள்களைக் கண்டு களித்துக் கொண்டிருக்கும்போதே அக் கண்களை மீளவும் இழக்க நேர்ந்துவிட்டால், அவன் துன்பத்தை யாரால் அளவிட்டுரைக்க முடியும்?

யமன்தான் விசுவாமித்திர ரூபத்தில் வந்து இப்படியெல்லாம் தன்னை ஹிம்ஸிக்கத் தொடங்கிவிட்டான் என்று எண்ணிக் கொண்டிருந்தவன், 'இந்த மரணவஸ்தையிலிருந்து எப்படித்தப்பலாம்?' என்று ஆலோசித்து ஒருவாறு துயரம் நீங்கி முனிவரை நோக்கி, 'பெரியவரே! இராமன் சிறு பிள்ளை; ஆயுதத் தேர்ச்சி யில்லாதவன். தாங்கள் உத்தரவு கொடுத்தால், எவர் புகுந்து இடையூறு செய்த போதிலும், அந்த இடையூற்றுக்கு இடையூறாக நின்று நானே யாகத்தைக்காப்பேன்: புறப்படுக' என்று ஆத்திரமாகச் சொன்னான்.

உடனே கோபம் பொங்கி விட்டது முனிவருக்கு. விசுவாமித்திர கோபம் என்றால் சாமானியமா? புருவம் மேலேறிக் கண்கள் சிவக்கத் திசைகளெல்லாம் இருண்டு போயினவாம். அந்தக் கோபச் சிரிப்பைத் தான் என்னென்று சொல்வது? முனிவன் எழுந்த அந்தப் பர பரப்பிலே, 'உலகத்துக்கே முடிவு வந்து விட்டதோ?' என்று தேவர்கள் சந்தேகித்தார்களாம். கோபாக்கினியில் வெயிலே மறைந்து, அசையும் பொருள்களோடு அசையாப் பொருள்களும் நிலைபெயர்ந்து சுழன்றனவாம்.

விசுவாமித்திரரைப் பழைய எதிரியாகிய வசிஷ்டர் சாந்தப் படுத்தினர். வசிஷ்டர் பிரமரிஷி; மனத்தூய்மையோடு உயர்ந்த தவமும் உடையவர்; சிறந்த தத்துவஞானி; சாந்தகுண பூஷணர். இராஜ ரிஷியாகிய விசுவாமித்திரரோ சிறந்த தவசியானாலும் கோபம் முதலிய சில குறைகளை யுடையவர்: எனினும் வசிஷ்டர் முதலிய பிரமரிஷிகளைக் காட்டிலும் உலக அனுபவமும் பரந்த நோக்கமும் உடையவர். இவர் கூட்டுறவால் இராமனுக்கு விசேஷ நன்மை

விளையுமென்பதும், அவன் கற்ற கல்வி விரிந்து பெருகி நிறைவு பெறுமென்பதும் வசிஷ்டருக்குத் தெரியும்.

தசரதனை நோக்கி வசிஷ்ட மகரிஷி,

'பெய்யு மாரியால் பெருகு வெள்ளம்போய்
மொய்கொள் வேலைவாய் முடுகு மாறுபோல்,
ஐய! நின்மகற்(கு) அளவில் விஞ்சைவந்(து)
எய்து காலம்இன்(று) எதிர்ந்த' தென்னவே,

[மொய் - நெருக்கம். வேலைவாய் - கடலிலே. முடுகும் ஆறு - விரைந்து அடையும் விதம். மகற்கு - மகனுக்கு. அளவில் விஞ்சை - அளவில்லாத வித்தைகள்.]

—தசரதனும் குருவின் வார்த்தையை ஏற்றுக் கொள்கிறான்.

இராமன் ஏற்கெனவே கல்விக் கடல்தான். எனினும் தண்ணீர் நிறைந்திருக்கும் கடலில்தானே, மழை பெய்து பெருகும் வெள்ள மெல்லாம் விரைந்து போய்ச் சங்கமமாகிறது. எனவே 'இன்றைக்கு விசுவாமித்திர ரூபத்தில் காலன் வரவில்லை: அளவில்லாத வித்தைகள் உன் மகனை வந்தடையும் நல்ல காலம்தான் வந்திருக்கிறது!' என்று சொன்னார் வசிஷ்டர். 'உன் மகனால் முனிவருக்குக் காரியம் ஆகவேணுமென்பது வியாஜம்: உண்மை யில் அவரால் உன் மகனுக்கு அளவிறந்த நன்மை உண்டாகும்' என்பது வசிஷ்டர் கருத்து.

தசரதன் உடனே இராமனை அழைத்து வரும்படி ஏவுகிறான். 'திருவின் கேள்வனை' (இலட்சுமி நாயகனை) அழைத்து வாருங்கள் — என்பது சக்கரவர்த்தியின் வார்த்தை. 'இராஜ்ய லட்சுமிக்கு உரியவன், மூத்த மகன்' என்றுதான் சக்கரவர்த்தி குறிப்பிட்டிருக்க வேண்டும். எனினும் சீதா கல்யாணம் சமீபித்திருப்பதால், இந்த மங்களமான வார்த்தை தசரதன் வாயிலிருந்து விழுந்தது ஒரு சுப சூசகம் என்னலாம்.

இராமன், தம்பி பின்தொடர வந்து தந்தையை அடைகிறான். 'எந்தத் தம்பி!' என்று கேட்க வேண்டியதில்லை. குழந்தைப் பருவ முதற்கொண்டே இராமனைப் பிரியாமலிருக்கும் தம்பி இலட்சுமணன் தானே. தசரதன் இராமனை மாத்திரம் அழைத்திருந்தும், அந்தத் தம்பியும் நிழல்போல வருகிறான். இராமனுக்குத் துணையாக அவனும் போவது நலமென்று கருதும் தசரதன், முதலில் மறுத்து அபசாரப் பட்டதற்கு அபராதம் செலுத்துவது போல் இராமனோடு இலட்சுமணனையும் சேர்த்து அனுப்பி வைக்கிறான்.

அவர்களை விசுவாமித்திரருக்குச் சுட்டிக் காண்பித்து, 'இவர்களுக்கு இனி நீயே தந்தை; தாயும் நீயே!' என்று சொல்லுகிறான். 'இதத்தைச் செய்யும் நல்ல தந்தையும், பிரியத்தைச் செய்யும் ஒப்பற்ற தாயும் நீயே!' ('நற்றந்தை நீ; தனித் தாயும் நீ!') என்று அடைக்கலமாகக் கொடுக்கிறான். பிரமரிஷியாகிய வசிஷ்டரை ஞானத் தந்தையாகவும் ஞானத் தாயாகவும் கொண்டு அறிவுப் பயிற்சிபெற்ற இராம லட்சுமணர், விசுவாமித்திரருக்கு ஞானபுத்திரராகி உலகியலும் கற்று அறம் வளர்க்கப் போகிறார்கள்.

இராமன் ஆயுதபாணியாகி விசுவாமித்திரரோடு புறப்பட்டான்.

50 வென்றி வாள்புடை விசித்து, மெய்ம்மைபோல்
என்றும் தேய்வுருத் தூணி யாத்(து),இரு
குன்றம் போன்றுயர் தோளிற் கொற்றவில்
ஒன்று தாங்கினன், உலகம் தாங்கினன்.

[வென்றி - வெற்றி. புடை - புறத்திலே. யாத்து - கட்டிக்கொண்டு. கொற்றம் - வெற்றி.]

உடைவாளை இடப்புறத்திலே கட்டி அம்பறாத்தூணியைத் தோளிலே கட்டிக் கொண்டான். எடுக்க எடுக்க அம்பு குறையாத அந்தத் தூணிக்கு என்றும் தேயாத சத்தியத்தை உபமானமாக்குகிறான். இராம வீரம் சத்திய வீரம் என்பது குறிப்பு. 'வில் ஒன்று

தாங்கினுன்': எதற்காக? 'உலகம் தாங்கினுன்' என்கிருன் கவிஞன். உலகத்தைத் தாங்கவே வில்லைத் தாங்கினுனும்: சத்தியத்தைக் காப்பாற்றவே குறி தவருத அம்புகளையும் எடுத்துக்கொண்டானும், 'அறம் வளர்க்கும் கண்ணுளன்.'

தன்னைப்போலவே ஆயுதபாணியான தம்பியுடன் இராமன் அரசனிடம் விடைபெற்றுக் கொண்டான். அது தந்தைக்கு எப்படி யிருந்தது, தெரியுமா? அவனுடைய இனிய உயிரானது எப்படியோ உடம்பிலிருந்து வெளிப்பட்டு எதிரே நின்று, 'நான் போய் வருகிறேன்!' என்று சொல்லிப் பயணப்பட்டாற்போ லிருந்ததாம்.

அன்ன தம்பியும் தானும், ஐயனும்
மன்னன் இன்னுயிர் வழிக்கோண் டாலெனச்
சொன்ன மாதவற் ருெடர்ந்த சாயைபோல்,
பொன்னின் மாநகர்ப் புரிசை நீங்கினுன்.

[அன்ன - அப்படிப்பட்ட. ஐயன் - தந்தை. மாதவற்ருெடர்ந்த - மகரிஷியைத் தொடர்ந்த. புரிசை - மதில்.]

'மன்னன் இன்னுயிர் வழிக்கொண்டாலென'ப் புறப்பட்டவர்கள் விசுவாமித்திரரை நீங்காமல் அவருடைய நிழல்போலச் சென்ருர்க ளாம் 'தம்பியும் தானும்......நீங்கினுன்'—'நீங்கினுர்' என்று சொல்லவில்லை. அவ்வளவு ஒருமையாகிவிட்டது அந்தச் சகோதர ஒற்றுமை.

இராமனது கல்விப் பயிற்சியைப் பூர்த்தி செய்வதும், முடிவில் அவனுக்கு மணஞ் செய்விப்பதும், இம்முனிவரது அடிப்படையான நோக்கமென்று ஊகித்தல் கூடும். எனவே, விசுவாமித்திரரை இராமனுடைய இரண்டாவது 'மகாகுரு' என்றும், திருமணத் தூத ரென்றும் சொல்லலாம்.

பாலகாண்டத்தின் உயிர் நாடியான அவதாரம், திருமணம் என்னும் இரு பெரு நிகழ்ச்சிகளையும் இணைக்கும் ஒரு பாலமாக அமைவது விசுவாமித்திரர் வருகை. இம்முனிவர் வசத்திலே இராம லட்சுமணர் ஒப்புவிக்கப்படும் நிகழ்ச்சியைக் குறிக்கும் இந்தக் 'கையடைப் படல'த்தைப் (கையடை - அடைக்கலம்) பாலகாண்டம் என்ற 'கவிதையஞ்சோலை'யில் பச்சிலைகளுக்கிடையே கோமளமாக அரும்பிவரும் ஓர் 'அருமந்த அரும்பு' என்று சொல்லவேண்டும்.

## 8. கன்னிப் போர்

இலைகளில்லாமல் உலர்ந்துபோன மூங்கில்களும், பேய் உடல் பிளந்து நிற்பதுபோல நிற்கும் வைரம் பாய்ந்த கள்ளி மரங்களும்தான் காணப்படுகின்றன அந்தக் காட்டிலே. நிலமோ, ஈரப்பசை முழுவதையும் உறிஞ்சிவிட்டுச் சூரியன் உமிழ்ந்த சக்கைபோலக் காண்கிறது. அந்த வெப்பத்தை வருணிக்க நாவும் கூசுகிறதாம், 'வெந்துபோவோமே!' யென்று. 'ஏக வெங்கனல் அரசிருந்த' — அதாவது, அக்கினி தேவனே ஏகபோக ஆட்சி நடத்துகிறானென்று சொல்லும்படி யிருந்த — அந்தப் பாலைவனத்திலே அடி வைக்கிறார்கள், விசுவாமித்திர இராம லட்சுமணர் மூவரும்.

அயோத்தியைக் கடந்து சரயு நதியைத் தாண்டி அன்று இரவு ஒரு சோலையிலே தங்கி மறுநாள் நடுப்பகலில் பாலைவனத்தை யடைந்ததும், இராமன் முனிவரை நோக்கி, 'சக்கரவர்த்தியின் இராஜ்யத்தில் ஒரு பகுதி இப்படி அழிந்துபோனதற்குக் காரணமென்ன?' என்று ஆச்சரியத்தோடு கேட்டான். அதற்கு உத்தரமாக விசுவாமித்திரர் ஒரு கொடிய இராட்சஸியின் கதையைச் சொன்னார். சொல்லி,

தூடக அர(வு)உறழ் சூலக் கையினள்,
காடுறை வாழ்க்கையள், கண்ணிற் காண்பரேல்
ஆடவர் பெண்மையை அவாவும் தோளினாய்!
தாடகை யென்ப(து)அச் சழக்கி நாமமே

[ சூடகம் - கைவளை ; கங்கணம். அரவு - பாம்பு. உறழ் - பொருந்திய. உறை - வசிக்கிற. அவாவும் - ஆசைப்படும். சழக்கி - குற்றவாளி. ]

என்று பேர்வழியை வருணித்து அந்தப் பெயரையும் குறிப்பிட்டார்.

விஷப்பாம்பைக் கங்கணமாக அணிந்திருப்பதே அரக்கியின் விஷம்போன்ற நெஞ்சுக்கும் சங்கற்பத்திற்கும் ஓர் அறிகுறி. அவள் கையும் பாம்புபோலிருக்கிறதாம். அந்தக் கையிலுள்ள பயங்கரமான சூலாயுதமும் பாம்புபோல் ஒடுங்கி நீண்ட உடலும் விரித்த படம் போன்ற தலையும் உடையது. தான் பாழாக்கிய இந்தப் பிரதேசத்திலேதான் அந்தக் குற்றவாளி வசிக்கிறாளென்றும் முனிவர் தெரிவிக்கிறார். இராமனைப் பார்த்துக்கொண்டே பேசிக் கொண்டிருந்தவர் அந்தப் பயங்கரியின் வரலாறு சொல்லிப் பெயரையும் சொல்வதற்கு முன்னமே இராமனுடைய திவ்ய சௌந்தரியத்தில் ஈடுபட்டு, 'கண்ணில் காண்பரேல் ஆடவர் பெண்மையை அவாவும் தோளினாய்!' என்று அவனை ஆசைதீர அழைக்கிறார். புருஷோத்தமனை இராமனுடைய பேரழகு விசுவாமித்திரரின் கண்ணையும் கருத்தையும் அடிக்கடி வசீகரித்து விடுகிறதென்று ஊகிக்கலாம். இராம சௌந்தரியம் தசரதனை வசீகரித்ததுபோல், இந்த ஞானத் தந்தையையும் வசீகரிக்கிறது. 'காதலித்த உருவாகி அறம் வளர்க்கும்' தெய்விக அழகல்லவா?

'தாடகை ஒருத்தியே இப்படி நாட்டின் வளத்தையும் வனப்பையும் அழித்தாளா?' என்று அந்த அழகனுள்ளத்திலே ஒரு சந்தேகம் தோன்றக் கூடுமல்லவா? அந்தச் சந்தேகத்தையும் எதிர் பார்த்தவர் போல் பேசினார் முனிவர் :

> **உளப்பெரும் பிணிப்பரு உலோபம் ஒன்றுமே**
> **அளப்பருங் குணங்களை அழிக்கு மாறுபோல்,**
> **கிளப்பருங் கொடுமைய அரக்கி, கேடிலா**
> **வளப்பெரு மருதவைப்(பு) அழித்து மாற்றினள்.**

[ உளப்பெரும் பிணிப்பு - உள்ளத்தின் பெரிய பந்தம். அரு - நீங்காத. கிளப்பரு - சொல்லமுடியாத. வளப்பெரு மருதவைப்பு - வளம் பொருந்திய பெரிய மருதநிலம் : மருதம் - வயல்களும் வயல்கள் சூழ்ந்த இடமும். ]

ஒருவனுக்கு எத்தனை நற்குணங்கள் இருந்தபோதிலும் இராட்சஸ குணமான உலோபம் ஒன்றே போதுமாம், அந்த நற்குணங்களை யெல்லாம் கெடுத்து உள்ளத்தை வறண்டொழிந்த பாலைவனமாக்குவதற்கு. அப்படி அந்த இராட்சஸி ஒருத்தியே விசாலமான வயற்காடுகளையும் அவற்றின் வளங்களையும் அழித்து விட்டாள் என்கிறார். எவ்வளவு பொருத்தமான — உலகியல் அறிவு பொதிந்த — உபமானம்!

இலங்கை யரசனுன இராவணன் கட்டளையினுலேயே அவள் தம்முடைய யாகத்தைக் கெடுக்கிறுளென்று குறிப்பிட்டுத் தீமை களுக்கெல்லாம் மூலகாரணமான இராட்சஸ ஏகாதிபத்தியத்தையும் பேச்சோடு பேச்சாய் ஞாபகப்படுத்தித் தாடகையின் செய்தியை முடித்தார்.

‘ முன்னுல(கு) அழித்து,முறை நின்றஉயி ரெல்லாம்
தன்னுண வெனக்கருது தன்மையினள் ; மைந்த !
என்இனி உணர்த்துவ(து) ? இனிச்சிறிது நாளில்
மன்னுயிர் அனைத்தையும் வயிற்றில்இடும் !’ என்றுன்.

[ முன்உலகு - பழமையான இந்த உலகத்தை. முறை - ஒழுக்கம் ; நீதி. உணர்த்துவது - சொல்லவேண்டுவது. ]

‘ மைந்தனே ! நல்லொழுக்கத்திலே நிலை நின்ற உயிர்களைத் தனக்கு உரிய உணவாகக் கருதும் இயல்பினை யுடையவள் அவள். அந்த உயிர்களையெல்லாம் இன்னம் சிலநாளில் அந்த இராட்சஸி தன் வயிற்றுக்குள்ளே தள்ளிவிடுவாள் ! ’ என்றுர். ஜீவகாருண்யத் திற்காகவே அவளைக் கொல்ல வேண்டுமென்பது குறிப்பு.

அது கேட்ட இராமன் பூக்கள் சூட்டிய தன் முடியை அசைத்துக் கொண்டு, ‘ இப்படிப்பட்ட தொழிலைச் செய்கிறவள் எங்கே யிருக் கிறுள் ?’ என்று வினவினுன்.

கைவரை யெனத்தகைய காளையுரை கேளா,
ஐவரை அகத்திடை அடைத்தமுனி, ‘ ஐய !



9

இவ்வரை இருப்பதவள்' என்பதனின் முன்(பு)ஓர்
மைவரை நெருப்பெரிய வந்ததென வந்தாள்.

[ கைவரை - துதிக்கையுடைய மலைபோன்ற யானை. கேளா - கேட்டு. ஐவரை - (இங்கே) பஞ்சேந்திரியங்களை. வரை - மலை. மைவரை - கரிய மலை. ]

இராமனுக்கு விசுவாமித்திரர் அருகே யிருந்த ஒரு மலையைச் சுட்டிக் காட்டி, 'இந்த மலைதான் அவள் இருப்பது!' என்று சொன்னார். அப்படிச் சொல்லி முடிப்பதற்கு முன்பே, ஒரு கரியமலை தங்களுக்கு எதிரே நடந்து வருவதுபோலத் தோன்றியதாம் அம்மூவருக்கும். பிறகு அது 'எரிமலை தானோ?' என்று பிரமிக்கும் படி நெருப்பைக் கக்கிக்கொண்டு வந்தது! ஆம், அந்த 'மாமிச பர்வதம்' தான் தாடகை!

அப்படிக் கரிய மலை போன்ற உடலோடும், செம்பட்டை மயிரோடும், கோபாக்கினியோடும் வந்தவள் இம்மூவரையும் கண்களில் நெருப்புப் பொறிகள் பறக்கப் புருவம் நுனி துடிக்க விழித்துப் பார்த்தாள். என்ன கோரமான வாயும் பல்லும்! என்ன விழி! என்ன விழிப்பு!

இறைக்கடை துடித்தபுரு வத்தள்,எயி(று) என்னும்
பிறைக்கடை பிறக்கிட மடித்தபில வாயள்,
மறக்கடை அரக்கி,வட வைக்கனல் இரண்டாய்
நிறைக்கடல் முளைத்தென நெருப்பெழ விழித்தாள்.

[ இறை - சிறிது. கடை - நுனி. எயிறு - பல்; (இங்கே) கோரப்பல். பிறை - இளஞ்சந்திரன். கடை - கடைவாய். பிறக்கிட - வெளியே விளங்கும்படி. பிலம் - குகை. மறக்கடை - பாவத்தின் முடிவு. வடவைக் கனல் - வடவாமுகாக்கினி. நிறைக்கடல் - நிறைவுள்ள கடல். ]

கோரப்பற்கள் பிறைச் சந்திரர்களைப்போல் கடைவாயில் வெளியே தெரியும்படி மடித்துக் கொண்டிருந்தாள், அந்தக் குகை போன்ற வாயை. கரிய கடலிலே வடவாமுகாக்கினி இருகூறுகித் தோன்றி

ஜொலித்து எரிவதுபோல் சிவந்து விளங்கின கண்கள், அந்த முகத்திலே! பாவத்தின் சிகரமே அப்படி வந்து நின்றதாம்.

பாடிப் பாடிப் பாருங்கள்: இதன் வல்லோசை எவ்வளவு நன்ருய்ப் படம் பிடித்துக் காட்டுகிறது, தாடகையின் வலிய கொடிய தோற்றத்தையும் குணஞ் செயல்களையும் என்று.

வருகையும் பார்வையுமே இப்படி யென்ருல், இந்த அரக்கியின் ஆரவாரத்தையும் அட்டகாசத்தையும் என்னவென்று சொல்வது?

ஆர்த்(து),அவரை நோக்கிநகை செய்(து),எவரும் அஞ்சக்
கூர்த்தநுதி முத்தலை அயிற்கொடிய கூற்றைப்
பார்த்(து),எயிறு தின்று,பகு வாய்முழை திறந்(து),ஓர்
வார்த்தைஉரை செய்தனள் இடிக்கும்மழை அன்னுள்.

[ஆர்த்து - ஆரவாரஞ்செய்து. கூர்த்த நுதி - கூர்மையான நுனி. அயில் - சூலம். படு - பிளவு பட்ட. முழை - குகை. மழை - மேகம்.]

'கடக்கரும் வலத்(து)எனது காவல்இது: யாவும்
கெடக்கரு அறுத்தனன்! இனிச்சுவை கிடக்கும்
விடக்(கு)அரி(து) எனக்கருதி யோ?விதிகொ(டு) உந்தப்
படக்கருதி யோ?பகர்மின் வந்தபரி(சு)' என்ருள்.

[கடக்க அருவலம் - (எவராலும்) கடக்க முடியாத பலத்தையுடைய. விடக்கு - மாமிசம். கொடு - கொண்டு. உந்த - பிடித்துத் தள்ள. பட - நாச மடைய. பரிசு - விதம்.]

தாடகை ஆரவாரஞ் செய்துகொண்டு இம்மூவரையும் நோக்கி ஒரு சிரிப்புச் சிரித்தாளாம். அந்தச் சிரிப்பிலேதான் என்ன இகழ்ச்சி! பிறகு சூலாயுதம் என்ற அந்தக் கொடிய யமனை ஒரு பார்வை பார்த்தாளாம், 'அவர்களுடைய உயிரை உனக்கு விருந்தாக்குவேன்!' என்று அதை உத்ஸாகப்படுத்துவது போலே. அப்பால் பற்களைக்

கடித்து வாயைக் குகைபோல் திறந்து இடிக்குரலில் பேசத் தொடங்கினள்.

தாடகையின் பேச்சென்றால், எப்படி யிருக்குமோ? — என்று நினைக்கிறோம். கேளுங்கள். 'இது என் இராஜ்யமாயிற்றே!' என்கிறாள். இந்த இராஜ்யத்தைத்தான் எவ்வளவு அழகாய்க் காவல் செய்கிறாள் இந்த அரசி! 'யாவும் கெடக் கரு அறுத்தனன்!' என்று பெருமை பாராட்டுகிறாள். கருவும் இல்லாதபடி உயிர்களை அழித்த இந்த 'மகராசி'யின் மாட்சியே மாட்சி: அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம்! 'சுவையுள்ள மாமிசம் இனிமேல் எனக்கு இங்கே கிடைக்காது என்பது உங்களுக்கு எப்படித் தெரிந்ததோ? எனக்கு உணவு தரவேணுமென்று உடம்பை அருமையாக வளர்த்துக்கொண்டு வந்திருக்கிறீர்களே! உங்கள் கருணையே கருணை! உங்கள் தியாகமே தியாகம்! உங்கள் புத்தியே புத்தி!' என்று பரிகசிக்கிறாள். 'அன்றி, விதியே — ஆம், என் அதிர்ஷ்டமும் உங்கள் துரதிர்ஷ்டமுமாகிய விதிதான் — பிடர் பிடித்துத் தள்ள வந்தீர்களோ? சொல்லுங்கள்' என்று பயமுறுத்துகிறாள் பாலைவன ராணி.

இப்படி யெல்லாம் உறுமிக் காலால் நிலத்தை உதைத்துக் கொண்டு, சூலத்தை இவர்கள் மார்பிலே எறிவேனென்று தீர்மானித்து விட்டாள். அவளைக் கொல்ல வேண்டுமென்ற விசுவாமித்திரர் கருத்தை இராமன் அறிந்திருந்தும் அம்பு தொடுத்தானில்லை. தங்கள் உயிருக்கே ஆபத்தான செயலை அவள் செய்யத்தொடங்கி யிருந்தும், தற்காப்பைக் குறித்தும் யோசித்தானில்லை. 'பெண்ணென மனத்திடை பெருந்தகை நினைந்தான்.'

இராமன் கருத்தை விசுவாமித்திரரும் ஊகித்தறிந்து, 'தாடகையையும் பெண்ணென்று எண்ணுவதோ?' என்ற கருத்து அமைய,

'தீதென்(று) உள்ளவை யாவையும் செய்(து),எமைக்
கோதென்(று) உண்டிலள்: இத்தனை யேகுறை!

யாதென்(று) என்னுவ(து) இக்கொடி யாளையும்?
மாதென்(று) என்னுவ தோ? மணிப் பூணினய்!'

[ கோது - சக்கை. பூண் - ஆபரணம். ]
என்றார்.

தீதென்று உள்ள எல்லாவற்றையும் செய்து உயிர்களையெல்லாம் வதைக்கிறவளென்று முனிவரும் சொன்னர்: 'உயிர்க்குலத்தைக் கருவறுத்து வருகிறேன்!' என்று தாடகையும் பெருமையாகச் சொல்லிக்கொண்டாள். எனினும் இராமன் உள்ளத்தில் இவ் விஷயமாய் ஒரு சந்தேகம் தோன்றக்கூடுமேயென்று விசுவாமித்திரர் எண்ணினராம். 'ஜீவ ஹிம்ஸையே தொழிலாகக் கொண்டவள் இந்த முனிவரைத் தின்னமல் விட்டுவிட்டாளே!' என்று நினைக்கலா மல்லவா? அந்தச் சந்தேகத்தை எதிர்பார்த்துத்தான், 'எமைக் கோதென்று உண்டிலள்: இத்தனையே குறை!' என்று சொன்னர் முனிவர். தவமும் யாகமும் செய்து வற்றிப்போய் எலும்பும் தோலுமாயிருக்கிறா ரல்லவா? எனவே, 'இந்த உடம்பு சாரமற்ற சக்கை!' என்றுதான் தின்னமல் விட்டு வைத்தாளாம். இதனல் தான் இவரைப்போன்ற முனிசிரேஷ்டர்கள் பிழைத்திருக்கிறார் களாம். 'இப்படிப்பட்ட பேர்வழியைப் பூதம், பேய், துஷ்ட மிருகம் முதலிய வர்க்கங்களில் எந்த வகுப்பிலே சேர்த்து எண்ணு வது?' என்பது தெரியவில்லை. வேறு எந்த இனத்தில் சேர்த் தாலும், தாய்க்குலமாகிய பெண் குலத்தில் மட்டும் சேர்ப்பது தகாது, தகாது — என்கிறார் விசுவாமித்திரர்.

பிறகு யமனைக் காட்டிலும் தாடகை கொடியவள் என்றார் முனிவர்.

'சாற்று நாள்அற்ற(து)' என்று தருமம்பார்த்(து),
ஏற்றும் விண்ணெனப(து) அன்றி, இவளைப்போல்
நாற்றம் கேட்டலும் தின்ன நயப்பதோர்
கூற்றும் உண்டுகொல்? கூற்(று)உறழ் வேலினய்!

[ சாற்றும் நாள் - (ஊழ்வினையின்படி) விதித்துள்ள ஆயுள் நாள். நாற்றம் - வாசனை. உண்டுகொல் - உண்டோ. கூற்றுறழ் - யமனைப் போன்ற. ]

யமனைக் கொடியவனென்று உலகம் சொல்லுகிறதல்லவா? அவனே ஆயுள் முடிந்தவர்களைப் பார்த்துத்தானே கொண்டு போகிறான். ஆகவே, அவன் தருமம் பார்க்கிறவன்; தருமராஜா. இந்தப் புதிய யமனுக்கோ அப்படிப்பட்ட கவலையே கிடையாது. ஆயுளையும் பார்க்கமாட்டாள்; அறத்தையும் பார்க்கமாட்டாள். வாசனையை மோப்பம் பிடித்து அறிந்துகொண்டாலே போதும். இல்லை: 'நாற்றம் கேட்டலும்' தின்ன விரும்புகிறாளாம். 'நரவாசனை வீசுகிறது!' என்று யாராவது சொல்லக் கேட்டாலும் போதுமாம். உடனே ருசி பார்க்கக் கிளம்பி விடுகிறாள்! — என்கிறார் விசுவாமித்திரர்.

கடைசியாக முனிவர் தாம் தருமம் பார்த்தே பேசுவதாகக் கூறினார்.

'ஈறில் நல்லறம் பார்த்திசைத் தேன்;இவட்
சீறி நின்றிது செப்புகின் றேனலேன்;
ஆறி நின்ற(து) அருளன்(று): அரக்கியைக்
கோறி' யென்றெதிர் அந்தணன் கூறினன்.

[ ஈறில் - முடிவில்லாத. இவட்சீறி - இவளைச் சீறி. கோறி - கொல் வாயாக. அந்தணன் - ஜீவகாருண்ய மூர்த்தியான விசுவாமித்திரர். ]

தருமம் என்ற சட்டப் புஸ்தகத்தைப் பார்த்துத்தான் இவளுக்கு மரண தண்டனை விதிக்கிறேன் என்றார்.

'என்னுடைய மனநிலை ஒரு நீதிபதியின் மனநிலை தான்: எனக்கு இவள்மேல் கோபம் கிடையாது' என்கிறார். 'இதைக் குறித்துப் பொறுமையோடு பின்னால் பார்த்துக்கொள்வோமென்று நீ நினைத்தால், அது அருளாகாது!' என்றும் இராமனுக்கு எச்சரிக்கை செய்து

விடுகிறார். 'ஆறி நின்றது அருளன்று' என்று கூறுவதைக் கவனியுங்கள். ஏன்? 'இனிமேல் அரக்கி செய்யும் கொலைகளுக்கெல்லாம் நீ பொறுப்பாளி!' என்கிறார். 'தாடகையைக் கொல்லவேணும்; இப்போதே கொல்லவேணும்; தயங்காமல் கொல்லவேணும்; இது தான் அருள்! அதுவே இவளுக்கும் அருள் செய்வதாகும். ஏனென்றால் இவள் பாவச் சுமையைக் ஒழிப்பதற்கு வேறு வழியே கிடையாது' என்கிறார் விசுவாமித்திரர். இப்படிச் சொல்லும் முனிவரை உயிர்களுக்கு அருள் பூண்டொழுகும் அந்தணனென்று பாராட்டுகிறான் கவிஞன்!

இந்த வாதத்திற்கு இராமன் என்ன பதில் சொல்லுகிறான்? 'மெய்ய! நின்உரை வேதமெ னக்கொடு — செய்கை யன்றோ, அறம் செயு மாறென்றான்.' மெய்யைக் குறித்தும், அருளைக் குறித்தும் எத்தனையோ சோதனைகளைச் செய்து பார்த்த நிபுணர் விசுவாமித்திரர். எனவே, 'உம்முடைய வார்த்தையை வேதமென்று கொண்டு செய்வது தான் அறம் செய்யும் முறை' என்று ஒப்புக்கொள்ளுகிறான் இராமன்.

இப்படி ஒப்புக்கொண்டும் பளிச்சென்று தாடகைமேல் அம்பு போடவில்லையாம். அவள்தான் போர் தொடங்குகிறாள், அவன் கருத்தை ஊகித்துக்கொண்டு.

கங்கைத் தீம்புனல் நாடன் கருத்தையும்,
மங்கைத் தீஅனை யாளும் மனக்கொளாச்
செங்கைச் சூலவெந் தீயினைத் தீயதன்
வெங்கண் - தீயொடு மேற்செல வீசினாள்.

[கங்கைத் தீம்புனல் நாடன் - இராமன். மனக்கொளா - மனத்திலே கொண்டு. வெந்தீ - கொடிய நெருப்பு. தீய — கொடிய. வெங்கண் - கொடிய கண்கள்.]

பெண் வடிவம் கொண்ட தீ யென்கிறான் தாடகையைக் கவிஞன். இவள் கண்ணிலும் தீ; கையிலும் தீ! கண்ணிலே கோபத்தீ;

கையிலே அழலும் சூலமாகிய தீ. தானும் தீயைப்போல அழன்று கொண்டே, சூலாயுத மென்ற தீயைக் கண்களில் வீசும் கோபத்தீயோடு இராமன் மேலே செல்லும்படி வீசினுள்.

இப்போதுதான் இராமன் அம்பைத் தொடுகிருனும். ஆனுல் அவளைக் கொல்வதற்காக அல்ல ; தற்காப்பிற்காகத்தான்.

மாலும் அக்கணம் வாளியைத் தொட்டதும்,
கோல விற்கால் குனித்ததும் கண்டிலர் ;
கால னைப்பறித் துக்கடி யாள்விட்ட
சூலம் இற்றன துண்டங்கள் கண்டனர்.

[ மால் - விஷ்ணுவின் அவதாரமான இராமன். வாளி-பாணம். கோல வில் - அழகிய வில். குனித்ததும் - வளைத்ததும். கடியாள் - கொடியவள். ]

இராமன் பாணத்தைத் தொட்டதையும், வில்லை வளைத்ததையும் ஒருவரும் பார்க்கவில்லையாம். தாடகை மட்டுமல்ல ; இலட்சுமணனும் விசுவாமித்திரருங்கூடப் பார்க்க முடியவில்லையாம். அவ்வளவு விரைவாக அந்தச் செயல்கள் நிகழ்ந்தன. தாடகை வீசின சூலம் அறுபட்டதும், அந்தத் துண்டுகளைத்தான் பார்த்தார்களாம்.

சூலத்தை யிழந்த தாடகை கற்களை யெடுத்து வீசினுள்.

அல்லின் மாரி அனைய நிறத்தவள்,
சொல்லு மாத்திரை யிற்கடல் தூர்ப்பன
கல்லின் மாரியைக் கைவகுத் தாள்: அதை
வில்லின் மாரியின் வீரன் விலக்கினுன்.

[ அல் - இருள். மாரி - மழை. மாத்திரையில் - அளவிலே. வகுத்தாள் - எடுத்துப் பொழிந்தாள். ]

தாடகை கற்களை மழையாகப் பொழிந்தாளாம். அந்தக் கல் மழையை இராமன் வில் மழையாகிய அம்புகளால் தடுத்துவிட்டான்.

இனிமேல் இவளால் முனிசிரேஷ்டருக்கு ஆபத்து விளையக் கூடுமென்று தெரிந்து,

சொல்லொக்கும் கடிய வேகச் சுடுசரம், கரிய செம்மல்
அல்லொக்கும் நிறத்தி னுள்மேல் விடுதலும், வயிரக் குன்றக்
கல்லொக்கும் நெஞ்சில் தங்கா(து) அப்புறம் கழன்று, கல்லாப்
புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளெனப் போயிற் றன்றே!

[ சரம் - அம்பு. புல்லர் - மூடர். ]

கல்லாத கீழ்மக்களுக்கு நல்லவர்கள் சொன்ன பொருள் போலே போய்விட்டதாம் இராமபாணமும் தாடகை நெஞ்சிலே தங்காமல். தான் பாழாக்கிய பாலைவனத்தைக் காட்டிலும் பாழ்பட்டிருந்த அந்த நெஞ்சை, 'வயிரக் குன்றக் கல்லொக்கும் நெஞ்சு' என்று வருணிக்கிறான். அந்த வனத்திலே அவள் தங்கியிருந்த கல்மலையைக் காட்டிலும் எவ்வளவோ கடினமாயிருந்ததாம் அந்தப் பாவி நெஞ்சு.

இராம பாணத்தையோ 'சொல்லொக்கும் கடிய வேகச் சுடுசரம்' என்று வருணிக்கிறான். யாருடைய சொல்? விசுவாமித்திரரைப் போன்ற மகரிஷிகளின் சாபச் சொல்லா? கம்பனைப் போன்ற மகாகவிகளின் — நெருப்பைக் கக்கும் — சொல்தானா?

தாடகை அலறிக்கொண்டே மடிந்து விழுந்தாள். இந்தப் போரைக் 'காகுத்தன் கன்னிப்போர்' என்கிறான் கவிஞன். இராவணன் பாட்டி: வலிமையிலும் கொடுமையிலும் ஒருங்கே முற்ற மூத்து முதிர்ந்திருந்தாள். அந்த இராட்சஸ சக்கரவர்த்தியின் விநாச காலத்தைக் காட்டும் உற்பாதமாக அவனது வெற்றிக்கொடி அற்று விழுந்தது போலிருந்ததாம் அந்த வீழ்ச்சி.

வில்லை முறித்துச் சீதையை மணஞ் செய்துகொள்ளப் போகும் 'கைவண்ணம்' இப்படிப்பட்டதென்று இந்தக் கன்னிப்போர் முன் கூட்டியே ஒருவாறு அறிவிக்கிறது.

## 9. யாக ரட்சணம்

பிறகு விசுவாமித்திரர் பல வகையான அஸ்திரங்களையும் இராமனுக்குக் கொடுத்தருளினர். அவை தன் ஆருயிர்த் தோழனை சடையப்ப வள்ளலின் சொல்லைப்போல் குறி தவருதவை யென்கிருன் கவிஞன். அப்பால் அவர்கள் ஒரு சோலையை அடைந்தார்கள். 'தவ வேள்வி'க்கு ஏற்ற 'தருவனம்' அதுவே யென்று தீர்மானித்த முனிவர், குமாரர்களை நோக்கி அரக்கர்களால் உண்டாகும் தீங்குகளிலிருந்து காக்குமாறு கட்டளை யிட்டு யாகஞ் செய்யத் தொடங்கினர்.

என்னுதற்(கு) ஆக்கரி(து), இரண்டு மூன்றுநாள்
விண்ணவர்க்(கு) ஆக்கிய முனிவன் வேள்வியை,
மண்ணினைக் காக்கின்ற மன்னன் மைந்தர்கள்
கண்ணினைக் காக்கின்ற இமையிற் காத்தனர்.

[ ஆக்கரிது - ஆக்க அரிது - செய்தற்கு அரிதாக இரண்டு மூன்று - ஆறு. ]

அந்த வேள்வியை இராம லட்சுமணர் கண்ணைக் காக்கின்ற இமைகள் போல் காத்து வந்தார்கள். அந்தக் காவலைப் பிறர் நினைக்க வும் முடியாதாம்; நினைத்தாலும் அப்படிச் செய்யவே முடியாதாம். அவர்கள் நாலு திசையிலும் சக்கரம் சுற்றுவதுபோலச் சுற்றித் திரிந்தார்கள். அப்படிக் காவல் செய்யும்போது, ஒரு சமயம் இராமன் முனிவரிடம் போய், 'தாங்கள் சொன்ன கொடிய அரக்கர்கள் எப்போது வருவார்கள்?' என்று மெள்ளக் கேட்டான்.

முனிவர் பதிலொன்றும் சொல்லவில்லை. உடனே ஊகித்து விட்டான் அந்த நிலையை.

வார்த்தைமா(று) உரைத்திலன் முனிவன் மௌனியாய்ப்
போர்த்தொழிற் குமரனும் தொழுது போந்தபின்,
பார்த்தனன் விசும்பினைப் பருவ மேகம்போல்
ஆர்த்தனர், இடித்தனர் அசனி அஞ்சவே.

[ மாறு - உத்தரம். விசும்பு - ஆகாயம். ஆர்த்தனர் - ஆரவாரஞ் செய்தார்கள். அசனி - இடி.]

யாகதீட்சை கொண்டதால் மௌன விரதம் பூண்டிருக்கிரு ரென்று தொழுது திரும்பிவிட்டான் இராமன். அவன் வெளியே வந்ததும், இடியிடிப்பது போன்ற ஆரவாரம் கேட்டது. 'இடியும் அஞ்சத்தக்க பேரிடி' யென்று தோன்றியதாம். வானத்தைப் பார்த்தான்: 'பருவ மேகங்கள் நிறைந்து உலாவுகின்றனவோ?' என்று தோன்றியது!

அரக்கர்கள் அம்புகளை எய்தார்கள்; வேல் முதலிய ஆயுதங் களை வீசினர்கள். நெருப்பைச் சொரிந்தார்கள்; தண்ணீரைச்சொரிந் தார்கள். ஆரவாரித்தார்கள்; அதட்டினர்கள். எத்தனையோ மாயங் களைச் செய்தார்கள்.

'கவருடை எயிற்றினர், கடித்த வாயினர்,
துவர்நிறப் பங்கியர், சுழல்கண் - தீயினர்,
பவர்சடை அந்தணன் பணித்த தீயவர்
இவ 'ரென இலக்குவற்(கு) இராமன் காட்டினன்.

[ கவர் - பிளவுபடுதல். எயிற்றினர் - பற்களை யுடையவர். துவர் - சிவப்பு. பங்கி - ஆண்களின் ரோமம். பவர் - நெருக்கம். பணித்த - சொன்ன. ]

'கோரப்பற்களும் செம்பட்டை மயிருமாய், உதடுகளைக் கடித்துக் கொண்டு கோபாக்கினி ஜொலிக்கும் கண்களை உருட்டி விழிக்கி ருர்களே, அதோ அவர்கள்தான் முனிவர் சொன்ன பேர்வழிகள்' என்று இராமன் தம்பிக்குக் காட்டினன்.

இலட்சுமணன் விண்ணையும் பார்த்து வில்லையும் பார்த்தான்: 'அண்ணா! இப்போது இந்த இடத்திலேயே அவர்கள் துண்டந் துண்டமாக விழப்போகிறார்கள்' என்று சொன்னான். உடனே யாகசாலையில் விழுந்துவிடாதபடி ஒரு சரகூடம் அமைத்துவிட்டான் இராமன். அதாவது: அம்புகளை இடைவிடாமல் பின்னிப் பின்னித் தொடுத்து அவற்றால் ஒரு பந்தல் அமைத்து விட்டானாம் யாகசாலைக்குமேல்.

அதே சமயத்தில் யாகத்திற்கு வந்திருந்த முனிவர்களெல்லாம் அரக்கர்களுக்குப் பயந்து இராமனை நோக்கி ஓடி வந்தார்கள்.

நஞ்சட எழுதலும் நடுங்கி நாள்மதிச்
செஞ்சடைக் கடவுளை அடையும் தேவர்போல்,
வஞ்சனை யரக்கரை வெருவி மாதவர்,
'அஞ்சன வண்ண! நின் அபயம்யாம்' என்றார்.

[அட - கொல்லுமாறு. நாள்மதி - புதிய இளஞ்சந்திரன். செஞ்சடைக் கடவுள் - சிவபெருமான். வெருவி - பயந்து. மாதவர் - மிக்க தவமுடைய முனிவர்கள். அஞ்சன வண்ண - அஞ்சனம் போன்ற நிறமுள்ள இராமனே.]

பாற்கடல் கடைந்த காலத்தில் யாவரையும் கொல்லுமாறு காளகூட விஷம் தோன்றியதும், தேவர்கள் நடுங்கிச் சிவபெருமானைச் சரண மடைந்தார்களாம். அப்படியே முனிவர்களும் இராட்சஸ பயத்தாலே இராமனை அடைந்து, 'நாங்கள் உனக்கு அடைக்கலம்' என்றார்கள்.

அபயம் அளிப்பதும், துஷ்ட நிக்கிரகம் செய்வதும் எவ்வளவு வேகமாக நடைபெறுகின்றன:

கவித்தனன் கரதலம் 'கலங்க லிர்' எனச்
செவித்தலம் நிறுத்தினன் சிலையின் தெய்வநாண்:
புவித்தலம் குருதியின் புணரி ஆக்கினன்;
குவித்தனன் அரக்கர்தம் சிரத்தின் குன்றமே.

[ கவித்தல் - (இங்கே) அபய ஹஸ்தமாகக் காட்டுதல். கலங்கலீர் - கலங்காதேயுங்கள். சிலை - வில். புவி - பூமி. குருதி - இரத்தம். புணரி - சமுத்திரம். ]

அபயம் அளிப்பதற்கு அறிகுறியாகக் கையை அமர்த்திக் காட்டினன், 'நீங்கள் கலங்கவேண்டாம்' என்று பொருள்பட. பிறகு வில்லின் நாணியைக் காதளவும் இழுத் துவிட்டான். உடனே கடலும் மலையும் தோன்றிவிட்டனவாம் அந்தப் பிரதேசத்திலே. ஆம்: இரத்தக் கடலும், தலைகளின் குன்றும்!

வில்லை வளைத்தான்; அம்புகளை எய்தான்; அந்த அம்புகள் இராட்சஸர்களின் இரத்தத்தைச் சிந்தின; தலைகளை அறுத்துத் தள்ளின; அறுபட்ட தலைகள் ஒன்றின்மேலொன்றாக விழுந்து குவிந்தன; இரத்தம் மேலும் மேலும் சிந்திச் சிந்திப் பெருகிப் பெருகி வெள்ளமாகி விட்டது — என்றெல்லாம் விவரிக்கவில்லை. சுருக்கமாக எவ்வளவு நாடகத்திறமையோடு இந்த இரண்டாவது போர் வருணிக்கப்பட்டிருக்கிறது! ஒரு பாட்டிற்குள் கம்பன் புனைந்து பொதிந்த போர்ச் சித்திரம்.

அந்த அரக்கர் சேனைக்குத் தலைமை வகித்தவர்கள் தாடகை புதல்வர்களும் இராவணன் உறவினருமான சுபாகுவும் மாரீசனும். 'தவஞ்செய் வோர்கள் வெருவரச்சென்(று) அடைகாம வெகுளி யென' அடைந்தார்கள். ஆனல்

திருமகள் நாயகன் தெய்வ வாளிதான்,
வெருவரு தாடகை பயந்த வீரர்கள்
இருவரின் ஒருவனைக் கடலின் இட்ட(து);அங்(கு)
ஒருவனை அந்தகன் புரத்தின் உய்த்ததே.

[ வாளி - அஸ்திரம். வெருவரு - அஞ்சுதற்குக் காரணமான. பயந்த - பெற்ற. அந்தகன் - யமன். உய்த்தது - சேர்த்தது. ]

இராம பாணம் மாரீசனைக் கடலில் கொண்டுபோய்த் தள்ளி விட்டது. சுபாகுவை யமபுரத்திற்கே தள்ளிக் கொண்டுபோய்

விட்டதாம். இராமனுக்கோ ஜய லட்சுமியைக் கொண்டு சேர்த்து விட்டதாம். எனவே 'திருமகள் நாயகன்' என்கிறான்.

'திருவின் கேள்வன்' என்ற தசரதன் வாக்கு இராஜ்ய லட்சுமியின் சேர்க்கையோடு சீதா கல்யாணத்தையும் சுபசூசகமாகக் குறிப்பிட்டதுபோல், 'திருமகள் நாயகன்' என்ற கவிக்கூற்றும் ஜய லட்சுமியின் சேர்க்கையோடு விரைவிலே நேரப் போகும் சீதாலட்சுமியின் கல்யாணத்தையும் முன் கூட்டியே ஞாபகப்படுத்துகிறது.

உயிர் தப்பிய அரக்கர்கள் ஓடிப் போய்விட்டார்கள், 'செத்தோமோ? பிழைத்தோமோ?' என்று. பிணம் தின்னவந்த கழுகு முதலிய பறவைகள் பந்தலிட்டன. அந்தப் பறவைப் பந்தலைக் கிழித்துக்கொண்டு வந்ததாம் தேவர்கள் பொழிந்த பூமழை.

பந்தரைக் கிழித்தது பரந்த பூமழை;
அந்தர துந்துமி அலையின் ஆர்த்தன:
இந்திரன் முதலிய அமரர் ஈண்டினர்,
சுந்தர வில்லியைத் தொழுது வாழ்த்தினர்.

[பரந்த - பரவிய. துந்துமி - துந்துமி யென்ற பேரிகை. ஆர்த்தன - முழங்கின. அமரர் - தேவர்கள். ஈண்டினர்-திரண்டு வந்தார்கள். வில்லி - வில்லையுடைய இராமன்.]

அரக்கர்களை வதஞ் செய்யும்போது ஆயுதமாயிருந்த கோதண்டம் என்ற அந்த வில் இப்போது இராமனது சுந்தரத் தோளோடு ஓர் ஆபரணமாகச் சேர்ந்து விளங்குகிறதாம். அந்த வீர சௌந்தரியத்தையும் விஜய சௌந்தரியத்தையும் தொழுது வாழ்த்தினார்கள் தேவர்களும் தேவேந்திரனும், தேவ துந்துபியின் மங்கள முழக்கங்களுக்கிடையே.

தேவர்கள் பட்டுமா பூமழை பொழிந்தார்கள்?

புனித மாதவர் ஆசியின் பூமழை பொழிந்தார்;
அனைய கானத்து மரங்களும் அலர்மழை சொரிந்த:

முனியும் அவ்வழி வேள்வியை முறைமையின் முற்றி,
இனிய சிந்தையன் இராமனுக்(கு) இனையன இசைத்தான்.

[ ஆசி - ஆசீர்வாதம். அனைய - அந்த. கானம் - காடு. அலர் - பூ. அவ்வழி - அப்பொழுது. முறைமையின் - விதிப்படியே. முற்றி - முடித்து. சிந்தையன் - சிந்தையனுய். இனையன-இத்தன்மையனவான. இசைத்தான்- சொன்னுன். ]

முனிவர்களும் ஆசீர்வாதமாகிய பூமழை பொழிந்தார்களாம். காட்டு மரங்களிலிருந்து அப்போது மலர்கள் உதிர்ந்தது, அந்தச் 'சுந்தர வில்லி'யிடம் அன்பு கொண்டு மரங்களும் பூமழை பொழிவது போலிருந்ததாம். விசுவாமித்திரர் வேள்வியை விக்கின மில்லாமல் முடித்துக்கொண்டு இராமனை நோக்கி உபசார வார்த்தைகள் சொன்னுர். ஆம்: அவரும் உபசார வார்த்தைகள் என்ற பூமழையைப் பொழிந்தாரென்றே சொல்லலாம்.

'என்னுடைய பரம பாக்கியம் நீ வந்து வேள்வி காத்தது: சர்வ ரட்சகனுன உனக்கு இந்த யாக ரட்சணம் ஒரு பெருங் காரியமன்று' என்று அகமகிழ்ந்து முகமன் கூறினுர். மூவரும் அன்று அங்கே தங்கியிருந்தார்கள்.

மறுநாள் இராமன், 'இன்று அடியேன் என்ன பணி செய்ய வேணும்? நியமித்தருள்வீராக' என்று வேண்டினுன். அதற்கு முனிவர்,

'அரிய யான்சொலின் ஐய!நிற்(கு) அரியதொன் றில்லை;
பெரிய காரியம் உள;அவை முடிப்பது பின்னர்:
விரியும் வார்புனல் மருதம்சூழ் மிதிலையர் கோமான்
புரியும் வேள்வியும் காண்டும்நாம் எழு'கென்று, போனுர்.

[ அரிய - அருமையுடையன. நிற்கு - உனக்கு. வார்புனல் - மிகுந்த நீர். கோமான் - அரசன். காண்டும் - பார்ப்போம். எழுக - புறப்படுவாயாக. என்று - என்று சொல்ல. ]

'நீ செய்வதற்கு அரியது ஒன்றுமில்லை' என்று உத்ஸாகப்படுத்திக் கொண்டே, 'பெரிய காரியங்கள் — பின்னே முடிக்கவேண்டியவை — இருக்கின்றன!' என்கிறார். இப்படிச் சொல்லி, 'இப்போது மிதிலைக்குப் புறப்பட்டுப்போய் அந்த அரசன் செய்யும் வேள்வியையும் பார்ப்போம்' என்று கூறி முடிக்கிறார். உடனே மூவரும் மிதிலை நோக்கிப் புறப்படுகிறார்கள்.

'பெரிய காரியம்' என்பதில் காவியத்தின் தனிப் பெரு நிகழ்ச்சியான இராவணவதம் முதலியன மறைபொருளாகக் குறிக்கப் படுகின்றன. தம் தவவேள்வி முற்றியதும், ஜனகன் வேள்வியையும் காண்போம் என்று கூறியதில், அந்தப் 'பெரிய காரிய'த்தோடு தொடர்புடைய 'மணவேள்வி'யாகிய சீதா கல்யாணமும் மறை பொருளாகக் குறிக்கப்படுகிறது என்னலாம். 'கலியாணம்' என்று நேரே பிரஸ்தாபித்தால், இராமன் லஜ்ஜைப் படக்கூடுமல்லவா?

## 10. ‘கால்வண்ணம்’ கண்டது

விசுவாமித்திரரும் இராம லட்சுமணரும் பல ஆறுகளையும் சோலைகளையும் கடந்து மிதிலா நகரத்தின் வெளிப்புறத்திற்கு வந்து சேர்ந்ததும், அங்கே ஒரு வெற்றிடத்தில் மேடாக உயர்ந்து தோன்றிய கருங்கல்லைக் கண்டார்கள். இராமன் பாததூளி படவே, திடீரென்று அந்தக் கல்லுருவம் பெண்ணுருவமாகிவிட்டதாம். அப்போது விசுவாமித்திரர் சொன்னார்:

‘மாயிரு விசும்பிற் கங்கை மண்மிசை இழித்தோன் மைந்த!
மேயின உவகையோடு மின்னென ஒதுங்கி நின்ருள்,
தீவினை நயந்து செய்த தேவர்கோன் தனக்குச் செங்கண்
ஆயிரம் அளித்தோன் பன்னி அகலிகை ஆகும்’ என்ருன்.

[மா இரு விசும்பின் - மிகவும் பெரிய ஆகாசத்திலிருந்து. இழித்தோன்- இறக்கிக் கொண்டு வந்த பகிரதன். மைந்த - பரம்பரையில் வந்த புதல்வனே. மேயின - பொருந்தின. நயந்து - விரும்பி. பன்னி - பத்தினி.]

‘உவகையும் நாணமும் ஒருங்கே பூத்த மின்னற் கொடிபோல் ஒதுங்கி நிற்கிருளே, அவள்தான் கௌதம மகரிஷியின் பத்தினியாகிய அகலிகை’ என்றுசொல்லும் விசுவாமித்திரர், தேவேந்திரன் தீவினையை விரும்பிச் செய்தானென்றும், அதற்காகக் கௌதமர் சாபங் கொடுத்தாரென்றும் முதலில் சுருக்கமாகச் சொன்னர். அந்த வரலாற்றைத் தெளிவாகத் தெரிந்துகொள்ள விரும்பினன் இராமன் ஆச்சரியத்தோடு:

பொன்னையேப் சடையான் கூறக் கேட்டலும் பூமி கேள்வன்,
‘என்னையே! என்னை யே!இவ் வுலகியல் இருந்த வண்ணம்:
முன்னைஊழ் வினையி னலோ? நடுவொன்று முடிந்த துண்டோ?
அன்னையே அனையாட்(கு) இவ்வா(று) அடுத்தவா(று) அருளு’கென்ருன்.



11

[ஏய் - ஒத்த. பூமி கேள்வன் - பூமிக்கு நாயகனான இராமன். என்னையே - எத்தன்மையது. அனையாட்கு - ஒத்தவளுக்கு. அடுத்தவாறு - நேர்ந்த காரணம். ]

அகத்தின் அழகை முகத்திலே கண்டு 'அன்னைக்குச் சமான மானவள்' என்று இராமன் தீர்மானித்தான். தாடகையையும் முதலில் 'பெண்ணென மனத்திடை' நினைத்த 'பெருந்தகை', அகலிகையின் தோற்றத்திலிருந்தும் முகமலர்ச்சியிலிருந்தும் அவள் மனத்தூய்மை யுடையவளென்று ஊகித்து விசேஷ அனுதாபம் காட்டுவது பொருத்தம்தானே.

விசுவாமித்திரர் சாப வரலாறு கூறத் தொடங்கி அந்த விவரத்தை,

'தையலாள் நயன வேலும் மன்மதன் சரமும் பாய,
உய்யலாம் உறுதி நாடி உழல்பவன், ஒருநாள் உற்ற
மையலால் அறிவு நீங்கி, மாமுனிக்(கு) அற்றம் செய்து,
பொய்யிலா உள்ளத் தான்தன் உருவமே கொண்டு புக்கான்:

[சரம் - பாணம். உய்யலாம் - பிழைக்கும்படியான. அற்றம் - பிரிவு. ]

'புக்கவ ளோடும் காமப் புதுமண மதுவின் தேறல்
ஒக்கஉண் டிருத்த லோடும், உணர்ந்தனள், உணர்ந்த பின்னும்,
"தக்கதன்(று)" என்ன ஓராள்; தாழ்ந்தனள் இருப்பத் தாழா
முக்கணன் அனைய ஆற்றல் முனிவனும் முடுகி வந்தான்'

[புக்கு அவளோடும் - சென்று அந்த அகலிகையோடும். மதுவின் தேறல் - தெளிந்த மது. ஓராள் - ஆராய்ந்து அறியாதவளாய். தாழா - தாழ்வில்லாத. முக்கணன் - சிவ பெருமான். முடுகி - விரைவாய். ]

என்று வெளியிட்டார்.

அகலிகையின் கண்களாகிய வேல்களும், மன்மதனுடைய பூங்கணைகளும் பாய, அதனால் இந்திரனுக்கு விளைந்த காம வேகத்தைக் குறிப்பிடுகையில், 'உய்யலாம் உறுதி நாடி உழல்பவன்' என்கிறார்.

அந்த ஆபத்திலிருந்து எப்படியாவது பிழைக்க வழிதேடி அலைந்தானும்: தன் நோக்கத்தை நிறைவேற்றிக்கொள்வதற்கு வழிதேடி அலைந்தானென்று சொல்லவில்லை. எனினும் ஒருநாள் மையல் வரம்பு கடந்து பொங்கி அறிவு என்ற அணையை உடைத்துக் கொண்டு போயிற்றும். உடனே 'அதுதான் உய்யும் வழி!' என்று பொய்யிலா உள்ளத்தரான கௌதமருடைய உருவத்தைத் தரித்துக் கொண்டு அகலிகையிடம் சென்றானும், பொய்யுடை உள்ளத்தனான இந்திரன். 'அப்படிச் செய்யாவிட்டால் பிழைக்க வழியில்லை; இறந்தே போவேன்!' என்று எண்ணிவிட்டானும். 'உய்யலாம்' என்ற இந்தச் சொல் எதுகையில் அமைந்திருக்கும் அழகே இந்தப் பாட்டை உய்வித்து, இதற்கு ஒரு தனியழகு தந்து விட்டதென்று சொல்லலாம்.

அகலிகைக்குத் தேவராஜாவென்று தெரியாது; கணவரென்றே நினைத்துக்கொண்டிருந்தாள். எனவே, 'காமப் புதுமண மதுவின் தேறல் ஒக்கஉண் டி'ருந்தாள். அந்நிலையில் இது 'புதுமண மதுவின் தேறல்' என்று உணர்ந்தாளாம், புலனளவிலே. உணர்ந்த பின்னும், அது தக்கதன்று என்று அவள் ஆராய்ந்தாளில்லை, அறிவைக்கொண்டு. 'மதுவின் தேற'லாக இருந்ததால், அந்த வெறியிலே மயங்கி மனம் தாழ்ந்தாளா? அல்லது 'கற்பிழந்தோமே!' என்ற துன்ப மிகுதியினாலேயே அயர்ந்து அறிவிழந்து கிடந்தாளா?

மதிநலத்தால் மையலைக் கட்டுப்படுத்தி 'உய்யலாம் உறுதி' நாடாத குற்றம் இந்திரன் குற்றம். அகலிகையோ அப்படிப்பட்ட குற்றமொன்றும் செய்யவில்லை. 'புதுமண மதுவின் தேறல்' என்று உணர்ந்த பின்னும், 'அது தக்கதன்று' என்று ஆராய்ந்து விலக்கக் கூடிய அறிவுத் திறமைதான் இவளுக்கில்லை. கௌதம முனிவர் திரும்பியதும், 'அன்னியனால் வஞ்சிக்கப்பட்டோமே!' என்று பயந்து நின்றாள்.

'நின்கைச் சுடுசரம் அனைய சொல்லால்' இந்திரனைச் சபித்தாரென்றார் விசுவாமித்திரர் இராமனிடம். 'சொல்லுக்கும் கடிய

வேகச் சுடுசரம்' என்று 'தாடகைவதைப் படல'த்தில் சொல்லை இராம பாணத்திற்கு உபமானமாக்கியவர், இப்போது இராம பாணத்தைச் 'சொல்'லுக்கு உபமானமாக்குகிறார். மகரிஷிகளின் சொல்லும், மகாகவிகளின் சொல்லும், லோகோபகாரமே புருஷார்த்த மென்று வாழ்க்கை நடத்தும் (சடையப்ப முதலியாரைப் போன்ற) வள்ளற் பெருமக்களின் சொல்லும், இராமபாணம் போல் குறி தவறுதவை யென்பது கம்பன் கருத்து.

இந்திரனுக்குச் சாபம் கொடுத்தபின், பயந்து ஸ்தம்பித்துநின்ற அகலிகையை அப்படியே கல்லாகும்படி சபித்தாராம். அவளுடைய எதார்த்த நிலையை அந்த மகரிஷியும் உணர்ந்து கொள்ளவில்லையாம்; பழி கூறும் உலகமும் உணர்ந்து கொள்ளவில்லையாம். உலகம் ஆராயாது 'நிரந்தரம்' சூட்டும் 'நெடும் பழி'யையும் சுமந்துகொண் டிருக்கிறாளாம், சுமைதாங்கிபோலே. இத்தகைய அகலிகையின் வேண்டுகோளுக்கிரங்கி, முனிவர் இராமனது பாததூளியால் சாப விமோசனம் ஏற்படுமென்றார்.

எனவே, நல்லவளுக்கு வந்த துரதிர்ஷ்டமும் முடிவில் விசேஷ நல்லதிர்ஷ்ட மாகிவிட்டதாம். இந்தக் கதை சொல்லும் விசுவாமித்திரர்,

'இவ்வண்ணம் நிகழ்ந்த வண்ணம்: இனிஇந்த உலகுக் கெல்லாம்
உய்வண்ணம் அன்றி, மற்றோர் துயர்வண்ணம் உறுவ துண்டோ?
மைவண்ணத்(து) அரக்கி போரில், மழைவண்ணத்(து) அண்ண லே! உன்
கைவண்ணம் அங்குக் கண்டேன்; கால்வண்ணம் இங்குக் கண்டேன்'

[உய்வண்ணம் - உய்யும் வகை. மற்றோர் - மற்று ஓர்.]

என்று குதூகலமாக முடிக்கிறார்.

தாடகை வதத்தில் துஷ்ட நிக்கிரகமாகிய 'கைவண்ணம்' கண்டவர், அகலிகையின் சாப விமோசனத்திலே சிஷ்ட பரிபாலன மாகிய 'கால்வண்ணம்' கண்டாராம். ஆகவே, 'இனித் தீயோர்

அழிவர்; நல்லோர் நலம் பெறுவர்: உலகம் உய்ந்துபோம்' என்பது விசுவாமித்திரர் நம்பிக்கை.

இந்த அழகான பாட்டில் 'மைவண்ணத்(து) அரக்கி போரில், மழைவண்ணத்(து) அண்ணலே!' என்ற வருணனை அழகுக்கு அழகு தருவதுபோல் அமைந்திருக்கிறது. தாடகையும் கறுப்பு; இராமனும் கறுப்பு. எனினும் அந்த 'மைவண்ணம்' ஹிம்ஸை, பொய், வஞ்சனை முதலியவற்றின் அறிகுறி. இந்த 'மழை வண்ண'மோ கருணைக்கும் உண்மைக்கும் தியாகத்திற்கும் அறிகுறி. அரக்கி உயிரை அழிப்பவள்; அண்ணலோ அளிப்பவன். 'மைவண்ணத்து அரக்கி' 'மழை வண்ணத்து அண்ணல்' என்பன போன்ற சப்த ஜாலங்களால், எத்தனை ஆழ்ந்த கருத்துக்களை எவ்வளவு வசீகரமாய்க் கவிஞன் உய்த்துணர வைக்கிறான்!

இராமனது 'கால்வண்ண'த்தால், 'பண்டை வண்ண'மாய் — அதாவது, பழி பூண்டதற்கு முன்பிருந்த வண்ணமாகவே — எழுந்து நின்றாளாம் அகலிகை. அது அந்த 'உவகை'க்குக் காரணம். அவளை இராமன் மறுபடியும் 'அன்னை' யென்று குறிப்பிட்டு அடி வணங்கினான். பிறகு விசுவாமித்திரர், இராம லட்சுமணரோடும் அகலிகையோடும் கௌதம முனிவரது ஆச்ரமத்தை யடைந்து, 'முன்னை வண்ணத்த ளாகி நின்றாள்; நெஞ்சினால் பிழைப்பி லாளை நீ அழைத்திடுக!' என்றுவேண்டினார். கௌதமரும் இசைந்து மீண்டும் அவளைத் தரும பத்தினியாக ஏற்றுக்கொண்டார்.

தாடகை கதையில் அஹிம்ஸா தர்மத்தைக் குறித்து இராஜ ரிஷியின் கொள்கை வெளியிடப் பெறுவதுபோல், அகலிகை கதையில், அறிவு நீங்கி ஆண்மையறம் பிழைத்த ஆண்மகனது வஞ்சமே பெண்மையின் வீழ்ச்சிக்குக் காரணமென்ற கொள்கை வெளியிடப் படுகிறது. 'தீவினை நயந்து செய்த தேவர்கோன்' என்ற அதே விசுவாமித்திரர் வாயினாலேயே, 'நெஞ்சினால் பிழைப்பி லாள்' என்று அகலிகையைக் குறிப்பிடுவது கவனிக்கத் தக்கது.

அகலிகை கதை பிரசித்தமானது; சங்க காலத்திலும் பிரசித்த மாகத் தமிழ் நாட்டில் வழங்கி வந்தது. 'ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான் — இந்திரனே சாலும் கரி' என்று திருவள்ளுவரும் இக்கதையைக் குறிப்பிடுகிறுர். பழைய தமிழர் களுக்கிடையே வழங்கி வந்தபடி இக்கதையை மாற்றி அமைக்கும் கம்பன், அகலிகையை 'நெஞ்சினுல் பிழைப்பிலா' ளாக்கி, இக்கதையையே பெண்மையின் பெருமைக்கும் ஒரு சான்ருகக் காட்டுகிருன். 'மாதரார் அற்பில்(அன்பில்) நின்றன அறங்கள்' என்று கோசல நாட்டின் பெருமையைப் பெண்மையின் பெருமை யாக்கிப் பேசும் கவிஞனல்லவா?

தாடகை வதையைப்போல் அகலிகை சாப விமோசனமும் விசுவாமித்திரர் குறிப்பிட்ட 'பெரிய காரிய'த்திற்கு ஒரு முற்குறி யாக அமைகிறதென்னலாம்.

## 11. காதற் பூஞ்சோலை

இன்னும் சூரியாஸ்தமன மாகவில்லை. மிதிலைமாநகரத்து மதில்களின் மேலுள்ள அழகிய கொடிகள் மந்த மாருதத்தில் இன்பமாக அசைந்தாடுகின்றன. அந்த நகரமே தன் பெரிய கைகளைக் குதூகலமாக நீட்டி, இராமனை 'விரைந்துவா' என்று அழைப்பதுபோ லிருக்கிறதாம்:

'மையறு மலரின் நீங்கி, யான்செய்மா தவத்தின் வந்து
செய்யவள் இருந்தாள்!' என்று, செழுமணிக் கொடிக ளென்னும்
கைகளை நீட்டி அந்தக் கடிநகர், கமலச் செங்கண்
ஐயனை 'ஒல்லை வா!'என்(று) அழைப்பது போன்ற தம்மா.

[மைஅறு - குற்றமற்ற. மலர் - (இங்கே) செந்தாமரைப்பூ. செய்ய வள் - செந்நிறமுள்ள மகாலட்சுமி. கடி - காவல். ஒல்லை - சீக்கிரம்.]

'செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகள், நான் செய்த மாதவத்தால், அந்தக் கோயிலைத் துறந்து என்னிடம் வந்திருக்கிறாள்: உனக்கு உயிர்த்துணைவியான காதலி!' என்று மிதிலாநகரம் ஒரு மௌனப் பிரசங்கஞ் செய்து, இராமனை வரவேற்கிறதாம். செந்தாமரைச் செல்வியும் தன் இயற்கைப் பொன்மனை துறந்து மிதிலைச் செல்வியாக வாழ்ந்துவரும்படி மாதவஞ் செய்து பேறு பெற்று அமைவது மிதிலை. திருமகளுக்குத் தன் உறைவிடத்திலும் சிறந்த இனிய வாசஸ்தானமாக விளங்குவது மிதிலை. குறைவில்லாத இயற்கை யழகு வாய்ந்த தன் இருப்பிடத்தைவிட்டு, மகாலட்சுமியும் விரும்பி வந்து சீதாலட்சுமியாகி வீற்றிருப்பதற்கு ஏற்ற வனப்பும் வளமும் சிற்ப சித்திர வேலைப்பாடுகளும் நிறைந்திருப்பது மிதிலை.

'விரைந்து வந்து சீதாலட்சுமியை மணஞ் செய்துகொள்' என்று மதிற்கொடிகள் அழைத்து வரவேற்க, இராமன் தம்பியோடும் விசுவாமித்திர முனிவரோடும் மிதிலாநகரத்திற்குள் பிரவேசிக்கிறான். பிரவேசித்ததும், உப்பரிகைகளின் மேலுள்ள மணிக்கொடிகளெல்லாம், 'வரம்பில் பேரழகியை மணஞ் செய்யவருகிறான் அந்தமில் அழகன்!' என்று வியந்து செயல் மறந்து ஆடுவதுபோல் ஆடுகின்றனவாம்.

நிரம்பிய மாடத்(து) உம்பர் நிரைமணிக் கொடிக ளெல்லாம்,
'தரம்பிறர் இன்மை உன்னித் தருமமே தூது செல்ல,
வரம்பில்பே ரழகி னானை மணஞ்செய்வான் வருகின் றான்'என்(று)
அரம்பையர் விசும்பின் ஆடும் ஆடலின், ஆடக் கண்டார்.

[நிரம்பிய - (சிற்ப அழகு) நிறைந்த. மாடத்து உம்பர் - மாளிகைகளின்மேல். நிரை - வரிசை. தரம் - தகுதி. உன்னி - நினைத்து. அரம்பையர் - தேவ மாதர்கள். விசும்பின் - ஆகாயத்தில். ஆடலின் - ஆட்டம் போல.]

இந்தக் கொடிகள் ஆடுவது வானரங்கத்திலே தெய்வப் பெண்கள் ஆனந்தமாக ஆடுவதுபோலிருக்கிறதாம். உருவிலும் திருவிலும், குணத்திலும் குலத்திலும் ஒத்த சிறப்புடைய தலைவன் தலைவியர், ஒருவரை யொருவர் காதலித்து மணம் புரிவது தருமத்தின் பயனாதலால், இத்தகைய காதல்மணத்தைக் கூட்டி முடிப்பதற்குத் தருமம் தானே தூது சென்றதென்று கவி கற்பிக்கிறான். ஆம் : விசுவாமித்திர மகரிஷியே திருமணத் தூதரென்றால், தரும தேவதை தானே அந்த ரூபத்தில் போய் மணமகனை அழைத்து வருவதாகச் சொல்லக் கூடுமல்லவா ?

மதிற்கொடிகள் மகிழ்ந்து வரவேற்க, மாளிகைக் கொடிகள் வியந்து நடம்புரிய, இராம லட்சுமணரும் விசுவாமித்திரரும்,

ஆதரித்(து) அமுதிற் கோல்தோய்த்(து), அவயவம் அமைக்கும் தன்மை
யாதெனத் திகைக்கு மல்லால், மதனற்கும் எழுத வொண்ணாச்

**சீதையைத் தருத லாலே, திருமகள் இருந்த செய்ய**
**போதெனப் பொலிந்து தோன்றும் பொன்மதில் மிதிலை புக்கார்.**

[ ஆதரித்து - அன்பு கூர்ந்து; ஆசை கூர்ந்து. மதனன் - மன்மதன். செய்ய - சிவந்த. போது - தாமரைமலர். புக்கார் - பிரவேசித்தார்கள். ]

அழகின் தன்மையை வரையறுத்து உணர்ந்தவன் காதற் கடவுளான மன்மதன்தானே! அவன் அழகைச் சித்திரித்துக் காட்டுவதிலும் மஹா நிபுணனாயிருக்கிறானாம். அவன் ஒரு சமயம் சீதையின் வடிவத்தைச் சித்திரத்தில் அமைத்துப் பார்க்க ஆசைப்பட்டானாம். எழுதுகோலை எடுத்துக்கொண்டான்; தக்க வருணப் பொருள் வேண்டுமே யென்று சிந்தித்து, அமிர்தமே அத்தகைய பொருளென்று தீர்மானித்தான். உடனே தேவாமிர்தத்திலே எழுதுகோலைத் தோய்த்தான். அப்படியாவது எழுதி முடித்தானா சித்திரத்தை? எழுதத் தொடங்கவே யில்லையாம். அந்த அவயவம் ஒன்றைக்கூடச் சரிவர எழுத முடியவில்லை! 'அவயவம் அமைக்கும் தன்மை யாது?' என்றே திகைத்துப் போய்விட்டானாம்.

இத்தகைய 'வரம்பில் பேரழகி'யைத் தந்த 'பொன்மதில் மிதிலை' இயற்கையழகும் செயற்கையழகும் ஒருங்கே குடிகொள்ளும் ஓர் அபூர்வமான செந்தாமரை மலர்போல் அமைந்து விளங்குகிறதாம்.

மூவரும் வீதிவழியே செல்லுகிறார்கள். வழி நடந்த களைப்புத் தீர்ந்து, பசியுந் தீர்ந்து போய்விடுகிறதாம். அப்படி என்ன விருந்து கிடைத்துவிட்டது?

**வள்ளுகிர்த் தளிர்க்கை நோவ, மாடகம் பற்றி வார்ந்த**
**கள்ளென நரம்பு வீக்கிக் கையொடு மனமும் கூட்டி,**
**வெள்ளிய முறுவல் தோன்ற, விருந்தென மகளிர் ஈந்த**
**தெள்விளிப் பாணித் தீந்தேன் செவிமடுத்(து), இனிது சென்றார்.**

[ வள் உகிர் - வலிய நகங்கள். தளிர்க் கை - தளிர் போன்ற கை; (இங்கே) கைவிரல்கள். மாடகம் - வீணையின் முறுக்காணி. வார்ந்த -

ஒழுகிய. கள் - (இங்கே) தேன்தாரை. வீக்கி - கட்டி. வெள்ளிய - வெண்ணிறமான. முறுவல் - புன்சிரிப்பு. தெள் - தெளிவான. விளி - இசை. பாணி - பாட்டு. மடுத்து - உண்டு ; ஊட்டி. ]

பெண்கள் வீணுகானஞ் செய்கிருர்கள். மனோவேகமாய்க் கைசெல்ல, அனுயாசமாக வெளிப்படும் அந்த இசைத்தேனைக் காது நிறையத் தேக்கிப் பருகிக்கொண்டே இன்பமாகச் செல்லுகிருர்கள் இராமன் முதலானோர்.

இப்படி இசைவிருந்து செய்யும் அந்த மகளிரை நாம் எவ்வளவு பிரத்தியட்சமாய்ப் பார்க்கிறோம், அந்த 'வெள்ளிய முறுவ'லோடும், உள்ளம் படர்வதுபோலச் செல்லும் 'தளிர்க் கை'களோடும், அந்தக் கைகளிலுள்ள கூர்மையான நகங்களோடும் கூட!

செவிக்கு விருந்தோடு கண்ணுக்கும் விருந்துகள் :

நெய்திரள் நரம்பிற் றந்த மழலையின் இயன்ற பாடல்,
தைவரு மகர வீணை தண்ணுமை தழுவித் தூங்கக்
கைவழி நயனம் செல்லக் கண்வழி மனமும் செல்ல,
ஐயநுண் ணிடையார் ஆடும் ஆடக அரங்கு கண்டார்.

[ நெய்திரள் நரம்பு - நெய்யின் ஒழுக்குப்போல் திரண்ட நரம்பு. மழலையின் - மழலைச் சொல்லைப்போல். தைவரு - தடவுகிற. தண்ணுமை - மத்தளம். தூங்க - ஒலிக்க. ஐய நுண் இடையார் - (உண்டோ, இல்லையோ ? - என்று சந்தேகிக்கும்படி அவ்வளவு) நுட்பமான இடையுள்ள பெண்கள். ஆடகம் - பொன். அரங்கு - நடனசாலை. ]

வீணுகானத்திற்கும் மத்தளத்திற்கும் இசைய வாய்ப்பாட்டு ; அந்தப் பாட்டின் கருத்துக்கிசைய அபிநயம். அபிநயிக்கும் கை வழியே கண் செல்ல, அந்தக் கண் வழியே மனமும் செல்ல, நாட்டியப் பெண்கள் நாட்டியம் ஆடுகிருர்கள். மனம், அபிநயங் காட்டக் கையைச் செலுத்திக் கைவழியே கண்ணைச் செலுத்திக் கண் வழியே தானும் செல்லுகிறதாம். 'கைவழி நயனம் செல்லக் கண்வழி மனமும் செல்ல' அபிநயிக்கிருர்கள் என்பது எவ்வளவு பொருத்தமாயிருக்கிறது!

## காதற் பூஞ்சோலை

---

மிதிலைப் பெண்களின் முகங்களை நோக்குவதே கண் விருந்து! ஆடவேண்டாம், பாடவேண்டாம்; மாளிகை முகப்புக்களிலுள்ள பலகணி வாயிலாக அவர்கள் வீதியைப் பார்த்துக்கொண்டிருக்கும் அந்த அழகே போதும். 'பகலிலும் சந்திரோதயம்—சிறிதும் ஒளி மழுங்காத, அழகு குன்றாத, களங்கமில்லாத பூர்ண சந்திரோதயம்' என்று பிரமிக்கும்படி காட்சி யளிப்பார்களாம்.

> வாளரம் பொருத வேலும், மன்மதன் சிலையும், வண்டின்
> கேளொடு கிடந்த நீலச் சுருளும்,செங் கிடையும் கொண்டு,
> நீளிருங் களங்கம் நீக்கி, நிரைமணி மாட நெற்றிச்
> சாளரந் தோறும் தோன்றும் சந்திர வுதயம் கண்டார்.

[ வாளரம் பொருத - ஒளியுள்ள அரத்தினால் அராவப்பட்ட. சிலை - வில். கேள் - உறவு; இனம். கிடந்த - பொருந்திய. செங்கிடை - சிவந்த கிடைச்சு. இருங் களங்கம் - பெரிய களங்கம். நிரை - வரிசை. நெற்றி - மேலிடம். ]

'இவ்வூரிலே ஒரு சந்திரனா? எத்தனையோ சந்திரர்கள்: வீடு தோறும், வீதி தோறும் சந்திரோதயம்' என்றெல்லாம் வியக்கும்படியா யிருக்கிறது அந்த முகங்களின் தோற்றம். அந்த முக சந்திரர்களை அழகு செய்கின்றன வேல் போன்ற கண், வில்லை யொத்த நெற்றி, நீல ரத்தினச் சுருள்போலிருக்கும் கூந்தல் முதலியன. இப்படிச் சாளரந்தோறும் சந்திரோதய மானதுபோல் முகங் காட்டி மாதரசிகள் பலர், முனிவருடன் செல்லும் அரசிளங் குமாரர்களைப் பார்க்க வந்து நிற்கிறார்களாம்.

மிதிலை மாதர் ஊஞ்சலிலிருந்து விளையாட்டமாடும் காட்சியும் ஓர் அதிசயமான கண்விருந்து. மிதிலை மாநகரத்தின் நெடுந் தெருக்களை அழகு செய்கின்றன பூஞ்சோலைகள். அந்தச் சோலைகளுக்கு அழகு தந்து நிற்பது, 'பவளச் செங்காய் மரகதக் கமுகு.' அக்கமுக மரங்களை அணி செய்து தொங்கும் ஊஞ்சல்களைக் கவிஞன், 'பவளச் செங்காய் மரகதக் கமுகு பூண்ட

ஊசல்' என்கிறான். பவளம் போன்ற செங்காயோடு விளங்கும் மரகத நிறமான பாக்குமரம், மகளிர் வீற்றிருக்கும் ஊஞ்சலையும் தன் அழகுக்கு இசைந்ததோர் அணியாகப் பூண்டு விளங்குகிறது.

அவ்வூஞ்சல்களில் இனிது வீற்றிருந்து பெண்மையின் அணிகலமான மாதரசிகள் ஆடுகிறார்கள்.

பூசலின் எழுந்த வண்டு மருங்கினுக்(கு) இரங்கிப் பொங்க,
மாசுறு பிறவி போல வருவது போவ தாகிக்
காசறு பவளச் செங்காய் மரகதக் கமுகு பூண்ட
ஊசலின் மகளிர், மைந்தர் சிந்தையோ(டு) உலாவக் கண்டார்.

[ பூசல் - ஆரவாரம். மருங்கு - இடை. காசறு - குற்றமற்ற. ]

இவ்வாறு ஆடும்போது ஊஞ்சல்கள் மாறி மாறி மேல்கீழாய் ஓடி ஓடி வருவதும் போவதுமாயிருக்கின்றன. எப்படி? 'மாசுறு பிறவி போல வருவது போவ தாகி' என்று ஒரு வேதாந்த பாடமும் கற்பிக்கிறான் கவிஞன், இந்தக் காதற் காட்சியிலேயே.

ஆம் : இந்த ஊஞ்சற் காட்சி ஒரு காதற்காட்சியுங்கூட. ஆட்டத்தின் அதிர்ச்சியால், பெண்களின் மேனியை அலங்கரிக்கும் பூமாலைகளில் மொய்த்திருந்த வண்டுகள் மேலெழுந்து ரீங்காரஞ் செய்கின்றன. இக்காட்சி யழகைப் பருகி நின்ற மைந்தர்களிற் சிலர், 'இம்மகளிரது மெல்லிய இடை விசையாட்டத்தைப் பொறுக்க மாட்டாது என்றல்லவோ, வண்டுகளும் இரங்கி வாய்விட்டு அரற்றுகின்றன?' என்று காதல் மிகுதியால் கவலை யடைகிறார்கள். இங்ஙனம் ஊஞ்சலாடும் விந்தையை நோக்கிய கண்கள் செயலற்று நிற்க, மனம் தடுமாறுகிறது. மகளிர் ஊஞ்சல் ஆடுகிறார்: மைந்தர் மனமும் ஊஞ்சலாடுகிறது. ஊஞ்சலோடு போகும் மனம், ஊஞ்சலோடுதான் உலாவிக்கொண்டிருக்கிறது!

இக்காட்சியைக் காண்கிறார்கள் இராமன் முதலியவர்கள், தாங்கள் போகும் வழியிலே. அவர்களோடு நாமும் இந்தக் காட்சியைக் கண்டு களிக்கிறோம், கவிஞன் அருளால். பாடிப்பாடி அனுபவியுங்கள் இந்த ஊஞ்சற்பாட்டையும் இதன் இசைநலத்தையும்.

இத்தகைய பல வேறு காட்சிகளையும் பார்த்துக்கொண்டே விசுவாமித்திர ராம லட்சுமணர், அரண்மனையின் மதிற்புறத்திலுள்ள ஒரு சோலையைக் கண்டார்கள்.

**பாகொக் கும்சொற் பைங்கிளி யோடும் பலபேசி,**
**மாகத்(து) உம்பர் மங்கையர் நாண மலர்கொய்யும்**
**தோகைக் கொம்பின் அன்னவர்க்(கு), அன்னம் நடைதோற்றுப்**
**போகக் கண்டு, வண்டினம் ஆர்க்கும் பொழில்கண்டார்.**

[ மாகத்து உம்பர் மங்கையர் - பெரிய ஆகாயத்தின் மீதுள்ள தெய்வப் பெண்கள். தோகை - மயில். கொம்பு - பூங்கொம்பு. ஆர்க்கும் - ஆரவாரம் செய்யும். ]

சோலையில் பைங்கிளிகளுடன் கொஞ்சிப் பேசிக்கொண்டே பூக் கொய்கிறார்கள் பெண்கள். அந்த மெல்லிய உருவத்தையும் அந்தச் சாயலையும் அப்போது வானத்திலிருந்து பார்த்துக்கொண்டிருக்கும் தெய்வப் பெண்கள், 'ஆஹா! இந்த மிதிலைப் பெண்கள் எங்கே? நாம் எங்கே!' என்று நாணமடைந்திருக்கிறார்களாம். தெய்வமங்கையர் வடிவழகுக்குத் தோற்றுப்போக, அன்னங்கள் நடையழகுக்குத் தோற்றுப்போவதுபோல் இந்தப்பெண்களைக்கண்டு ஒதுங்கிப்போகின்றனவாம், பூங்கொம்புகளுக்கிடையே நடைபயிலும் பூங்கொம்புகள் போல் அவர்கள் பூக்கொய்யும்போது. அப்போது வண்டுகள் மேலெழுந்து ரீங்காரஞ் செய்வது தோற்றவர்களுக்கு அவமதிப்பும் வெற்றி அடைந்தவர்களுக்கு மகிழ்ச்சியுமுண்டாகும்படி கோஷம் செய்வதுபோலிருக்கிறதாம்.

இப்படிப்பட்ட காட்சிகள் மிதிலை மாநகரத்தையே ஒரு சிங்காரப் பூஞ்சோலையாகக் காட்டுகின்றன. இன்பமயமாகத் தொடங்கும்

மிதிலைக்காட்சிகள் இன்பத்தின்மேல் இன்பமாக மலர்கின்றன. ஆம்: காவிய நாயகனும் காவிய நாயகியும் ஒருவரை யொருவர் சந்தித்துக் காதலிப்பதற்கு இசைந்ததொரு காதற் சோலையாகக் கம்பன் மிதிலையைச் சிங்காரிக்கிறான்.

காவிய நாயகனது அறப்பெருங் கோயிலான அயோத்தி இலட்சியங்களின் பூங்கோயில். காவியநாயகியின் அழகுக் கோயிலான மிதிலையோ, காதலின் பூஞ்சோலை. அயோத்தி, அறிவுத் தெய்வம் அருள்நடம் புரியும் வெண்தாமரை மலர்: 'திருமகள் இருந்த செய்ய போதெனப் பொலிந்து தோன்றும் பொன்மதில் மிதிலை'யோ, அழகுத் தெய்வம் ஆனந்தநடம் புரியும் செந்தாமரை மலர்.

## 12. 'கண்வழிப் புகுந்த காதல்'

விசுவாமித்திரர் முன்னே போக, இராமன் பின்னே போகிறான்; இலட்சுமணன் அண்ணன் பின்னே போய்க் கொண்டிருக்கிறான்.

இராஜகுலப் பெண்கள் பூக்கொய்து கொண்டிருந்த சோலையை அடுத்து, மிகவும் அழகிய பொன்மயமான மாளிகை வரிசைகளோடு கூடிய மகாராஜாவின் அரண்மனை, சுற்றிலுமுள்ள அகழியோடும் அகழியோடும் கட்புலனாயிற்று. அவ்வரண்மனையிலுள்ள கன்னி மாடத்தின் மேடையிலே, அது என்ன? பொன்னின் ஜோதியா? பூவின் நறுமணமே அப்படிப் பொலிகின்றதா? தேனின் தீஞ்சுவையோ அப்படி ஓர் உருவங்கொண்டு நிற்கிறது? அல்லது கவியின்பம்தானே உருவெடுத்து வந்து விட்டதா?

பொன்னின் சோதி போதினில் நாற்றம் பொலிவேபோல்
தென்னுண் தேனின் தீஞ்சுவை செஞ்சொற் கவியின்பம்,
கன்னிம் மாடத்(து) உம்பரின் மாடே, களிபேடோ(டு)
அன்னம் ஆடும் முன்துறை கண்டங்(கு) அயல்நின்றாள்.

[ போது - பூ. நாற்றம் - நறுமணம். பொலிவு - சிறப்பு. தென் உண் - அழகு பொருந்திய. உம்பரின் மாடே - மேலிடத்தில்; மேடையில். களிபேடு- களிக்கின்ற பெண் அன்னம். ஆடும் - விளையாடும். அயல் - அருகே. ]

பொன்னொளி, பூமணம், தேன்சுவை, கவியின்பம் அனைத்தும் ஒருங்கே திரண்டு ஓருருவாய்ப் பொலிகிறதென்று பிரமிக்கும்படி நிற்கிறாளாம். உபமானமாகக் கூறிய பொருள்களெல்லாம் இனிய பொருள்களிலும் இனிய பொருள்கள்: அவைகளை அடுக்கி அடுக்கிக் கவியின்பத்தை மகுடமாக வைத்து அந்த அழகு — ராணியை முதல் முதல் காட்டுவது எவ்வளவு பொருத்தமாயிருக்கிறது, பாருங்கள்!

'செஞ்சொற் கவியின்பம்' என்கிருன்.' செம்மையாக வந்தமையும் சொற்களிலே பிறக்கும் கவியின்பம்' என்பது பொருள். சொற்களில் இல்லாத இன்பத்தைச் சொற்களைக்கொண்டே பிறப்பித்துக் காட்டும் மந்திரவித்தை யல்லவா கவிதை யென்பது? தன் மாத்திரைக் கோலை உயர்த்துகிருன் கவிஞன் என்ற மந்திரவாதி: வந்து விழுகின் றன செஞ்சொற்களும் சொற்ெருடர்களும், 'நான் முன்னே!' 'நான் முன்னே'! யென்று. உடனே சொற்கள் மறைந்து, கவியின்பம் வந்து விடுகிறது. இத்தகைய 'செஞ்சொற் கவியின்ப' மென்று குறிப்பிடு கிருன் காவிய நாயகியை, அவள் காதலின்பம் இன்னதென்று முதல் முதல் உணரும் தருணத்திலே. கவியின்பமும் ஒருவகையில் 'காதலின்பம்' தானே!

அவள் 'மின்சே விக்க மின்னர சென்னும் படிநின்ருள்! மின்னல்களெல்லாம் சுற்றிலுமிருந்து சேவிக்க அவற்றினிடையே மின்னல் - ராணிபோல நிற்கிருளாம் கவியின்பமாகிய பிராட்டி.

கண்ணைப் பறிக்கும் கட்டழகிகளான தோழிமார், 'மானே! தேனே! அம்மையே! அமிர்தமே!' என்று அருமையாக அழைத்து, அவள் அடிமலர்கள் நோவாமலிருக்க வேணு மென்று போகுமிடங்களில் பூச்சொரிந்து முறையாகப் பக்கத்திலே வருகிருர்களாம். அவர்கள் தூவிய பூக்கள் சூழக் காட்சி யளிக்கிருள் சீதாலட்சுமியும் மகாலட்சுமிபோலே.

தந்நே ரில்லா மங்கையர், 'செங்கைத் தவிர்மானே!
அன்னே! தேனே! ஆரமிர் தே!'என்(று) அடிபோற்றி,
முன்னே முன்னே மொய்ம்மலர் தூவி முறைசாரப்
பொன்னே சூழும் பூவின் ஒதுங்கிப் பொலிகின்ருள்.

[அன்னே - அன்னையே. மொய் - நெருக்கம். சார - பக்கத்தில் வர. பொன் - இலட்சுமி.]

பெண்மை யென்ற கற்பக விருட்சத்திலே எத்தனையோ மகா யுகங்களுக்கிடையே, அபூர்வமாகக் கனிந்து வரும் கனியல்லவா?

கொல்லும் வேலும் கூற்றமு மென்னும் இவையெல்லாம்,
வெல்லும் வெல்லும் என்ன மதர்க்கும் விழிகொண்டாள்
சொல்லும் தன்மைத் தன்றது; குன்றும் சுவரும்திண்
கல்லும் புல்லும் கண்டுரு கப்பெண் கனிநின்ருள்.

[ மதர்க்கும் - களிக்கும். அது - அந்த நிலே. திண் - வன்மையான. ]

பெரிய குன்றும் சிறிய சுவரும், வன்மையான கல்லும் மென்மை யான புல்லும் எல்லாம் எப்படியோ அந்தப் பேரழகைக் கண்டு உருகிக்கொண்டிருக்கின்றனவாம். அசேதனமான கல்லும் புல்லுங் கூடக் கண்டு உருகுவதென்ருல், கண் படைத்த பயனைச் சீதையைக் கண்டு கொண்டிருக்கும் சேதனராகிய தோழிப்பெண்களும் செவிலித் தாயரும், எவ்வளவு இன்பமடைந்து எப்படி உருகிக்கொண்டிருப் பார்கள் !

'கல்லும் புல்லும் கண்டுருக' நின்ற 'பெண்கனி,' தன் 'ஆசையின் கனி'யைச் சந்திக்கிருள். இராமனும் காதலியைக் கண்ணில் நோக்கிக் களிகின்ருன். அச்சமயம் சீதை, அருகேயுள்ள ஒரு துறையில் பெண் அன்னத்தோடு ஆண் அன்னம் விளையாடு வதைப் பார்த்துக்கொண்டிருக்கிருள். அதே சமயத்தில் சீதை கண் களும் இராமன் கண்களும் தற்செயலாகச் சந்தித்ததும், சீதையின் கன்னியுள்ளத்திலே காதல் - வேட்கை விளைகின்றது. இக்காட்சி இராமனுள்ளத்திலும் காதலே விளைவித்து, என்றும் வாடாத மனப் படமாக ஆழ்ந்து பதிந்ததென்பது, 'அன்னம்ஆ டும்துறைக்(கு) அருகுநின் ருளை அக்—கன்னிமா டத்திடைக் கண்டதும் கழறுவாய் !' என்று இராமன் பின்னல் அனுமனை நோக்கிக் கூறப்போகும் அடையாள வார்த்தையால் இனிது புலனுகும்.

'கண்ணெடு கண்ணிணை நோக்(கு)ஒக்கின், வாய்ச்சொற்கள்— என்ன பயனும் இல' என்பது தமிழர் பொதுமறை. இதைத் தழுவியே கம்பனும் காதலர் காட்சியைச் சித்திரிக்கிருன் :

எண்ணரு நலத்தினுள் இனையள் நின்றுழிக்
கண்ணொடு கண்ணிணை கவ்வி ஒன்றையொன்(று)
உண்ணவும், நிலைபெரு(து) உணர்வும் ஒன்றிட,
அண்ணலும் நோக்கினன், அவளும் நோக்கினள்.

[ எண்ணரு - நினைத்தற்கும் அருமையான. நலம் - அழகு. இனையள் - இத்தன்மையள். நின்றுழி - நின்ற பொழுது. ]

கண்களோடு கண்கள் கவ்வி ஒன்றை யொன்று உண்ணவும், உடனே இருவர் உணர்வுகளும் தத்தம் இடத்தே நிலைபெற்றிராமல் ஒன்றை யொன்று கூடி ஒற்றுமைப் படுகின்றனவாம்.

'கண்களோடு கண்கள் நோக்கால் ஒத்தன' என்று திருவள்ளுவர் கூறுவது சாதாரணமான காதற் காட்சி. காதலின் பரிபாஷை களிலே கண்கள் தடையின்றி உரையாடுகின்றன. நீண்ட நேரமாக வாய்ச் சொற்களால் சொல்லமுடியாத அரும்பெரும் பொருள்களை யெல்லாம் காதலர் கண்கள் கணத்திலே பேசி முடித்து விடுகின் றனவாம். ஆனால் 'கண்களோடு கண்கள் கவ்வி உண்ணலாயின!' என்பது அதிதீவிரமான காதல். கண்கள்மேல் கண்கள் விழ, உள்ளத்தோடு உள்ளம் ஒன்று படுகிறது. மனம் ஒன்றி நிற்க மணம் நிறைவெய்துகிறது, அக வுலகிலே! திருக்குறளும் இங்கே ஒரு புதிய ஒளியும் நிறமும் பெற்று ஓர் அருங்குறளாகிற தென்னலாம்.

இங்ஙனம் மனம் பொருந்தி மணம் பெறும் காதல் - நோக்கை, 'அண்ணலும் நோக்கினன், அவளும் நோக்கினள்!' என்று எவ்வளவு இலேசாய்க் காட்டிவிடுகிறான்: என்ன அபூர்வமான எளிமை! இந்தக் காதலர் - காட்சி கம்பராமாயணத்தின் உயிர்நிலையாகக் கருதத் தக்கது.

இயற்கையாக இணைந்து நிற்கும் காதலென்ற பரஸ்பர தெய்விக உணர்வு முற்பிறப்பிலிருந்தே வளர்ந்து வருவதாய்க் கருதுவதுண்டு. இந்த அருங்கருத்தினைக் கம்பன்,

மருங்கிலா நங்கையும் வசையில் ஐயனும்
ஒருங்கிய இரண்டுடற்(கு) உயிரொன் ருயினர் :
கருங்கடற் பள்ளியில் கலவி நீங்கிப்போய்ப்
பிரிந்தவர் கூடினல், பேசல் வேண்டுமோ ?

[மருங்கு - இடை. ஒருங்கிய - ஒற்றுமைப்பட்ட. கலவி - கலந்திருத்தல்.]

என்ற பாட்டில் குறிப்பாக அமைத்திருக்கிருன்.

பாற்கடலிலே மனங்கலந்திருந்த பழைய நிலைமை நீங்கித் தனித்தனியே பிரிந்து போன காதலர்கள் மீண்டும் (ஓரிடத்தில் அல்லது ஒரு பிறப்பில்) எதிர்பாராது எதிர்ப்பட்டால், அவர்கள் தமக்குள் வார்த்தை யாடுதலும் வேண்டுமோ?—என்பது பாட்டின் பொருள். பல பிறப்புக்களூடே வளர்ந்தும் மறைந்தும் வெளிப்பட்டும் ஒளிரும் பொற்சரடு போன்ற காதலின்பத்தை என்னென்று பேசுவது? — என்பது பொதுவான கருத்து.

இந்தக் கருத்தை ரஸிப்பதற்கு முற்பிறப்பு உண்டா, இல்லையா? — என்ற ஆராய்ச்சி தேவை யில்லை. காதலர்களின் உணர்ச்சியையும் கவிஞர்களின் உணர்ச்சியையும் உணர்ந்து அனுபவிப்பதே போதும். காதலர்கள் திடீரென்று அன்னியரைப் போல் தாங்கள் சந்திக்கவில்லை யென்று நினைக்கிருர்கள். ஏதோ ஒரு காலத்தில் எங்கேயோ ஓரிடத்தில் கூடியிருந்து பிரிந்தவர்கள் மீண்டும் சந்திக்கும்போது எப்படிப்பட்ட உணர்ச்சியை அடைவார்களோ, அப்படிப்பட்ட உணர்ச்சியைப் புதிதாகச் சந்திக்கும் காதலரும் அடையக் கூடும். இவ்வுணர்ச்சி சிலருக்கு வெளிப்படையாகத் தோன்றும்; வேறு சிலருக்கு உள்ளத்தின் ஆழத்திலே மறைந்திருக்கும்.

மனேபாவத்திலே கவிஞரும் காதலரை ஒத்தவர். அவர்களும் காதலர் காட்சியைப் பிரிந்தவர் கூட்டமாக உணர்ந்து பேசுவதுண்டு. , காதல் அழிவில்லாத ஐசுவரியம்; மரண வாயிலாகவும் நம்மைத்

தொடர்ந்து வரும் நிறைசெல்வம்; பல பிறப்புக்களிலும், உலகங்களிலும் மக்களைவிட்டு நீங்காத பொக்கிஷம்' — என்றெல்லாம் கவிஞர்கள் காதலுக்கு ஓர் இராஜ-பட்டயம் வழங்கியிருக்கிறார்கள்.

இத்தகைய காதலுணர்வை அடைந்த சீதாராமர்களின் நிலையைப் 'பிரிந்தவர் கூடினால் பேசல் வேண்டுமோ?' என்ற வாக்கு எவ்வளவு வசீகரமாக வெளியிடுகிறது! இந்த வாக்கின் எளிமைதான் எப்படி?

ஒருவரையொருவர் பார்த்த மாத்திரத்தில் இராமனும் சீதையும் காதலிற் கலந்த உணர்வினராய் 'இரண்டு உடம்புகளுக்கு ஓர் உயிர்' என்னும்படி ஒற்றுமைப்படுகிறார்கள். இவர்களில் நுண்ணிய இடையையுடைய சீதையை 'இடையில்லாத சீதை' என்று கூறியதற்கு ஏற்றவாறு, 'இராமனுக்கும் ஒன்று இல்லை!' என்று குறை கூறத் தொடங்கியது போலச் சாதுரியமாக அவனை 'வசை அல்லது குற்றமில்லாத ஐயன்' என்று குறிப்பிடுகிறான் கவிஞன்.

உள்ளங் கலந்து ஒருயிரான காதலர்கள், காதலால் புத்துயிர் பெறுகிறார்களென்று சொல்லவேண்டும். இப்புது நிலையின் தன்மை,

பருகிய நோக்கெனும் பாசத் தால்பிணித்(து)
ஒருவரை ஒருவர்தம் உள்ளம் ஈர்த்தலால்,
வரிசிலை அண்ணலும் வாட்கண் நங்கையும்
இருவரும் மாறிப்புக்(கு) இதயம் எய்தினர்

[பாசம் - கயிறு. ஈர்த்தல் - இழுத்தல். வரி சிலை - கட்டிய வில்.]

என்ற செய்யுளில் வெளியிடப்படுகிறது.

ஒருவர் அழகை ஒருவர் முகந்து பருகுகிறார் இருகண்களாலும்: அவ்வளவு தாகம் காதலுக்கு! 'பருகிய நோக்கு' ஒரு 'பாச'மாக முறுகுகிறது: அந்தப் பார்வையென்னும் பாசத்தால் கட்டி ஒருவரை மற்றொருவர் மனம் இழுக்க, இருவரும் மாறி இதயப் பிரவேசஞ்

செய்கிறார்களாம். இந்த அதிசய சம்பவம் முழுமையும் ஒரு கணத்திலே நிகழ்ந்து விடுகிறது, காதல் - நோக்கின் பயனாக.

இராமன் சீதையின் இதயத்தை அடைகிறான்; சீதையும் இராமன் இதயத்தை அடைகிறாள். தலைவன், வில்லும் கையுமாய்ப் புகுந்து கன்னியின் மனக் கோயிலை வசமாக்கிக் கொள்ளுகிறான். ‘ விஜய வாட்கண் ’ நங்கையாகிய தலைவியும் வில்வீரனாகிய தலைவனுள்ளத்தில் பிரவேசித்து அம்மனக் கோட்டையைப் பிடித்துக் கொள்ளுகிறாள். தலைமகன் விற்படையோடு பிரவேசிக்கிறான்: தலைமகளுக்கோ கண்ணாகிய வாட்படையே போதும்! இவ்வாறு கூறும் கவிஞன் தம்பதிகளின் ஒப்புமை கூறுகிறானா? சீதையின் பெருமை கூறுகிறானா? இது எப்படி யிருந்தபோதிலும், இனி இராமன் சீதைக்காகவே வாழ்கிறானென்றும், சீதையும் இராமனுக்காகவே வாழ்கிறாளென்றும் கருதலாம். இனி இவர்களுடைய காதலின் வெற்றிதான் இராமாயணம்!

இராமன் கண்களும், சீதை கண்களும் சந்தித்ததை அவர்களைத் தவிர வேறொருவரும் அறியார். இந்த நிகழ்ச்சி சீதையின் தோழிகளுக்கும் தெரியாது; இராமனுக்கு முன்னும் பின்னும் சென்ற முனிவர், தம்பி இவர்களுக்கும் தெரியாது. மூவரும் போய்க்கொண்டேயிருக்கிறார்கள். சீதையோ சித்திரப் பதுமைபோல் அசைவற்று நிற்கிறாள். எனினும் அவள் மனமும் உறுதியும் இராமனைத் தொடர்ந்து போகின்றன:

அந்தமில் நோக்(கு)இமை அணைகி லாமையால்,
பைந்தொடி ஓவியப் பாவை போன்றனள்:
சிந்தையும் நிறையும்மெய்ந் நலனும் பின்செல,
மைந்தனும் முனியொடு மறையப் போயினன்.

[ பைந்தொடி - பசும்பொன்னாலாகிய தொடி யென்னும் வளையையுடைய சீதை. ஓவியப் பாவை - சித்திரப் பதுமை. நிறை - (மனத்தை) நிறுத்தும் ஆற்றல்; மனவுறுதி. மெய்ந்நலன் - உடம்பின் அழகு. ]

மனவுறுதி மட்டுமா? மேனி யழகும் போய்விட்டதாம் இராமனோடு. விரகதாபத்தால் அவ்வளவு சீக்கிரமாக அழகு மழுங்கத் தொடங்கியதென்பது குறிப்பு.

இயன்றவரை மனத்தை அடக்க முயன்றாள். தன்னடக்கம் என்ற அங்குசத்தால் அடக்கிக்கொண்டுதான் இருந்தாளாம். ஆனால் இராமன் மறையவும் நிகழ்ந்ததென்ன?

பிறையெனும் நுதலவள் பெண்மை என்படும்?
நறைகமழ் அலங்கலான் நயன கோசரம்
மறைதலும், மனமெனும் மத்த யானையின்
நிறையெனும் அங்குசம் நிமிர்ந்து போயதே!

[ நுதல் - நெற்றி. நறை - நல்ல வாசனை. அலங்கலான் - பூமாலையை யுடைய இராமன். கோசரம் - பொறி யுணர்வு. மத்த யானை - மத யானை. ]

கண்பார்வையிலிருந்து இராமன் மறைந்த மாத்திரத்தில், சீதையின்—காதல் மிகுந்த—மனமென்ற யானை அடங்காது செல்லத் தொடங்கியதாம். அதை அடக்குதற்கு நிறை யென்ற அங்குசத்தை மாட்டிப் பலமாக இழுத்தாளாம் கற்பிற்கரசி. ஆனால் அந்த யானை அந்த நிறை யங்குசத்தையும் மீறிப் போயிற்றாம். அங்குசம் கைவிடப்படவே யில்லை. எனினும் அதன் பிடிப்பு விலகும்படி கொக்கியை நிமிரப்பண்ணி ஓடிப்போய்விட்டதாம் மதயானை. இன்பத்திற்கு இன்பம் தருவதுபோல் இந்தப் பாட்டின் ஓசை யின்பத்தைப் பெருக்கிக்காட்டுகிறது 'நயன கோசரம்' என்ற வடமொழித் தொடர்.

வில்லை முறித்த பின்பே இராமன் சீதையைக் கண்டதாக வால்மீகி ராமாயணம் கூறுகிறது. காதல் முன்னும் வில்முறிவு பின்னுமாகச் சித்திரிக்கிறான் கம்பன், கலாரஸிகர்களின் நோக்கத்திற்

கேற்றபடி. சீதாராமர்களின் காதலேப்பற்றிய கற்பனே கம்பனுக்கு முன்பே தமிழ் நாட்டில் வழங்கி வந்ததுதான். அக்கற்பனேயைத் தழுவி இக்காதலர் காட்சியும் அமைக்கப்பட்டிருக்க வேண்டும். எனினும் இது ஒரு புதிய சிருஷ்டி: கம்ப சித்திரத்தில் சீதா ராமர்களின் காதலினின்றும் அவர்கள் குணுதிசயம் வளர்ந்தோங்கு வதைக் காண்கிறேம்.

இக்காதலர் காட்சி, 'கடிமணப் படல'த்தில் குறிக்கப்படும் கரணத்திற்குப் பூர்வாங்கமாகிறது.



## 13. கருநெருப்பும் வெண்ணெருப்பும்

இராமன் வீதி வழியே சென்று மறைந்ததும், சீதையின் மனம் விவேகத்துக்கு அடங்காமல் காமாவேசம் அடைந்தது. அந்த ஆவேசம் — அந்தக் காதல்நோய் — கண் வழியே புகுந்து உடம்பெங்கும் பரவி விட்டதாம், பாலில் உற்ற பிரை போலே.

மாலுற வருதலும், மனமும் மெய்யும்தன்
நூலுறு மருங்குல்போல் நுடங்கு வாள்நெடுங்
காலுறு கண்வழிப் புகுந்த காதல்நோய்,
பாலுறு பிரையெனப் பரந்த தெங்குமே.

[ மால் - ஆசை. உற - மிகுதியாக. வருதல் - வளர்தல். நூலுறு - நூல் போன்ற. மருங்குல் - இடை. நுடங்குதல் - நுட்பமாதல். காலுறு - வழியாக உற்ற. பிரை - பாலை உறைவிக்கும் மோர்த்துளி. ]

காதல் வளரச் சீதை தளர்கிறாள். தோழியரிடம் சொல்லுவதற்கும் சங்கோசம். அதுதான் சமயமென்று எரிகிற நெருப்பிலே விறகு போடுவதுபோல் அம்பு போடுகிறானும் காமனும் :

நோம்; உறு நோய்நிலை நுவல கிற்றிலள்,
ஊமரின் மனத்திடை உன்னி விம்முவாள் :
காமனும் ஒருசரம் கருத்தில் எய்தனன்,
வேமெரி யதனிடை விறகிட் டென்னவே.

[ நோம் - வருந்துவாள். நுவலகிற்றிலள் - சொல்லமாட்டாதவளாய். ஊமரின் - ஊமைகள் போலே. வேம் எரி - எரிகிற நெருப்பு. ]

அந்தக் காமாக்கினியிலே சாம்பிக்கிடக்கிறாள் சீதை, நெருப்பிலே போட்ட பூங்கொடி போலே. தோழியர்கள் அவளை அழைத்துக் கொண்டுபோய்ப் பூக்கள் பரப்பிய படுக்கையிற் சேர்க்க,

கம்பமில் கொடுமனக் கான வேடன்கை
அம்பொடு சோர்வதோர் மயிலும் அன்னவள்,
வெம்புறு மனத்(து)அனல் வெதுப்ப, மென்மலர்க்
கொம்பென, அமளியிற் குழைந்து சாய்ந்தனள்.

[ கம்பமில் - கலங்குதல் இல்லாத; (இங்கே) கொஞ்சமும் இரக்க மில்லாத. அமளி - படுக்கை. ]

தோழிமார் பெரு விசிறிகள் கொண்டு வீசுகிறார்கள், சைத்தியோபசாரமாக. அந்தக் காற்றும் காமாக்கினியைத் தானே விசிறி ஜ்வாலை செய்துவிடுகிறதாம். அப்போது நெருப்பில் உருகிக்கொண்டிருக்கும் தங்கப் பதுமைபோலத் தோன்றுகிறாள்.

அருகில்நின்(று) அசைக்கின்ற ஆல வட்டக்கால்
எரியினை மிகுத்திட, இழையும் மாலையும்
கரிகுவ, தீகுவ, கனல்வ காட்டலால்,
உருகுபொற் பாவையும் ஒத்துத் தோன்றினாள்.

[ ஆலவட்டம் - பெரு விசிறி. கால் - காற்று. இழை - ஆபரணம். ]

இப்படிக் காம பரவசையாயிருக்கும் நிலையில், சீதையின் வாய் தானே பிதற்றத் தொடங்குகிறதாம்:

600 அல்லினை வகுத்ததோர் அலங்கற் காடெனும்;
வல்எழு அல்லவேல், மரக தப்பெருங்
கல்லெனும் இருபுயம்; கமலம் கண்ணெனும்;
வில்லொடும் இழிந்ததோர் மேகம் என்னுமால்.

[ அல் - இருள். அலங்கல் - பூமாலை. வல் எழு - வலிய தூண்கள். இழிந்தது - இறங்கினது. ]

'இருளைக்கொண்டு வகுத்த ஒரு பூமாலைக் காடு' என்கிறாளாம், காதலனது மயிர் முடியையும், அதன் அடர்த்தியையும், அதிலே மாலை சூட்டியிருக்கும் அழகையும் நினைத்து நினைத்து. உடனே அந்த வீரத்தோள்களின் ஞாபகம் வருகிறது. 'திரண்டு உருண்டு பருத்துயர்ந்த அத்தோள்கள்தான் எவ்வளவு வலியனவா யிருக்கவேண்டும்!' என்று எண்ணியதும், 'அவற்றை வலிய தூண்களோடு ஒப்பிடலாமா?' என்று பார்த்து, அந்த உபமானம் சரியில்லையென்று 'மரகதப் பெருங்கல்' என்கிறாள், அந்த அழகு சுமந்த இரு புயங்களையும். பிறகு தனக்கு நோய் தந்த கண்களையே பார்த்துவிடுகிறாள் மறுபடியும். பார்த்துப் பார்த்து, 'கோதண்டமும் கையுமாயிருந்த இந்த அழகனுக்கும் இந்த மண்ணுலகத்திற்கும் என்ன சம்பந்தம் இருக்கமுடியும்?' என்று யோசித்து, 'வில்லோடும் இறங்கிவந்த மேகம்' என்கிறாள். 'வான மண்டலத்திலிருந்து நழுவி இந்திர வில்லோடு வந்துவிட்ட ஏதோ ஒரு அற்புதமான மேகம் தானோ?' என்று திகைக்கிறாள்.

'அந்த வில்தான் என்ன புண்ணியஞ் செய்திருக்கவேணும், அவன் தோளைச் சேர்ந்து விளங்குவதற்கு?' என்று பொறாமைப் படுகிறாள். 'எந்த மன்மதனுக்குத் தான் அந்த மோகன ரூபமுண்டு? அந்த வில்லும் கரும்பன்றே!' என்று ஐயமும் தெளிவுமாய்ப் பேசுகிறாள். 'அவன்தான் எவ்வளவு தைரியமாக,—எவ்வளவு பலாத்காரமாக—என் உள்ளத்தினுள்ளே பிரவேசிக்கத் துணிந்தான்! துணிந்து என் மன உறுதியையும் பெண்மையையும் உருக்கி உயிரையும் உண்டு போனான்!' என்று புலம்புகிறாள்:

நெருக்கிஉள் புகுந்(து),அரு நிறையும் பெண்மையும்
உருக்கி,என் உயிரோடும் உண்டு போனவன்
பொருப்(பு)உறழ் தோள்புணர் புண்ணி யத்தது,
கருப்புவில் அன்(று);அவன் காமன் அல்லனே!

[ அரு நிறை - அருமையான மனவுறுதி. பொருப்பு - மலை. உறழ் - ஒத்த. கருப்புவில் - கரும்புவில். ]

திடீரென்று, 'அந்த வீரன் உண்மையில் வீரனல்லன்; கள்ளன் தான்!' என்று குற்றஞ் சாட்டுகிறாள். 'தரைவழியே நடந்து போவது போல் பாசாங்குசெய்து, என் கண் வழியாக நுழைந்து போனான்! அவன் வந்து போனதும் என் பெண் - நலங்களைக் காணவில்லை; பெண்மையோடு பிறந்த நாணத்தையும் காணவில்லை: ஐயோ! என் மனத்திலுள்ள அறிவையும் காணவில்லையே! எங்கும் தேடிப் பார்த்தும் காணவில்லையே! ஆதலால் அவன்தான் களவாடிப் போயிருக்க வேணும்!' என்கிறாள்:

பெண்வழி நலனொடும், பிறந்த நாணொடும்,
எண்வழி உணர்வும்,நான் எங்கும் கண்கிலேன்!
மண்வழி நடந்(து)அடி வருந்தப் போனவன்,
கண்வழி நுழையும்ஓர் கள்வ னேகொலாம்?

[ பெண் வழி நலன் - பெண்களுக்கு வழிவழியாக வரும் நலன்கள். எண் - எண்ணம், ]

இத்தகைய விசித்திரக் கள்ளன் விஷயமாகச் சீதைக்கு வெறுப்பு மில்லை; கோபமுமில்லை. உண்மையாகவே அனுதாபம் பிறக்கிறது; இரக்க முண்டாகிறது. அதனால்தான் 'மண்வழி நடந்(து)அடி வருந்தப்போனவன்' என்று வருந்துகிறாள். 'பூமேல் நடவாமல் மண்மேல் நடந்தானே!' என்று வருத்தம்.

உண்மையில், மண்மேல் நடக்க விடாமல் அந்த அடிகளைத் தன் உள்ளமாகிய பூவினாலே தாங்கிக்கொண்டாளாம். எனவே, அந்த நடை இவள் உள்ளத்திலேயே கிடக்கிறதாம், எப்போதும் நீங்காமலே:

படர்ந்(து)ஒளி பரந்(து)உயிர் பருகும் ஆகமும்,
தடம்தரு தாமரைத் தாளு மேயல;
கடம்தரு மாமதக் களிநல் யானைபோல்
நடந்தது கிடந்ததென் உள்ளம் நண்ணியே!

[ ஆகம் - மார்பு. தடம் - தடாகம், கடம் - கன்னம். ]

'படர்ந்து ஒளி பரந்து காண்பவர் உயிரைப்பருகும் அந்த மார்பு மட்டுமல்ல, என் உள்ளத்தில் பதிந்திருப்பது: அன்றலர்ந்த தாமரை போன்ற திருவடிகளும் பதிந்துவிட்டன. அந்தக் கம்பீரமான நடையழகும் அப்படியே என் உள்ளத்தில் பொருந்திப் பதிந்து விட்டது!' என்கிருள். 'நடந்த(து) கிடந்த(து)என் உள்ளம் நண்ணியே!' — என்ன ஈடுபாடு! அந்த மார்பின் கம்பீரமான அழகுதான் எப்படிப பொருந்திப் பதிந்து கிடக்கிறது,'படர்ந்தொளி பரந்துயிர் பருகும் ஆகமும்' என்ற சொற்றெடரிலே!

அந்த மேனியழகு மறுபடியும் படிப்படியாக அவள் மனக்கண் முன் வருகிறது. முதலாவது, சிறந்த நீல ரத்தினம் போன்ற மயிர் முடியோடு கூடிய முகமண்டலம் தோன்றுகிறது. சந்திர பிம்பம் போன்ற அம்முகத்திலே தவழும் புன்சிரிப்பு இவள் உயிரை அப்படியே உண்டுவிட்டதாம். அவன் இவளை நோக்கும்போது, அந்தக் கண்களிலும் இந்தப் புன்சிரிப்பே அவ்வளவு வசிகரமாக ஒளி வீசிக் கொண்டிருந்ததாம்.

'இந்திர நீலம்ஒத்(து) இருண்ட குஞ்சியும்,
சந்திர வதனமும், தாழ்ந்த கைகளும்,
சுந்தர மணிவரைத் தோளு மேஅல:
முந்திஎன் உயிரைஅம் முறுவல் உண்டதே!'

[ வரை - மலை. ]

என்கிருள்.

'இந்திரநீலம் ஒத்த அந்தக் கேசம், சந்திரமண்டலம் போன்ற முகமண்டலம், 'ஆஜாநுபாகு' என்னும்படி நீண்டு தொங்கும் கைகள், நீலரத்தின மலை போன்ற தோள்கள்' என்று சொல்லும்போதே, 'இவை என் உயிரை உண்டவை!' என்றுதானே சொல்லப்போகிருளென்று எதிர்பார்க்கிறேம். ஆனல் இவளோ,

இவையே அல்ல என் உயிரை உண்டவை!' என்கிருள். ஏன்? இவை ஒவ்வொன்றுமே உயிரை உண்ணத் தக்கவைதான்: எனினும் அந்த இளஞ்சிரிப்பு என் உயிரைக் கவர்ந்து உண்பதில் இவை யெல்லாவற்றிற்கும் முந்தி விட்டது! 'அவை உண்ண வேறு உயிரில்லேயே; முறுவல் உண்டு எஞ்சிய உயிர்ப்பகுதியு மில்லேயே!' —என்பது தாத்பரியம். பாட்டைப் பாடிப் பாடிப் பாருங்கள்; இன்னும் பாடிப் பாருங்கள்! இந்த ஓசைப் பொலிவிலே சீதையின் 'மழலேமென்மொழி'யே நமது காதில் விழுவதுபோலிருக்கிற தல்லவா?

இத்தகைய காதலனே மீண்டும் (மனக்கண்ணுல் மட்டுமல்ல) பார்க்கவேண்டுமென்ற இவள் ஆசைதான் சாமானியமா யிருக்க முடியுமா? 'பெண்மைக் குணங்கள், மனவுறுதி முதலிய யந்திரங்க ளெல்லாம் எப்பக்கமும் சுழன்று எவரும் அணுகாதபடி காவல் செய்துகொண்டிருக்கும் என் கன்னி மாமதிலே (கன்னித் தன்மை யாகிய கோட்டையை) எறிந்து வென்ற அந்த அரசிளங் குமரனே நான் இன்னும் ஒரு முறையாவது கண்ணுரப் பார்க்கவேணும்; பார்த்து அறிந்த பின்பு உயிர்போவதானுலும் சந்தோஷமே! அப்படிப்பட்ட பாக்கியமும் எனக்குக் கிடைக்குமோ?' என்று ஏங்குகிருள்:

பிறந்(து)உடை நலம்நிறை பிணித்த எந்திரம்,
கறங்குபு திரியும்என் கன்னி மாமதில்
எறிந்தஅக் குமரனே, இன்னும் கண்ணிற்கண்(டு)
அறிந்(து),உயிர் இழக்கவும் ஆகுமே கொலாம்?

[பிறந்து உடை - என்னுடன் பிறந்து என் உடைமையாயுள்ள. பிணித்த - கட்டிய. கறங்குபு - சுழன்று.]

என்று பலவிதமாக எண்ணி யெண்ணிச் சீதை மன முருகிக் கொண்டிருக்கும்போது மாலேப்பொழுது வருகிறது.

தென்றலும் செவ்வானமும் இருளும் கொண்டு தோன்றிய அந்தி மாலையை நோக்கி, இதுதானோ 'யமனுடைய சொரூபம்?' என்று நடுங்குகிறாள்.

விரிமலர்த் தென்றலாம் வீசு பாசமும்
எரிநிறச் செக்கரும் இருளும் காட்டலால்,
அரியவட்(கு) அனல்தரும் அந்தி மாலையாம்
கருநிறச் செம்மயிர்க் காலன் தோன்றினன்.

[ மலர்த் தென்றல் - மலர்களில் படிந்துவரும் தென்றல். செக்கர் - செவ்வானம். அரியவட்கு - அருமையானவளான சீதைக்கு. ]

இருளாகிய கருநிறத்தோடும் செவ்வானமாகிய சிவந்த தலைமயிரோடும் தோன்றிய அந்த மாலைக் காலமாகிய காலன், தென்றல் என்ற பாசத்தை இவள்மீது வீசுகிறானாம். இந்த நிலையில்,

கயங்கள் என்னும் கனல் தோய்ந்து கடிநாள் மலரின் விடம்பூசி
இயங்கு தென்றல், மன்மதவேள் எய்த புண்ணி னிடைநுழைய,
உயங்கும் உணர்வும் நன்னலமும் உருகிச் சோர்வாள் உயிருண்ண
வயங்கும் மாலை வானோக்கி, 'இதுவோ கூற்றின் வடி'வென்றாள்.

[ கயங்கள் - குளங்கள். கடி - வாசனை. நாள்மலர் - அன்றலர்ந்த பூக்கள். உயங்கும் - வருந்துகிற. வயங்கும் - விளங்கும். வானோக்கி - வானத்தை நோக்கி. ]

அந்தி மயங்குகிறது. சீதையின் மயக்கமும் அதிகமாகிறது.

ஆலம் உலகிற் பரந்ததுவோ? ஆழி கிளர்ந்த தோ? அவர்தம்
நீல நிறத்தை எல்லோரும் நினைக்க அதுவாய் நிரம்பியதோ?
காலன் நிறத்தை அஞ்சனத்திற் கலந்து குழைத்துக் காயத்தின்
மேலும் நிலத்தும் மெழுகியதோ? விளங்கும் இருளாய் விளைந்ததுவே!

[ ஆலம் - ஆலகால விஷம். ஆழி - சமுத்திரம். காயம் - ஆகாயம். ]

# கருநெருப்பும் வெண்ணெருப்பும்

'கருங்கடல்தான் இப்படிப் பொங்கி எங்கும் பெருகிவிட்டதோ? அல்லது ஆலகால விஷமே மறுபடியும் உலகமெங்கும் பரவி வந்து விட்டதோ?' என்று அந்த இருளை நோக்கியவள், 'கண்ணுக்கிடும் மையோடு யமனுடைய கருநிறத்தையே கலந்து குழைத்து ஆகாயத்தின் மேலும் நிலத்தின் மேலும் மெழுகிவிட்டார்களோ?' என்று கேட்கிறாள். 'இருளாய் விளைந்ததுவே' என்பதால், ஆலகால விஷம் முதலியவற்றை விதையாகத்தான் கருதவேண்டும். அவை முளைத்து வளர்ந்து இந்த இருளாக விளைந்து விட்டனவோ?— என்று தோன்றுகிறதாம். இந்தப் பாட்டில் வரும் நாலு ஓகாரங்களும் கடைசி ஏகாரமும் அந்த இருளின் பீதியை மாயமாகக்கொண்டு வந்து விடுகின்றன நம் மனக்கண் முன்பும்!

திடீரென்று இவ்வளவு பயத்திற்கிடையே வேறொரு யோசனையும் தோன்றுகிறது. அந்த அஞ்சன வண்ணமே இந்த அஞ்சன வண்ணமாகவும் விளைந்துவிட்டதோ? 'அவர்தம் நீல நிறத்தை எல்லோரும் நினைக்க அதுவாய் நிரம்பியதோ?' என்றும் தன்னைத் தானே கேட்டுக்கொள்கிறாள். தன்னைப்போல் எல்லாரும் அந்த நீல மேனி மீது பைத்தியம் கொண்டு அதையே நினைத்துக்கொண்டிருப்பதாகவும், அப்படி அவர்கள் எல்லாரும் சேர்ந்து நினைக்கும் நினைப்பின் சக்தியால் அந்த நிறம் எங்கும் வியாபித்து விட்டதாகவும் நம்புகிறாள்.

காதலர் கண்களில் உலகத்திலுள்ள பொருள்களெல்லாம் தங்கள் காதலுக்கு உரியவர்களின் நிறமும் அழகும் பெற்றுவிடுகின்றன. இப்போது 'அந்த நீலமேனியின் சோபை எப்படியோ அந்தியிருளாக விளைந்து என்னை ஹிம்ஸிக்க வருகிறது!' என்று புலம்புகிறாள் காதலி.

அதே சமயத்தில் அந்த மோன இருளைக் கடைந்துகொண்டு வருகிறது ஒரு குரல். அது வேறொன்றுமில்லை: பக்கத்திலிருந்த சோலையில் ஓர் அன்றிற் பறவை கத்துவதுதான். அந்தக்

குரலும், வாழ்க்கைத் துணையைப்பிரிந்து வருந்திக் கூவும் குரல் தானும். எனவே, அதுவும் இவள் துன்பத்தைக் கிளறிவிடுகிறது. உடனே சீதை அந்தத் திசையை நோக்கிப் புலம்புகிருள் :

> வெளிநின் றவரோ போய்மறைந்தார்; விலக்க ஒருவர் தமைக்காணேன் !
> எளியள் பெண்என்(று) இரங்காதே, எல்லி யாமத்(து) இருளூடே
> ஒளிஅம்(பு) எய்யும் மன்மதனுர் உனக்(கு)இம் மாயம் உரைத்தாரோ ?
> அளியென் செய்த தீவினையே ! அன்றி லாகி வந்தாயோ ?

[ விலக்க - தடுக்க. எல்லியாமம் - இராத்திரிகாலம். ஒளி அம்பு எய்யும்- ஒளிந்து அம்புபோடும். அளியென் - எளியேன். ]

' இரக்கமில்லாமல் ஒளித்திருந்து அம்பு போடும் யோக்கியரான மன்மதனுர் உபதேசம் பெற்றுத்தான், அன்றிலே! நீயும் இருளி லிருந்து தீங்கிழைக்கும் வித்தையைக் கற்றுக்கொண்டுவந்து என்னை ஹிம்ஸிக்கிருயோ ?' என்று வெறுத்துப் பேசுகிறவள், தான் செய்த தீவினையே அன்றிலாகி வந்துவிட்டதோ? — என்று கதறுகி கிருள்.

விளக்கேற்றும் நேரம். தோழிமார் வழக்கம்போல் விளக்கு ஏற்றவில்லையாம், நெய்விளக்கு அவளுக்கு வெப்பஞ் செய்யுமே யென்று.

> ஆண்(டு)அங்(கு)அனையாள் இனையநினைந்(து)அழுங்கும் எல்வை, அகல்வானம்
> தீண்ட நிமிர்ந்த பெருங்கோயிற் சீத மணியின் வேதிகைவாய்,
> நீண்ட சோதி நெய்விளக்கம் வெய்ய என்(று)அங்(கு) அவைநீக்கித்
> தூண்டல் செய்யா மணிவிளக்கின் சுடரால் இரவைப் பகல்செய்தார்.

[ ஆண்டு - அவ்விடத்தில். அனையாள் - அந்தச் சீதாபிராட்டி. அழுங்கும் எல்வை - வருந்தும்பொழுது. கோயில் - (இங்கே) கன்னிமாடம். சீதமணி - குளிர்ந்த சந்திரகாந்தக் கல். வேதிகை - மேடை. வெய்ய - வெப்ப முடையன. செய்யா - செய்யவேண்டாத. ]

கன்னிமாடத்தில் தோழிப்பெண்கள் இரத்தின தீபங்களால் இரவைப் பகலாக்க, சந்திரன் தங்கமயமான ஓர் அமிர்த கலசம்போலச் சமுத்திரத்திலே உதயமாகிறது. விரைவில் அது கீழ்த்திசையின் மீது மங்களமாக வைத்த பூர்ண வெள்ளிக் கும்பம்போலக் காண் கிறது:

புள்ளிக் குறியிட் டெனப்பன்மீன் பூத்த வானம் பொதிகங்குல்
நள்ளிற் சிறந்த இருட்பிழம்பை நக்கி நிமிரும் நிலாக்கற்றை,
கிள்ளைக் கிளவிக்(கு) என்னுங்கொல்? கீழ்பால் - திசையின் மிசைவைத்த
வெள்ளிக் கும்பத்(து) இளங்கமுகின் பாளை போன்று விரிந்துளதால்.

[ புள்ளிக்குறி யிட்டென - புள்ளிகளைக் குறிகளாக இட்டாற்போல. பன்மீன் - பல நட்சத்திரங்கள். கங்குல் - இராத்திரி. நள் - நடு. பிழம்பு - கூட்டம். கற்றை - தொகுதி. கிள்ளைக் கிளவி - கிளிமொழி போலும் மொழிகளையுடைய சீதை. மிசை - மேலிடத்தில். ]

இருளையும் நட்சத்திரங்களையும் நிலாவையும் எத்தனையோ தரம் பார்த்திருக்கிறோம். எனினும் அந்தப் 'பன்மீன் பூத்த வான'த்தையும் 'வெள்ளிக் கும்ப'த்தையும் 'இருட்பிழம்பை நக்கி நிமிரும் நிலாக்கற்றை'யையும் கவிஞன் கண்டு காட்டும் போதுதான், அந்த இயற்கையழகை நாமும் நன்றாக உணர்ந்து ஆனந்திக்கிறோம்.

இத்தகைய காட்சியைச் சீதையும் எத்தனையோ தரம் கண்டு ஆனந்தித்திருக்கிறாள், கன்னியுள்ளத்தோடும் கவியுள்ளத்தோடும். ஆனால் இப்போது சந்திரன் ஆனந்தத்தையாவது ஆறுதலையாவது ஒரு சிறிதும் தரவில்லை. 'இது சீதைக்கு எப்படியாகுமோ? யாதாய் முடியுமோ?' என்று கவலைப் படுகிறான் கவிஞன்.

இனி, மாலைப்பொழுதாகிய கையை விரித்து நீட்டி உலகை வளைத்துக் கொண்ட இருள் முழுவதையும் உண்ண வந்த நிலாத் தொகுதி எப்படிப் பரவுகிறது, பாருங்கள்:

வண்ண மாலைக் கைபரப்பி, உலகை வளைந்த இருளெல்லாம்
உண்ண என்ணித் தண்மதியத்(து) உதயத் தெழுந்த நிலாக்கற்றை,
விண்ணும் மண்ணும் திசைஅனைத்தும் விழுங்கிக் கொண்ட விரிநன்னீர்ப்
பண்ணை வெண்ணெய்ச் சடையன்தன் புகழ்போல் எங்கும் பரந்துளதால்.

[ வண்ணம் - நிறம். தண் மதியம் - குளிர்ச்சியுடைய சந்திரன். பண்ணை வெண்ணெய் - வயல் சூழ்ந்த திருவெண்ணெய் நல்லூர். ]

சடையப்பனைத்தான் எப்படியெல்லாம் கௌரவித்துப் பார்க்கிறான், ஆசைதீர. அவனையும் இராமாயண புருஷர்களின் கோஷ்டியிலேயே சேர்த்துவிடப் பார்க்கிறானா? அல்லது அந்தத் தோழனைப் போல் அவர்களையும் அவ்வளவு பிரத்தியட்சமாய்ப் பார்க்கிறானா?

சந்திரிகையும் இருளைப்போலவே வாட்டுகிறது சீதாபிராட்டியை. இருள் கருநெருப்பா யிருந்ததென்றால், சந்திரன் வெண்ணெருப்பாய் எரிகிறதாம்.

'நீங்கா மாயை அவர்தமக்கு நிறமே தோற்றுப் புறமேபோய்,
ஏங்காக் கிடக்கும் எறிகடற்கும், எனக்கும் கொடியை ஆனாயே!
ஓங்கா நின்ற இருளாய்வந்(து) உலகை விழுங்கி மென்மேலும்
வீங்கா நின்ற கருநெருப்பி னிடையே எழுந்த வெண்ணெருப்பே!'

[ ஏங்கா - ஏங்கி. எறிகடல் - அலைகளை எறியும் கடல். ]

என்று எவ்வளவு ஆத்திரமாக அந்தக் கொடுமையையும் கொதிப்பையும் வெளியிடுகிறாள்!

கடலும் தன்னைப்போல் அவருக்கு நிறம் தோற்று ஏங்கிக் கிடக்கிறதாம். திடீரென்று கண்ணெதிரே தோன்றித் திடீரென்று மறைந்து நின்று ஹிம்ஸித்துக் கொண்டிருப்பதால், 'நீங்கா மாயை அவர்' என்று குறிப்பிடுகிறாள் அந்த மாயக் காதலரை. இந்த நிலையில் தன் விரகத்தைப் பொங்கிப் பெருகச்செய்து தன்னை உருகச் செய்வது போல், சந்திரன் ஸமதுக்கியான கடலுக்கும் கொடுமை செய்கிறதாம்,

அந்தக் கடல் நீரையும் பொங்கிப் பெருகச்செய்து. இத்தகைய சந்திரனைக் 'கருநெருப்பி னிடையே எழுந்த வெண்ணெருப்பே!' என்று அழைத்து நிந்திப்பது எவ்வளவு நயமா யிருக்கிறது!

கருநெருப்போ சிறிது பொழுதிருந்து நீங்கிவிட்டது. ஆனல் இந்த வெண்ணெருப்போ நெடுநேரமாக நீங்காது தகித்துக்கொண் டிருக்கிறது. இந்த நிலையில் தனக்குப் படுக்கையாயிருந்து தன் தேக வெம்மையால் தாமரை மலர்கள் பட்ட பாடெல்லாம் சீதையும் பட்டாளாம், அந்த நிலவிலே:

நீக்க மின்றி நிமிர்ந்த நிலாக்கதிர்
தாக்க, வெந்து தளர்ந்து சரிந்தனள்;
சேக்கை யாகி மலர்ந்தசெந் தாமரைப்
பூக்கள் பட்டதப் பூவையும் பட்டனள்!

[ சேக்கை - படுக்கை. பூவை - பெண்ணகிய சீதை. ]

தோழிகள் எவ்வளவோ சைத்தியோபசாரஞ் செய்துகொண்டு தானிருக்கிறார்கள்: விசிறி கொண்டு வீசுகிறார்கள்; கலவைச் சந்தனத்தை வாரி வாரிப் பூசுகிறார்கள். ஆனல்,

வாச மென்கல வைக்களி வாரி,மேல்
பூசப் பூசப் புலர்ந்து புழுங்கினள்;
வீச வீச வெதும்பினள் மென்முலை;
ஆசை நோய்க்கு மருந்துமுண் டாங்கொலோ?

[ கலவைக் களி - கலவைச் சந்தனக்குழம்பு. ]

மறுபடியும் காதலனைக் காணலாம் என்கிற ஆசையினல்தான், காதலி அந்த ஆசை - நோயையும் தாங்கி உயிரையும் தாங்கிக் கொண்டிருக்கிறாள், — 'நோய்தான் மருந்துமாகிறதோ?' என்று எண்ணும்படி.

## 14. இரவும் கழிந்தது

விசுவாமித்திர ராம லட்சுமணர்கள் அரண்மனைக்குள்ளே போய் ஜனக மன்னனைக் கண்டார்கள். அவன் அவர்களை வரவேற்று உபசரித்து ஓர் அழகிய மாளிகையில் அமரச் செய்தான். அங்கே அகலிகைபுத்திரராகிய சதானந்த முனிவர் வந்தார். அவர் தம்மை வணங்கிய இராமனுக்கு ஆசி கூறி, விசுவாமித்திரருக்கு உபசார வார்த்தை கூறினர். அப்போது விசுவாமித்திரர் சதானந்தரிடம் இராமன் பெருமையைத் தெரிவிக்க விரும்பினர் :

'வடித்த மாதவ! கேட்டி:இவ் வள்ளல்தான்
இடித்த வெங்குரல் - தாடகை யாக்கையும்,
அடுத்(து)என் வேள்வியும், நின்அன்னை சாபமும்
முடித்(து),என் நெஞ்சத்(து) இடர்முடித் தா'னென்றான்.

[ வடித்த - திருத்தமாய்ச்செய்த. கேட்டி - கேட்பாய். வெங்குரல் - பயங்கரமான குரல். யாக்கை - உடம்பு. ]

இந்த ஒரு சிறு பாட்டில், இராமன் இதுவரை செய்த துஷ்ட நிக்கிரக சிஷ்டபரிபாலனங்களை யெல்லாம் எவ்வளவு சாதுரியமாக வடித்தெடுத்துத் தருகிறார் விசுவாமித்திரர்! அவருக்கு மூன்று துயரங்கள் இருந்தனவாம். ஒன்று, தாடகை உயிர்களை அநியாயமாக வதைத்து வருகிறாளே யென்பது: அதாவது, உலகத்தைப் பற்றிய கவலை. அடுத்த கவலை, தன் வேள்வியைப் பற்றியது. அதற்குச் சமமான வேறொரு கவலையுமிருந்ததாம். 'உம்முடைய தாயாரின் துயரக் கதைதான் அது!' என்று சதானந்தரை நோக்கிச் சொல்லுகிறவர், 'இவன் தான் அந்தத் துயரங்களை யெல்லாம் முடித்துத் தந்தவள்ளல்!' என்று இராமனை அறிமுகப்படுத்தி வைக்கிறார்.

## இரவும் கழிந்தது

'முடித்து' என்று எதுகையில் அமைந்திருக்கும் அந்தச் சிறு வார்த்தை, இராமனது துஷ்ட நிக்கிரகத்திற்கும் சிஷ்ட பரிபாலனத் திற்கும் ஒருங்கே பொருந்தி யமைவதைப் பாருங்கள். ஸாராம்சத்தில் பகவானுடைய அறக்கருணையும் மறக்கருணையும் ஒன்றுதானே.

'இடித்த வெங்குரல் - தாடகை' என்றதும் அந்த ஆர்ப்பாடங் களும் அட்டகாசங்களும் அப்படியே ஞாபகத்திற்கு வருகின்றன அல்லவா? அந்த அரக்கி விஷயத்திலும் உடம்பைத்தான் முடித் தானும், அந்தச் சிறையிலிருந்து விடுதலை பெற்று அந்த உயிரும் உய்ந்து போக வேண்டுமென்ற கருணையோடு.

இப்படியெல்லாம் உய்த்துணர வைத்துப் பேசிய விசுவா மித்திரரை நோக்கிச் சதானந்தர், 'உம்முடைய அருளைப் பெற்ற இந்த வெற்றிவீரனுக்குச் செயற்கரிய செயலுமுண்டோ?' என்று சொல்லிவிட்டு, அந்த வள்ளலின் அழகிய முகம் நோக்கி விசுவா மித்திர மகரிஷியின் பூர்வ சரித்திரத்தையும் அகோர தவத்தையும் கூறினர். பிறகு சதானந்தர் இராம லட்சுமணரை வாழ்த்திவிட்டுத் தம் இருப்பிடம் சென்றார். இதற்குள் மாலையும் மாலையிருளும் நீங்கி, நல்ல நிலவு வந்துவிட்டது.

அப்பால் விசுவாமித்திரரும் இலட்சுமணனும் அந்த மாளிகையில் தாங்கள் படுக்குமிடங்களுக்குப் போய்விட்டார்கள். இராமன் மாத்திரம் படுக்கச் செல்லாமல் தன்னந்தனியனாக விழித்துக்கொண் டிருந்தான். எனினும் தூக்கத் துணையும் இல்லாமலிருந்த அவன் தனித்திருக்கவில்லை என்கிறான் கவிஞன். மூவர் இருந்த இடத்தில் இப்போது ஐவர் :

முனியும் தம்பியும் போய்,முறை யால்தமக்(கு)  
இனிய பள்ளிகள் எய்திய பின், இருட்  
கனியும் போல்பவன், கங்குலும் திங்களும்  
தனியும் தானும்அத் தையலும் ஆயினன்!

[கங்குல் - இராத்திரி - திங்கள் - சந்திரன். தையல் - பெண்.]

விசுவாமித்திரர் முதலானவர்களோடிருக்கும்போது ஒருவாறு அடக்கி வைத்திருந்த காதல், இப்போது கட்டுக்கடங்காமல் பொங்கி விட்டது. அந்த நிலையை வெளியிடும் 'இருட்—கனியும் போல்பவன் கங்குலும் திங்களும்—தனியும் தானும்அத் தையலும் ஆயினன்!' என்ற வாக்கைக் கவிதையின் மகாவாக்கியங்களில் ஒன்றென்று சொல்லலாம்.

இராமனைச் சீதை 'வில்லொடும் இழிந்ததோர் மேகம்' என்று நினைத்தாளல்லவா? இராமனும் சீதையை 'ஆகாயத்தின் உச்சியி லிருந்து நழுவிய மின்னற்கொடி' என்று எண்ணுகிறான்.

'விண்ணின் நீங்கிய மின்னுரு, இம்முறை
பெண்ணின் நன்னலம் பெற்றதுண் டேகொலாம்?
எண்ணின் "ஈ(து), அல(து)" என்(று)அறி யேன்; இரு
கண்ணி னுள்ளும் கருத்துள்ளும் காண்பனால்'

[ இம்முறை - இவ்விதமாக. நன்னலம் - அழகு. ஈது - இத்தன்மையது. அலது - அல்லாதது. ]

என்கிறான்.

'மின்னலுக்குக் கண்ணுண்டா? முகமுண்டா? மேலும் மின்னல் பளிச்சென்று மறைந்துவிடுமே. எந்த மின்னலுக்குத்தான் அந்த ஒளியும் அழகு முண்டு? ஆ, ஆ! மின்னுருவோ, பெண்ணுரு வோ?—என்று தெரியவில்லை. இவ்வுருவை இப்போதும் பார்க்கிறேன். ஆம்; கருத்திலும் காண்கிறேன்; கண்ணினுள்ளும் காண்கிறேன்!' என்று தனக்குத் தானே ஆச்சரியமாகப் பேசிக் கொள்கிறான்.

அந்தக் கண்கள்தான் எப்படி மிளிர்கின்றன! 'கடல்போல் மிளிர்கின்றன: பாற்கடல்போல் வெள்ளமிடுகின்றன!' என்றெல்லாம் எண்ணமிடுகிறான், அந்தக் குளிர்ச்சியிலும் இனிமையிலும் கருமை யிலும் பரப்பிலும் ஈடுபட்டு. இப்போது அந்தக் கண்கள் எவ்வளவு

தெளிவாகத் தெரிகின்றன! அந்தக் கண்ணினுள்ளே தோன்றும் கருமணியான 'கிருஷ்ணனை' யும் உற்று நோக்குவதுபோல் நோக்கி,

'வள்ளற் சேக்கைக் கரியவன் வைகுறும்
வெள்ளப் பாற்கடல் போல்மிளிர் கண்ணினுள்,
அள்ளற் பூமகள் ஆகுங்கொ லோ,என(து)
உள்ளத் தாமரை யுள்ளுறை கின்றதே?'

[ வள்ளல் - வள்ளலாகிய திருமால். சேக்கை - படுக்கை- ஸர்ப்பசயனம். கரியவன் - கருநிறமுள்ள திருமால். வைகுறும் - பள்ளிகொண்டு உறையும். அள்ளற் பூ - சேற்றில் உண்டாகிற தாமரை. பூமகள் - இலட்சுமி. ]

என்கிறான்.

தான்கண்ட அந்த உருவம் மகாலட்சுமியாகவே இருக்கலாமோ? —என்றும் ஐயமுறுகிறான். 'திருமகள் தாமரையில் வசிக்கிறாளென்றால், இவளும் என் உள்ளத்தாமரையில் வசிக்கிறாளே!' என்கிறான்.

'ஆனால் இந்த இலட்சுமி அருளில்லாத இலட்சுமிதான்!' என்று சித்தாந்தம் செய்கிறான் காதலன். எனினும் — என்ன ஆச்சரியம்! — தான் பார்க்கும் பொருள்களுக்கெல்லாம் அந்தக் காதலி தன் பொன்மயமான 'அழகுமுலாம்' பூசி விட்டாளே!— என்று பிரமிக்கிறான்:

அருளி லாள்எனி னும்,மனத் தாசையால்
வெருளும் நோய்விடக் கண்ணின் விழுங்கலால்,
தெருளி லாஉல கிற்சென்று நின்றுவாழ்
பொருளெ லாம்அவள் பொன்னுரு ஆனவே!

[ வெருளும் - அஞ்சச் செய்யும். தெருளிலா - தெளிவில்லாத. சென்று வாழ்பொருள் - சரம். நின்று வாழ்பொருள் - அசரம். ]

'நான் ஆசையால் பயங்கரமான விரகநோய் தீரும்படி மருந்தாக என் கண்களால் விழுங்கி விட்டேன் அந்த அருளில்லாத உருவத்தை!'

என்று பச்சாதாபப்படுகிறான். 'அதனால்தான் என் கண்களுக்குச் சராசரங்களெல்லாம் அப்படித்தெரிகின்றன—ஆம், அந்தப் பொன்னுருவாய்!' — என்று நினைக்கிறான். 'உலகம் ஏன் இப்படி மயங்கிவிட்டது?' என்றும் பிரமிக்கிறான், தன் மயக்கத்தை உலகின்மேல் வைத்து. இவன்தான் அந்த உருவைக் கண்ணால் விழுங்கினனா? அல்லது அந்த உருவம்தான் இவனையும் உலகத்தையும் அப்படி விழுங்கிவிட்டதா?— என்ற மயக்கமும் தெளிந்த பாடில்லை.

'பொருளெ லாம்அவள் பொன்னுரு ஆனவே!' என்றுகாதலின் இரசவாதத்தைக்காட்டும் இந்த வாக்கியம் பொன்னேபோல் போற்றத் தக்கது, கவிதையுலகிலே. இத்தகைய காதலன் காட்சியோடு, 'அவர் தம் — நீல நிறத்தை எல்லோரும் நினைக்க அதுவாய் நிரம்பியதோ?' என்ற காதலியின் காட்சியையும் ஒப்பிட்டுப் பாருங்கள்.

பொருள்களையெல்லாம் பொன்னிறமாக்கும் காதல் வீசுகிறது அகவுலகிலே: புறவுலகிலோ பொருள்களை யெல்லாம் வெண்ணிறமாக்கும் பால்-நிலா வீசுகிறது. ஆனால் சீதையின் பொன்னிறம் போல் அந்த வெண்ணிறமும் இராமனை ஹிம்ஸிக்கிறது.

'கொள்ளை கொள்ளக் கொதித்தெழும் பாற்கடற் -
பள்ள வெள்ளம் எனப்பட ரும்நிலா,
உள்ள உள்ள உயிரைத் துருவிட,
வெள்ளை வண்ண விடமும்உண் டாங்கொலோ?'

[உள்ள உள்ள - நினைக்க நினைக்க. வண்ணம் - நிறம்.]

என்று தன்னைத்தானே கேட்டுக்கொள்கிறான்.

வெண்ணிலாவை வெண்ணிலாவாகவே நினைக்க முடியவில்லை. 'வெண்ணிறமுள்ள விஷந்தானோ, இப்போது இந்தப் பாற்கடலிலிருந்து புறப்படுகிறது?' என்று சந்தேகிக்கிறான், 'கொள்ளை கொள்ளக் கொதித்தெழும் பாற்கடல்—பள்ள வெள்ளம் எனப்படரும்நிலா'—என்ன அற்புதமான நிலா வருணனை! காதல் - வெள்ளத்திலே பொங்கிவரும் நினைவு - வெள்ளத்திற்கு, எவ்வளவு பொருத்தமாயிருக்கிறது இந்த நிலவு-வெள்ளம்!

## இரவும் கழிந்தது

இந்த நிலவு, காதலியின் புன்சிரிப்பாகிய சந்திர காந்தியை ஞாபகப்படுத்துகிறது. 'முந்திஎன் உயிரைஅம் முறுவல் உண்டதே!' என்று சீதையும் இராமனுடைய புன்சிரிப்பில் ஈடுபட்டாளல்லவா? இராமனும் அவள் புன்சிரிப்பில் ஈடுபட்டு, 'அந்த முகசந்திரனை மீண்டும் தரிசிக்கக் கூடிய காலமும் உண்டோ?' என்று பெருமூச்சு விடுகிறான்.

ஒளித்து நின்று சீதைமீது அம்பு எய்த மன்மதன் விஜய கோதண்டபாணியான இராமன்மீதும் துணிந்து அம்பு தொடுத்து விட்டானா? போர் தொடுத்தது மட்டுமா? வெற்றியும் அடைந்து விட்டானாம். அந்த வெற்றிக்குத் தோற்றவனே சாட்சி சொல்லு கிறான்:

கன்ன லின்கருப் புச்சிலை யான்,விரை
பொன்னை முன்னிய பூங்கணை மாரியால்,
என்னை எய்து தொலைக்குமென் றால்,இனி
வன்மை யென்னுமி(து) ஆரிடை வைகுமோ?

[கன்னலின் கருப்புச்சிலை - கன்னல் எனப்படுகிற கரும்பு வில். விரை - விரைந்து. பொன் - (இங்கே) காதலி. முன்னிய - முன்னிட்டு. பூங்கணை - புஷ்ப பாணம்.]

வலிய உடம்பும் வலிய வில்லம்புகளுமுடைய அரக்கர்களுக்கும் வலிதொலையாத இராமன், 'இப்போது அனங்கனாகிய மன்மதனுக்கும் அவனுடைய மெல்லிய கருப்புவில்லுக்கும் மலரம்புகளுக்கும் வலிமை யிழக்கும்படி நேர்ந்ததே!' என்று இரங்குகிறான். அதனால்தானே நிலவும் விஷமாகிறது; அந்தப் பொன்னுருவும் யமனாகிறது! உறக்க மும் பிடிக்கவில்லை; இரவும் விடிவதாயில்லை.

இந்நிலையில் இராமன் உள்ளத்தில் ஓர் ஐயமும் தோன்றியது. கன்னிமாடத்தில் தான் கண்ட பெண்மணி கலியாணமாகாத கன்னியோ; அல்லளோ? 'அப்படி யில்லையென்றால் இவ்வளவு

காதலும் என்ன ஆகும்? காதலித்ததுதான் சரியாகுமா ?' என்ற சிந்தையில் ஆழ்ந்தான் ஒரு நிமிஷம். அடுத்த நிமிஷமே தைரியமும் தன்னம்பிக்கையும் உண்டாகிவிட்டன.

'ஏகும் நல்வழி; அல்வழி என்மனம்
ஆகுமோ? அதற்(கு) ஆகிய காரணம்,
பாகு போல்மொழிப் பைந்தொடி கன்னியே
ஆகும் : வே(று)இதற்(கு) ஐயுற வில்லையே!'

[ அல்வழி - (நல்வழி) அல்லாத (தீய) வழி. பைந்தொடி - பசுமையான (பொன்) வளையல் (அணிந்த சீதை.) ஐயுறவு - சந்தேகம். ]

என்று தீர்மானித்துக் கொண்டான்.

'என் மனம் நல்வழியிலேயே செல்லும்படி பண்பட்டிருக்கிறது. எனவே, அவள் கன்னிகையாகத்தான் இருக்கவேணும்!' என்று துணிந்து சொல்லும் மனச்சாட்சியைப் பாருங்கள். இயற்கையாகவே சிறந்த மனப்பண்பு வாய்ந்த இராமன், வசிஷ்டரது குருகுலத்திலே தக்க பயிற்சி பெற்று உள்ளத்தை விசேஷமாகப் பண்படுத்திக் கொண்டானென்பது குறிப்பு.

சந்திராஸ்தமனமாயிற்று : இரவும் கழிந்தது :

கழிந்த கங்குல் அரசன் கதிர்க்குடை
விழுந்த தென்னவும், மேற்றிசை யாள்சுடர்க்
கொழுந்து சேர்நுதல்- கோதறு சுட்டிபோய்
அழிந்த தென்னவும், ஆழ்ந்தது திங்களே.

[ கங்குல் - இராத்திரி. கதிர் - ஒளி. மேற்றிசையாள் - மேற்குத் திசை என்ற பெண். நுதல் - நெற்றி. சுட்டி - ஒருவகை நெற்றியணி. திங்கள் - சந்திரன். ]

வீசு கின்ற நிலாச்சுடர் வீந்ததால்;
ஈச னும்மதி ஏகலும் சோகத்தால்,

பூசு வெண்கல வைப்புனை சாந்தினை
ஆசை மாதர் அழித்தன ரென்னவே!

[ வீந்தது - அழிந்தது. ஈசன் - (இங்கே) நாயகன். மதி - சந்திரன். கலவைப் புனை சாந்து - அழகிய கலவைச் சந்தனம். ஆசை மாதர் - திசைகளாகிய மாதர்கள். ]

இராத்திரி யென்ற அரசனது ஆட்சி கழிந்துவிட்டதல்லவா? அவனுடைய வெண்கொற்றக் குடை விழுந்ததுபோல விழுந்து விடுகிறதாம் சந்திரன். அது அப்படி மேற்கே தாழ்ந்து விழுந்தது, மேற்குத் திக்கு என்ற பெண் நெற்றியில் அணிந்திருந்த வட்ட வடிவமான முத்துச் சுட்டி அற்று விழுந்தாற்போலவும் தோன்றுகிறதாம். சந்திரனோடு சந்திரிகையும் மறைந்து விடுகிறது, எப்படி யிருக்கிறது? தங்கள் கொழுநனாகிய சந்திரன் பிரிந்து போனதும், அவனுடைய ஆசைக்குரிய திக்குக்கள் என்ற நாயகிகள் பிரிவுத்துயரத்தைப் பொறுக்க முடியாமல், தங்கள் மேலே பூசியிருந்த வெண்ணிறமுள்ள அழகிய கலவைச் சந்தனத்தை அழித்து விடுகிறார்கள்! — என்று தோன்றுகிறதாம்.

பொழுது புலர்ந்தது; சூரியோதயமாயிற்று.

ததையுமலர்த் தார்அண்ணல் இவ்வண்ணம்
மயலுழந்து தளரும் வேலை,
சிதையுமனத்(து) இடருடைய செங்கமலம்
முகமலரச் செய்ய வெய்யோன்,
புதைஇருளின் எழுகின்ற புகர்முகயா
னையின்உரிவைப் போர்வை போர்த்த
உதயகிரி யெனும்கடவுள் நுதல்கிழித்த
விழியேபோல் உதயஞ் செய்தான்.

[ததையும் - நெருங்கும். தார் - மாலை. மயல் - காதல் - மயக்கம். உழுந்து - வருந்தி. செங்கமலம் - செந்தாமரை. செய்ய - செந்நிறமுள்ள.

வெய்யோன் - சூரியன். புதை - ஆழ்ந்த. புகர் - செம்புள்ளி. உரிவை - தோல். கடவுள் - (இங்கே) சிவபெருமான். நுதல் - நெற்றி. ]

கிழக்கே சூரியன் உதயமாகும் மலையாகிய உதயகிரி இருளில் மறைந்திருக்கும்போது, யானையின் தோலைப் போர்வையாகப் போர்த்துக்கொண்டிருக்கும் சிவபெருமானைப் போலிருந்ததாம். அந்த மலைச் சிகரத்திலே சூரியோதயமானது, அந்தப் பெருமானது நெற்றிக் கண் திறந்தது போலிருக்கிறதாம். 'நுதல்கிழித்த விழி' யென்பது அந்த நெற்றிக் கண்ணை அப்படியே திறந்து காட்டுவதுபோலிருக் கிறது! சூரியோதய வருணனை எவ்வளவு கம்பீரமாகத் தொடங்கு கிறது!

சூரியனைக்கண்டு தாமரை மலரும்போது, அந்தத் தடாகங்க ளெல்லாம் எவ்வளவு அழகு வாய்ந்து விளங்குகின்றன!

பண்டுவரும் குறிபகர்ந்து, பாசறையிற்
    பொருள்வயினிற் பிரிந்து போன
வண்டுதொடர் நறுந்தெரியல் உயிரனைய
    கொழுநர்வர மனித்தே ரோடும்
கண்டு,மனம் களிசிறப்ப ஒளிசிறந்து
    மெலிவகலும் கற்பி னர்போல்,
புண்டரிகம் முகமலர அகமலர்ந்து
    பொலிந்தனபூம் பொய்கை யெல்லாம்.

[ பண்டு - முன்னமே. வரும் குறி - திரும்பி வரும் காலத்தின் அடையாளம். பாசறை - போர் செய்யச் சென்றவர் தங்குமிடம். வயினின் - இடத்தில்; காரணமாக. நறுந்தெரியல் - நல்ல மணமுள்ள பூமாலை. புண்டரிகம் - தாமரை. பூம்பொய்கை - அழகிய நீர்நிலை. ]

போர் புரிவதற்கோ, பொருள் தேடுவதற்கோ புறப்பட்டுப் போன காதலர், தாம் திரும்பிவரும் காலத்தைக் குறிப்பிட்டுப் போனாராம். தலைவியர் நாள்களையா எண்ணிக் கொண்டிருந்தார்?

நிமிஷத்தையே யுகமாக எண்ணிக் கொண்டிருக்கிறாரென்று சொல்ல வேண்டும். அவர்கள் பிரிந்துபோன காலம் ஏதோ ஒரு பண்டைக் காலம் போலத் தோன்றுகிறது. இப்படி யிருக்கும்போது கொழுநர் திடீரென்று திரும்பி வருகிறாராம். மாலையும் தோளுமாக வந்து விடுகிறாராம், மணிகள் கட்டிய தேரிலே. அந்தமணிகள் அடிக்கும் ஓசை கேட்டு ஓடிவந்து பார்த்தார் தலைவியர். உயிர் பிரிந்த உடம்பிலே அந்த உயிர் திரும்பி வந்து சேர்ந்ததுபோல் வந்து சேர்ந்தார் அன்பரும். அந்த மாலையையும் மணித் தேரையும் பார்த்ததும், 'வெற்றியோடு வந்து விட்டார்! செல்வத்தோடு வந்து விட்டார்!' என்பது பளிச்சென்று தெரிந்து விடுகிறது. அந்த முகத்தைக் கண்டதுமே, தலைவியர் மனத்தில் களிப்பும் உடம்பில் ஒளியும் நிறைந்து விடுகின்றன: மெலிவும் போய் விடுகிறதாம். இத்தகைய காதலிமார் முகமும் அகமும் ஒருங்கே மலர்வதுபோல்; தாமரை முகம் மலரத் தடாகங்களெல்லாம் அகம் மலர்ந்து பொலிகின்றனவாம், சூரியோதய காலத்திலே.

ஓர் அழகான காதல் - நாடகம் பார்க்கிறோம், ஆனந்தமான காலை வேளையில்! பண்டைத் தமிழ் இலக்கியத்தின் காதற் பாடல்கள் கனிந்து தந்த ஓர் 'ஆசையின்' கனியோ என்று தோன்றுகிறது, இந்தக்காலைப் பாட்டு. பாடிப் பாடி அனுபவிக்கும்போது, ஒளியோடு இனிமை கலப்பதுபோல் கலந்து வருகிறது இசை நலம் சௌந்தரிய உணர்ச்சியோடு.

பாலசூரியனது பொன்னிறக் கதிர்கள் எங்கும் விரிந்து பரவுகின்றன. தெய்விகமான காட்சி: இயற்கையின் ஆனந்தக்கூத்து!

எண்ணரிய மறையினொடு கின்னரர்கள்
இசைபாட உலகம் ஏத்த,
விண்ணவரும் முனிவர்களும் வேதியரும்
கரங்குவிப்ப, வேலை யென்னும்

மன்னும்மணி முழவதிர வானரங்கில்
நடம்புரிவாள் இரவி யான
கண்ணுதல்வா னவன்கனகச் சடைவிரிந்தா
லெனவிரிந்த கதிர்க ளெல்லாம்.

[ ஏத்த - துதிக்க. விண்ணவர் - தேவர். வேலை - சமுத்திரம். மண்ணும் மணி முழவு - பதமாக அமைந்து, (நீல) ரத்தினங்களால் அலங்கரித்த முரசு. வான் அரங்கு - வானமாகிய நடனமேடை. வாள் - ஒளி. இரவி - சூரியன். கண்ணுதல் வானவன் - நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான். கனகச் சடை - பொன்னிறமான சடைகள். கதிர் - கிரணம். ]

கீழ்வானத்தையே நடன மேடையாகக் கொண்டு சிவபெருமான் ஆனந்தக் கூத்தாடுவதுபோலிருக்கிறதாம். அந்தச் சிவ சூரியனது பொன்னிறச் சடைகள் நாலு திசையிலும் விரிந்து விளங்குகின்றனவாம், சூரிய கிரணங்களாக. அப்போது, நீல ரத்தினங்களால் அலங்கரிக்கப்பெற்ற ஒரு முரசு முழங்குவதுபோல முழங்குகிறது சமுத்திரம். ஆனந்த நடராஜாவின் சன்னிதியில் முனிவரும் வேதியரும் கரம் குவித்து ஆனந்தமாக நிற்பதுபோல், உதய சூரியனுக்கு முன்பும் நின்று அஞ்சலி செய்கிறார்களாம். நடராஜாவைத் தேவர்களும் வணங்குகிறார்கள்; கின்னரர்களும் இசைபாடித் துதிக்கிறார்கள்; வேதங்களும் இசை பாடிப்புகழ்கின்றன. சூரியோதயத்தையும் மண்ணும் விண்ணும் ஒருங்கே கொண்டாடுகின்றன. எத்தனையோ வேதங்கள் பாடுவதும் சூரியன் புகழைத்தானும்.

இராமன் வழக்கமாகச் சூரியோதயத்திற்கு முன்பே அதிகாலையில் துயிலுணர்ந்து எழுவதுண்டு. ஆனால் இன்று சூரியோதயமான பிறகுதான் விழித்துக் கொண்டானும்:

கொல்லாழி நீத்(து) அங்கோர் குனிவயிரச்
சிலைதடக்கைக் கொண்ட கொண்டல்:
எல்லாழித் தேர்இரவி இளங்கரத்தால்
அடிவருடி அனந்தல் தீர்ப்ப,

## இரவும் கழிந்தது

---

அல்லாழிக் கரைகண்டான், ஆயிரவாய்
மணிவிளக்கம் அழலும் சேக்கைத்
தொல்லாழித் துயிலாதே துயராழி
நெடுங்கடலுள் துயில்கின் முனே.

[ கொல் ஆழி - (துஷ்டரைக்) கொல்லவல்ல சக்கராயுதம். நீத்து - நீக்கி. குனி வயிரச்சிலை - வளைவாகிய உறுதியான வில். தடக்கை - பெரிய கை. கொண்டல் - (இங்கே) மேகம்போன்ற இராமன். எல் - ஒளி. ஆழித் தேர் - ஒற்றைச் சக்கரத்தோடு கூடிய தேர். கரம் - (கிரணங்களாகிய) கைகள் . அனந்தல் - தூக்க மயக்கம். அல்ஆழி - இரவாகிய சமுத்திரம். வாய் -(இங்கே)முகம். மணிவிளக்கம் - மாணிக்க தீபம். சேக்கை - படுக்கை. தொல்ஆழி - பழமையான கடல்; (இங்கே) பாற்கடல். துயராழி - துயரக் கடல். ]

இரவெல்லாம் உறக்க மில்லாமலே கழிந்துவிட்டதால், அதி காலையில் அயர்ந்து மயங்கிக் கிடந்தான். விடியற்காலமாகிச் சூரிய கிரணங்கள் தன் அடிகளில் பட்ட பிறகுதான் விழித்துக் கொண்டானும். அப்படி விழித்தெழுந்தது, பால சூரியனே தன் இளங்கரத்தால் அடிவருடி அனந்தல் தீர்க்க எழுவது போலிருந்ததாம். ஆனல் உண்மையாக அவன் நித்திரை செய்யவே யில்லையாம். பாற் கடலிலே தூங்கிக்கொண்டிருந்தவன்,இப்போது துயரக் கடலென்னும் நெடுங்கடலிலேதான் தூங்கிக்கொண்டிருக்கிறுனும்.

கண்களை மலர விழித்துச் சூரியனைக் கண்டதும், இரவாகிய கடலுக்கும் எப்படியோ கரை கண்டுவிட்டோமே யென்று இராமன் நினைக்கும்படி யிருந்ததாம்.

ஊழிபெயர்ந் தெனக்கங்குல் ஒருவண்ணம்
புடைபெயர, உறக்கம் நீத்த
சூழியா னையின்எழுந்து, தொல்நியமத்
துறைமுடித்துச் சுருதி அன்ன

வாழிமா தவற்பணிந்து, மனக்கினிய
தம்பியோடும், வம்பின் மாலை
தாழுமா மணிமௌலித் தார்ச்சனகன்
பெருவேள்விச் சாலை சார்ந்தான்.

[ ஊழி - யுகம் ; நெடுங்காலம். பெயர்ந்தென - கழிந்தாற்போல. சூழி - யானையின் முகத்திலிடும் அலங்காரத்துணி. யானையின் - யானைபோல. சுருதி - வேதம். மாதவன் - மகரிஷியான விசுவாமித்திரர். வம்பு - வாசனை. மௌலி - கிரீடம். ]

யுகம் கழிந்ததுபோல் இரவு கழிய, இராமன் கம்பீரமாக எழுந்து காலைக்கடன் முடித்து விசுவாமித்திரரை வணங்கி அவரோடும் மனத்துக்கினிய தம்பியோடும் ஜனக மகாராஜாவின் யாக சாலையை அடைகிறான். இந்த விருத்தத்தின் கம்பீரமான ஓசையே, இராமன் எழுந்ததையும் பணிந்ததையும் நடந்ததையும் அப்படியே பிரத்தியட்சமாக்கி விடுகிறது!

இனி அதோ பாருங்கள் வேள்வி முடித்து வரும் ஜனக மகாராஜாவின் மாட்சியையும் கொலுவையும், அந்த இராஜ மாளிகையையும் கொலு மண்டபத்தையும், அங்கே விசுவாமித்திரர் இராம லட்சுமணரோடு வீற்றிருக்கும் கம்பீரக் காட்சியையும் :

முடிச்சனகர் பெருமானும், முறையாலே
மறைவேள்வி முற்றிச் சுற்றும்
இடிக்குரலின் முரசியம்ப இந்திரன்போல்,
சந்திரன்தோய் கோயில் எய்தி,
எடுத்தமணி மண்டபத்துள் எண்தவத்து
முனிவரொடும் இருந்தான், பைந்தார்
வடித்தகுனி வரிசிலைக்கை மைந்தனும்தம்
பியும்மருங்கின் இருப்ப மாதோ,

[ முற்றி - முடித்து. சந்திரன் தோய் கோயில் - சந்திர மண்டலத்தை அளாவிய இராஜமாளிகை. எடுத்த - உயர்த்திக் கட்டிய. எண் தவம் - மதித்து எண்ணும் தவம். குனி - வளைகிற. வரி - கட்டு அமைந்த. மருங்கு - பக்கம். ]

'இராம லட்சுமணர்களின் அழகு ஜனகனை எப்படி வசீகரித்து விடுகிறது! அவர்களை விசுவாமித்திரர் எவ்வளவு கம்பீரமாக அறிமுகப்படுத்துகிறார்!' என்பதையும் இதோ நேரில் பார்ப்பது போலப் பார்த்துக் கொள்ளலாம்:

இருந்தகுலக் குமரர்தமை இருகண்ணின்
முகந்(து)அழகு பருக நோக்கி,
அருந்தவனை அடிவணங்கி, 'யார்இவரை
உரைத்திடுமின் அடிகள்!' என்ன,
'விருந்தினர்கள்: நின்னுடைய வேள்விகா
ணியவந்தார், வில்லும் காண்பார்;
பெருந்தகைமைத் தயரதன்தன் புதல்வ'ரென
இவர்தகைமை பேச லுற்றான்.

[ கண்ணின் - கண்களால். அருந்தவன் - அரிய தவத்தையுடைய விசுவாமித்திரர். அடிகள் - சுவாமிகளே. காணிய - காணும் பொருட்டு. தகைமை - மகிமை. ]

இராம லட்சுமணர் அழகை இரண்டு கண்களாலும் முகந்து முகந்து பருகுகிறானும் ஜனகன். அவனை நோக்கி, 'விருந்தினர்கள்; உன் வேள்வி காண வந்தார்; வில்லையும் காண்பார்!' என்று சுருங்கச் சொல்லி எவ்வளவு ரஸமாக, மறைவேள்வியோடு மணவேள்வியையும் காண வந்திருக்கிறார்கள் என்று விளங்கவைக்கிறார் முனிவர்!

இந்த விருத்தங்களின் வசீகரமான — காம்பீர்யம் நிறைந்த — ஓசையும் அமைப்பும் காலவருணனைகளும் பாடிப் பாடி அனுபவிக்கத் தக்கன.

## 15. குலமுறையும் புயவலியும்

'பெருந்தகைமைத் தயரதன்தன் புதல்வரென' இராம லட்சுமணர் பெருமையைச் சொல்லத் தொடங்கிய விசுவாமித்திரர், அந்த வம்சத்தின் ஆதிபுருஷனும் நீதியின் மூலபுருஷனும் சூரிய புத்திரனுமான மனுவிலிருந்து தொடங்கி, இட்சுவாகு முதலான இராஜ சிரேஷ்டர்களைக் குறிப்பிட்டுப் பேசுகிறார்.

கருத்தன் என்ற ஓர் அரசன் சூரிய வம்சத்தில் பிரசித்தனா யிருந்தான். அவன் வம்சத்துப் பெயரால்தான் இராமன் காகுத்தன் எனப்படுகிறான். அந்த அரசன் பெருமையைப் பிரஸ்தாபித்ததும் முனிவர்,

'அரசனவன் பின்னோரை என்னாலும் அளப்பரிதால் :
உரைகுறுக நிமிர்கீர்த்தி இவர்குலத்தோன் ஒருவன்காண்,
நரைதிரைமூப்(பு) இவைஎய்தி இந்திரனும் நந்தாமல்,
குரைகடலை நெடுவரையால் கடைந்(து)அமுதம் கொடுத்தானும்'

[ அளப்பு - அளவிடுதல். உரை - சொல். நந்தாமல் - இறவாமல். குரை - ஒலிக்கின்ற. வரை - மலை. ]

என்று பின் ஒருவன் பெருமையை வெளியிடுகிறார்.

கருத்தன் பின்னோரும் இராமன் முன்னோருமான அரசர் பெருமையைத் தம்மாலும் அளவிட்டுச்சொல்ல முடியாதென்கிறார். தம்முடைய தவ வலிமையை உணர்ந்திருக்கும் விசுவாமித்திர ராலேயே அளக்கமுடியாதென்றால், வேறு எந்த அளவு கருவியும் பயன்படாதென்பது குறிப்பு. இத்தகைய பீடிகையோடு, உதாரண மாக ஓர் அரசனை 'உரைகுறுக நிமிர்கீர்த்தி' வாய்ந்தவனென்று

குறிப்பிடுகிருர். பாஷையே குறுகிவிட்டது என்று சொல்லும்படி அவன் கீர்த்தி நிமிர்ந்திருக்கிறதாம். அந்தக் கீர்த்தியைச் சொல்லப் பாஷையிலுள்ள சொற்களுக்குச் சக்தியில்லை யென்பது பொருள். இந்தச் சொற்றொடரிலேயே பாருங்கள், எப்படி உரைகுறுகிப் பொருள் நிமிர்கிறதென்று! இப்படிச் சொல்லிப்பார்த்தாலும் சொல்ல முடியாத பெருமையாம், பாற்கடல் கடைந்து இந்திரனுக்கு அமுது கொடுத்த அரசன் பெருமை.

அந்த அரசன் பெயர்கூட இப்போதுள்ள இதிகாச புராணங்களைக் கொண்டு நாம் தெரிந்துகொள்ள முடியவில்லை. எனினும் தேவராஜாவும் நம்மைப்போல் நரைதிரை மூப்பு அடைந்து மரணம் அடையாதபடி அமுதளித்துக் காப்பாற்றியவன் ஒரு மனிதராஜா என்ருல், அந்தப் புகழ் கொஞ்சமா? 'உரைகுறுக நிமிர்கீர்த்தி' என்று தானே சொல்லவேண்டும்?

பிறகு அரும்பெருங் குணங்கள்வாய்ந்த அளவற்ற அரசர்களுக்கிடையே மாந்தாதாவின் பெயரும் தருமமும் விசேஷமானவை யென்று ஞாபகப்படுத்துகிருர்.

**கருதரிய பெருங்குணத்தோர் இவர்முதலோர் கணக்கிறந்தோர்,**
**திரிபுவனம் முழுதாண்டு சுடர்நேமி செலநின்ருர்,**
**பொருதுறைசேர் வேலினய்! புலிப்போத்தும் புல்வாயும்**
**ஒருதுறையில் நீர்உண்ண உலகாண்டோன் ஒருவன்காண்.**

[கருதரிய - கருதுதற்கும் முடியாத. இவர் முதலோர் - இக்குமாரர்களின் முன்னோர். திரிபுவனம் - மூன்று லோகங்கள். சுடர்நேமி - ஒளியையுடைய ஆஜ்ஞா சக்கரம். பொருது - போர்புரிந்து. வேலினய் - வேலாயுதத்தையுடைய ஜனக மன்னனே. புலிப்போத்து-ஆண்புலிகள். புல்வாய்-மான்கள்.]

என்று அவனுடைய நீதிபரிபாலனத்தைப் பாராட்டுகிருர்.

புலியும் மானும் ஒரு துறையில் நீருண்ண அரசாண்டானும் மாந்தாதா. பெரியவை சிறியவற்றை நலியாதபடி, வலியவர்

மெலிந்தவரை நலியாதபடி, ஆட்சி நடந்த தென்பது பொருள். எங்கும் அன்பும் அருளும் தலையெடுத்து நிற்கும்படி, கொலை பகை அச்சம் முதலியன அறவே ஒழியும்படி அவனது ஆட்சிமுறை அமைந்திருந்தது என்பது குறிப்பு. இத்தகைய ஆட்சிமுறையும் நீதி முறையும், திரிபுவன சக்கரவர்த்திகளென்ற பெருமையையும் வென்று அத்தகைய பதவிக்கும் ஒரு புதிய மாட்சியை அளித்தனவாம்.

சுத்த வீரர்களாய்த் தருமத்தை எங்கும் நிலை நிறுத்துவதைத் தொழிலாகக் கொண்ட மன்னர்களின் ஞாபகம் வருகிறது. அவர்களில் முசுகுந்தனைக் குறிப்பிடுகிறார் :

மறைமன்னு மணிமுடியும் ஆரமும்வா ளொடுமின்னப்
பொறைமன்னு வானவரும் தானவரும் பொருதநாள்,
விறல்மன்னர் தொழுகழலாய்! இவர்குலத்தோன் விற்பிடித்த
அறமென்ன ஒருதனியே திரிந்(து)அமரா பதிகாத்தான்.

[ மறை மன்னு - வேத விதி பொருந்திய. பொறை மன்னு - பொறுமை மிகுந்த. தானவர் - அசுரர். பொருத - போர் செய்த விறல் - வலிமை. கழல் - பாதம். அமராபதி - இந்திரனது தலைநகரமாகிய அமராவதி பட்டணம். ]

உலகத்தின் ஆதி யுத்தமென்று சொல்லப்படும் தேவாசுர யுத்தத்திலே முருகக் கடவுள் தேவசேனாபதியாய் வருமளவும், அமராவதிபட்டணத்தைக் காத்து நின்றானும், இராம லட்சுமணர்களின் குலத்தினனாகிய முசுகுந்த சக்கரவர்த்தி. வேத விதிப்படி அணிந்துகொண்ட கிரீட ஹாரங்கள் வாளோடு மின்னத் தருமமே வில்லும் பிடித்ததென்று சொல்லும்படி தான் ஒருவனாகவே தேவேந்திர ராஜதானியைக் காப்பாற்றி வந்தானும், அசுரர்கள் சூழ்ந்து முற்றுகை யிட்ட காலத்திலே.

இத்தகைய வீரர்களுக்கும் மேலான வீரர்களான ஜீவகாருண்ய மூர்த்திகளின் ஞாபகம் வந்ததும், சிபிச் சக்கரவர்த்தியைக் குறித்துப் பேசுகிறார் :

இன்னுயிர்க்கும் இன்னுயிராய் இருநிலம்முன் காத்தளித்த
பொன்உயிர்க்கும் கழலவரை யாம்போலும் புகழ்கிற்பாம் ?
மின்உயிர்க்கும் நெடுவேலோய் ! இவர்குலத்தோன், மென்பறவை
மன்னுயிர்க்கும் தன்னுயிரை மாருக வழங்கினன்.

[ இருநிலம் - பெரிய ராஜ்யம். பொன் உயிர்க்கும் - பொன் ஒளியை வெளிப்படுத்தும். கழலவர் - வீரக்கழலுடைய இக்குலத்தரசர்கள். புகழ்கிற்பாம் - புகழவல்லோம். மின் உயிர்க்கும் - மின் ஒளியை வெளிப் படுத்தும். மென்பறவை - மெல்லிய ஒரு பறவை. மன்-தங்கிய; பொருந்திய. மாறு - ஈடு. ]

மன்னுயிரைத் தன்னுயிராக மதித்து அரசாண்டார்களென்று இந்த அரசர்களைப் புகழ்வது சரியன்று. உயிர்கள்மீது அவர்கள் கொண்டிருந்த அன்பை அப்படி யெல்லாம் மதிப்பிட்டால் போதாது என்று சொல்லும் விசுவாமித்திரர், அவர்களைப் புகழ்வதற்குக்கூட நமக்கு வல்லமை கிடையாதென்று ஒப்புக்கொள்கிறார். இத்தகைய பீடிகையோடு, ஒரு புறாவுக்காகத் தன் உயிரையே கொடுக்கத் துணிந்த தியாகமூர்த்தியான சிபிச் சக்கரவர்த்தியும் ‘இவர் குலத்தோன்’ என்கிறார்.

லோகோபகாரமான பெருஞ் செயல்கள் செய்த பேரரசர்களில், சமுத்திரத்தைத் தோண்டிய சகர குமாரர்களைக் குறிப்பிடுகிறார். அப்பால் பகீரதப் பிரயத்தினம் என்று பெரு முயற்சிக்கு வரம்பாக உலகம் சொல்லும், கங்கை கொணர்ந்த செயற்கருஞ் செயலையும் ஞாபகப்படுத்துகிறார் :

தூநின்ற சுடர்வேலோய் ! அனந்தனே சொல்லானேல்,
யான்இன்று புகழ்ந்(து)உரைத்தற்(கு) எளிதோ ?ஏ டவிழ்கொன்றைப்
பூநின்ற மவுலியையும் புக்(கு)அலைந்த புனற்கங்கை
வான்நின்று கொணர்ந்தோனும் இவர்குலத்(து)ஓர் மன்னவன்காண்.

[ தூ - (பகைவரது) மாமிசம். ஏடு அவிழ் - இதழ்கள் விரிகின்ற. மவுலி- முடி. புக்கு - வந்து. ]

'கங்காவதாரத்திற்குக் காரணமான பகீரதப் பிரயத்தினத்தை இரண்டாயிரம் நாவுள்ள ஆதிசேஷனும் சொல்லமுடியாதென்றால், என் ஒரு நாக்கைக் கொண்டு சொல்லிவிட முடியுமோ?' என்று சொல்லும் விசுவாமித்திரர் அந்தப் பகீரதனும் இவர் குலத்திலே பிறந்த அரசர்களில் ஒருவன்தான் என்கிறார்.

மறுபடியும் வீரமன்னர்களின் ஞாபகம்தான்.

'சந்திரனை வென்றானும், உருத்திரனைச் சாய்த்தானும்,
துந்துவெனும் தானவனைச் சுடுசரத்தால் துணித்தானும்,
வந்தகுலத்(து) இடைவந்த ரகுஎன்பான் வரிசிலையால்
இந்திரனை வென்றுதிசை இருநான்கும் செருவென்றான்'

[ துணித்தான் - கொன்றான். செரு - போர். ]

என்று சந்திரனை வென்ற திலீபமன்னன் முதலானவர்களைக் குறிப்பிடுகிறார். பிறகு வீராதிவீரனும், சூரியவம்சம் இரகு வம்சமென்று பெயர் பெறும்படி ஆட்சி புரிந்தவனுமான இரகு மகாராஜாவின் புகழைக் குறிப்பிடுகிறார். இரகுவின் பெயரால்தானே இராமனுக்கும் இராகவன் என்ற பெயர் பிரசித்தமாக வழங்குகிறது.

அப்பால் இராம லட்சுமணரின் பாட்டனை அஜ மகாராஜாவின் வீரத்தையும் அதிர்ஷ்டத்தையும் புகழ்ந்து பேசுகிறார். அவனும் பாற்கடல் கடைந்த தன் முன்னோனைப்போல் ஒரு மலையால் ஒரு கடலைக் கலக்கி விட்டானும்:

வில்லென்னும் நெடுவரையால் வேந்தென்னும் கடல்கலக்கி,
எல்லென்னும் மணிமுறுவல் இந்துமதி யெனும்திருவை,
அல்லென்னும் திருநிறத்த அரியென்ன அயன்என்பான்
மல்லென்னும் திரள்புயத்துக்(கு) அணியென்ன வைத்தானே.

[ வேந்து - வேந்தர். எல் - ஒளி. முறுவல் - புன்சிரிப்பு. அல் - இருள். திரு - இலட்சுமி. அரி - விஷ்ணு. அயன் - அஜ மகாராஜன். புயம் - தோள். ]

மந்தர மலையால் பாற்கடலைக் கலக்கியதுபோல், அஜனும் வில்லென்னும் மலையால் வேந்தராகிய கடலைக் கலக்கிவிட்டானும். பாற்கடலைக் கலக்கியதும் மகாவிஷ்ணுவுக்கு மகாலட்சுமி கிடைத்தா ளல்லவா? அந்த அரியைப் போல் இந்த அயனுக்கும் ஒரு திருமகள் கிடைத்தாளாம். இந்த இலட்சுமிக்கு இந்துமதி என்று பெயர். திருமகளைத் திருமால் தன் மார்பிற்கு அணியாகக் கொண்டார். அஜனோ தன் வீரத்தோளுக்கு அணியாகவைத்துக் கொண்டானும் 'இந்துமதி யெனும்திருவை.'

இந்துமதியின் சுயம்வரம் காளிதாச மகாகவியின் ரகுவமச மென்ற காவியத்தில் விவரிக்கப்படுகிறது. அவள் பிற அரசர்களை இகழ்ந்து அஜ மகாராஜாவுக்கே மாலை சூட்டினுள் என்பதும், அது கண்டு பொறுமை கொண்ட அரசர்கூட்டம் அஜனைச் சூழ்ந்து கொண்டு போர் விளைத்ததென்பதும், அந்தப் போரில் அஜன் அரசர்களை வென்று வலியழித்தானென்பதும் கதைச் சுருக்கம். அந்தக் கதையின் சாரத்தைக் கிரகித்துக்கொண்டு, பாற்கடல் கடைந்து அமுதம் தந்ததுபோல் 'ஒரே பாட்டில் ஒரு காவியம்' தந்திருக்கிறுன் கம்பன்.

மணமாலையுங் கழுத்துமாய் வில்லேந்தித் தன்னைச் சூழ்ந்து கொண்டவர்களை அஜன் கலக்கி அடிக்கும் காட்சியிலிருந்து கதை ஒரு நாடகம் போலத் தொடங்குகிறது. அந்த அனுயாச வெற்றியைக் கண்டு முத்துப்போன்ற தன் பற்கள் சிறிது தோன்ற இந்துமதி இளநகை அரும்புவதும், அந்த ஒளிவெள்ளத்திலே அவளைத் தன் விஜயலட்சுமியாக அஜன் காண்பதும், உடனே தன் வீரத்தோளுக்கு அணியாக அந்தத் திருவை அவன் அணிந்து மகிழ்வதும் எவ்வளவு ரஸமாக வருணிக்கப்படுகின்றன! 'என்ன சொற்செட்டு! என்ன பொருட்பெருக்கம்! என்ன ஓசை - வெள்ளம்!' என்றெல்லாம் வியந்து வியந்து இந்தப் பாட்டையே நெடுநேரம் பாடிக் கொண்டிருக்கலாமென்று தோன்றுகிறது.

அஜமகாராஜாவின் புதல்வனான தசரதன்தான் வீரத்தில் குறைந்தவனா? தரும பரிபாலனத்திலும் நீதி பரிபாலனத்திலும் அவனே முன்னோர்களுக்கும் முன்னோன் என்று சொல்லும்படி யிருக்கிறானாம். அவனுடைய 'பெருந்தகைமை'யையும் பெருங் குறை யையும் சொல்லத் தொடங்கி,

'துனியின்றி உயிர்செல்லச் சுடராழிப் படைவெய்யோன்
பனிவென்ற படியென்னப் பகைவென்று படிகாப்போன்,
தனுவன்றித் துணையில்லான், தருமத்தின் கவசத்தான்,
மனுவென்ற நீதியான்; மகவின்றி வருந்துவான்'

[துனி - துன்பம். ஆழிப்படை வெய்யோன் - சக்கராயுதம் போன்ற சூரியன். படி - தன்மை; உலகம். மகவு - குழந்தை.]
என்கிறார்.

'தனுஅன்றித் துணையில்லான், தருமத்தின் கவசத்தான்'— என்ன அருமையான வாக்கு! இதில் தசரதனுடைய சரித்திரமும் குணாதிசயமும் வித்தில் அடங்கிய ஆலமரம்போல் அடங்கியிருக் கின்றன என்று கருதலாம். கடைசியாக 'மனுவென்ற நீதியான்; மகவின்றி வருந்துவான்!' என்று சொல்லும்போது, நீதிக்கும் அந்த வருத்தத்திற்கும் ஏதோ தொடர்பு இருக்கலாமோ?— என்று தோன்றுகிறது.

ஆம்: கலைக்கோட்டு முனிவரைப் புதல்வருண்டாக அருள் புரியும்படி தசரதன் வேண்டிக்கொள்ளும்போது, 'எனக்குப் பின்பும் நீதியும் தருமமும் நிலைத்திருக்கும்படி இராஜ்யம் காத்தற்கு உரிய புதல்வர் வேணும்' என்றுதான் கேட்டானாம்.

'"தார்காத்த நறுங்குஞ்சித் தனயர்கள்என் தவமின்மை
வார்காத்த வனமுலையார் மணிவயிறு வாய்த்திலரால்:
நீர்காத்த கடல்காத்த நிலம்காத்தேன்; என்னிற்பின்
பார்காத்தற்(கு) உரியாரைப் பணிநீ"என்(று) அடிபணிந்தான்.'

[ தார் காத்த நறுங்குஞ்சி - பூமாலையை அணிகிற மணமுள்ள முடி இன்மை - இன்மையால். வார் - கச்சு. வனம் - வனப்பு. என்னின் பின் - எனக்குப் பின்பு. பார் - நிலவுலகம் ; (இங்கே) இராஜ்யம். பணி - அருள் செய்வாயாக. ]

என்று அந்தப் 'பெருந்தகைமை'யைக் குறிப்பிடுகிறார் விசுவாமித்திரர்.

தசரதன் வசிஷ்டரை நோக்கி, 'எற்பின் வையகம் மறுகுறும்' என்று கலங்கி நல்லவர்கள் தன் காலத்துக்குப் பின்பு வருந்துவார்களே யென்று வருந்தியதையும், கலைக் கோட்டு முனிவரை நோக்கி,

'உலப்பில்பல் லாண்டெலாம் உறுகண் இன்றியே
தலப்பொறை ஆற்றினேன் ; தனயர் வந்திலர் :
அலப்புநீர் உடுத்தபார் அளிக்கும் மைந்தரை
நலப்புகழ் பெறஇனி நல்க வேண்டுமால்'

[ உலப்பில் - முடிவில்லாத. உறுகண் - துன்பம். தலப் பொறை - பூமி பாரம். ஆற்றினேன் - தாங்கினேன். அலப்பு நீர் - அலம்பு நீர் - கடல். நலப் புகழ் - சிறந்த புகழ். ]

என்று வேண்டிக் கொண்டதையும் இந்தச் சந்தர்ப்பத்திலே ஞாபகப் படுத்திக் கொள்ளலாம்.

'பார்காத்தற்கு உரியாரைப் பணிநீ' என்று வேண்டிக் கொள்கிறான். இங்கே உரிமையை வற்புறுத்தவில்லை ; காக்கும் கடமையே உரிமையாக வற்புறுத்தப்படுகிறது. கலைக்கோட்டு முனிவரோ, இராஜ்யம் மாத்திரமே யல்லாமல் — இந்த உலகம் மாத்திரமே யல்லாமல் — எல்லா உலகங்களையும் இனிது காக்கும் குமாரர்களைத் தருவதாக வாக்களித்தாராம் :

அவ்வுரைகேட்(டு) அம்முனியும் அருள்சுரந்த உவகையனுய்,
'இவ்வுலகம் அன்றியே எவ்வுலகும் இனிதளிக்கும்
செவ்விஇளஞ் சிறுவர்களைத் தருகின்றேன் ; இனித்தேவர்
வவ்விநுகர் பெருவேள்விக்(கு) உரியவெலாம் வரு'கென்ருன்.

[ செவ்வி - அழகு. வவ்வி - பற்றிக்கொண்டு. நுகர் - உண்ணுகிற. ]

இப்படி விசுவாமித்திரர் ஜனகனிடம் கூறுவதோடு, திரு அவதாரப்படலத்தில் வரும்,

‘என்றலும், “ அரச! நீ இரங்கல் ; இவ்வுல(கு)
ஒன்றுமோ ? உலகம்ஈ ரேழும் ஓம்பிடும்
வன்றிறல் மைந்தரை அளிக்கும் மாமகம்
இன்றுநீ இயற்றுதற்(கு) எழுகஈண் ” டென்ருன்’

[ இரங்கல் - வருத்தப்படாதே. வன்றிறல் - மிக்க வல்லமை. மாமகம் - பெரிய யாகம். ஈண்டு - இப்பொழுது. ]

என்ற பாட்டிலே கலைக்கோட்டு முனிவர் தசரதனுக்குப் பதில் சொல்வதை ஒப்பிடலாம்.

வேள்வியின் பயனுகக் கௌசலை ‘ எவ்வுலகும் இனிதளிக்கும் ’ இந்தப் புதல்வனைப் பெற்றெடுத்தாளென்று இராமனைச் சுட்டிக் காட்டும் விசுவாமித்திரர்,

‘ விரிந்திடுதீ வினைசெய்த வெவ்வியதீ வினையாலும்,
அருங்கடையில் மறைஅறைந்த அறம்செய்த அறத்தாலும்,
இருங்கடகக் கரதலத்(து)இவ் வெழுதரிய திருமேனிக்
கருங்கடலைச் செங்கனிவாய்க் கவுசலையென் பாள்பயந்தாள் ’

[ வெவ்விய - கொடிய. அருங்கடையில் - அரிய; எல்லையில்லாத. இருங்கடகம் - பெரியகடகம் (ஒருவகைக்கை அணி). பயந்தாள் - பெற்ருள். ]

என்று எவ்வளவு வசீகரமாக இராமன் பிறப்பையும், அறம் வளர்க்கும் அந்தப் பேரழகையும் வருணிக்கிருர் !

தீவினை செய்த தீவினையாலும் அறம் செய்த அறத்தாலும் இராமன் தோன்றியிருக்கிருனும். தீவினை விரிந்து பரவியபோதிலும் அதைக்குறித்து அஞ்சவேண்டாமென்பதும், அப்படிப் பரவுவதே

அதன் அழிவிற்குக் காரணமாகுமென்பதும் குறிப்பு. அப்படியே அறம் கஷ்டப்படுவதைக் குறித்தும் அஞ்சவேண்டியதில்லை; முடிவான வெற்றி அறத்திற்குத்தான். இப்படியெல்லாம் குறிப்பாகவும் வெளிப்படையாகவும் பேசும் விசுவாமித்திரர், தாம் முன்னமே இராமனிடம் குறிப்பிட்ட 'பெரியகாரிய'த்தை இங்கும் மறை பொருளாகக் குறிப்பிடுகிறாரென்று கருதலாம்.

இராமனுடைய சகோதரர்களைக் குறித்துப் பிரஸ்தாபிக்கும் போது, பரதனுக்கும் ஏறக்குறைய இராமனுக்குச் சமமாகப் பெருமை கொடுத்துப் பேசுகிறார்:

தள்ளரிய பெருநீதித் தனியாறு புகமண்டும்
பள்ளமெனும் தகையானைப் பரதனெனும் பெயரானை
எள்ளரிய குணத்தாலும் எழிலாலும் இவ்விருந்த
வள்ளலையே அனையானைக் கேகயர்கோன் மகள்பயந்தாள்.

[ தள்ளரிய - தள்ளமுடியாத. தனி ஆறு - ஒப்பற்ற நதி. மண்டும் - அதிக மாகும்; நிரம்ப உண்ணும். தகை - இயல்பு. எள்ளரிய - (எவராலும்) இகழ்வதற்குமுடியாத. எழில் - அழகு. இவ்விருந்த - இங்கு வந்திருக்கிற. ]

இராமன் தரும சமுத்திரமென்றால், பரதன் நியாய சமுத்திர மென்கிறார். ரூப சௌந்தரியத்தில் மட்டுமல்ல, குண சௌந்தரியத் திலும் அந்த 'நீதியின் நிலயம்' இதோ இருக்கும் 'அறத்தின் மூர்த்தி'யை ஒத்து விளங்குகிறா னென்கிறார். இப்படி ஒத்திருந்தும், இவ்விரண்டு சகோதரர்களுடைய குணாதிசயங்களின் சிறப்பியல்பு களும் இளமையிலேயே உருப்பெற்று வளர்ந்து கொண்டிருக்கின்றன என்பது குறிப்பு. இராம சௌந்தரியத்தைப் பாராட்டும் செய்யுளைப்போல், பரதனைப் பாராட்டும் செய்யுளும் எவ்வளவு வசீகரமாக அமைந்திருக்கிறது!

பிறகு இலட்சுமண சௌந்தரியத்தையும் பராக்கிரமத்தையும் பாராட்டுகிறார். இராமனோடு பரதனை ஒப்பிட்டதுபோல், இலட்சுமண னோடு அயோத்தியிலுள்ள சத்துருக்கனனையும் ஒப்பிட்டுப் பேசுகிறார்.

அப்பால் நான்கு புதல்வர்களும் ஆண்டிலும் அறிவிலும் வளர்ந் தோங்கியதைக் குறிப்பிடுகிறார். இவர்களுக்குத் தசரதன், தந்தை யென்பது பெயரளவிலே தான் என்று சொல்லிச் சகல கலைகளையும் வேதங்களையும் ஊட்டி இவர்களை வளர்த்த உண்மைத் தந்தை வசிஷ்டரே என்கிறார்.

அந்த ஞானபிதாவிடம் இராமன் முதலான சகோதரர்கள் பெற்ற கல்விப் பயிற்சியைப் பற்றிய குறிப்பு ஒன்று,

'தலையான பொருளுணர்விற் கலைமகட்கும் தலைவராய்ச்
சிலைஆயும் தனுவேதம் தெவ்வரைப்போல் பணிசெய்யக்
கலையாழிக் கதிர்த்திங்கள் உதயத்தில் கலித்தோங்கும்
அலையாழி யெனவளர்ந்தார் மறைநான்கும் அனையார்கள்'

[ தலை ஆன - முக்கியமான. ஆயும் - ஆராயும். தெவ்வர் - பகைவர். கலித்து - ஒலித்து. ஆழி - சமுத்திரம். ]

என்ற விசுவாமித்திரர் வாக்கிலே காணப்படுகிறது.

குழந்தைகளின் மனத்தை ஒரு கூடையாக மதித்து, அதைப் பல விஷயங்களாலும் நிரப்பிவிடுவதுதான் கல்வியென்பது வசிஷ்டர் கொள்கையன்று. வாழ்க்கையில் எதிர்ப்படும் விஷயங்களைச் சோதித்து அறிந்து அவற்றின் உண்மைப் பொருளை உணர்ந்து ஒழுகும் ஆற்றலை மாணக்கர்களுக்கு அளிப்பதுதான் கல்விமுறையாகு மென்று வசிஷ்டர் கருதினாராம். இத்தகைய கல்விப் பயிற்சிக்கு உடற்பயிற்சியும் இன்றியமையாதது. இராமன் முதலானவர்கள் வசிஷ்டரது குருகுலத்திலே மனத்தைப் பண்படுத்திக் கொண்டது போல், உடம்பையும் வில்வித்தை முதலான சாதனங்களால் மிகவும் செவ்வையாகப் பண்படுத்திக் கொண்டார்கள்.

அங்கே அவர்கள் எவ்வளவு ஆனந்தமாக வளர்ந்து வந்தார்கள் என்பதை மேலே குறித்த செய்யுளின் பின்னிரண்டு அடிகள் வெளியிடுகின்றன. சமுத்திரத்திலே நிர்மலமான பூர்ண சந்திரன்

வட்டவடிவமாக உதயமாகிறது. சந்திரனது ஆசைமுகத்தைக் கண்டதும் சமுத்திரத்திற்குத்தான் என்ன சந்தோஷம்; என்ன குதூகலம்! 'ஓ!' என்று ஒலித்துப் பொங்கி அலைகளாகிற கைகளைச் சந்திரனுக்கு நேரே நீட்டி ஆனந்தமாகக் கொட்டி முழக்கும் சமுத்திரத்தைப்போல், இராமன் முதலானவர்களும் வசிஷ்டரது குருகுலத்தில் வளர்ந்துவந்தார்களாம். வசிஷ்டரால் கிடைத்த இந்தக் கல்விதான் விசுவாமித்திரர் கூட்டுறவால் பூர்த்தியாகிவருகிறது.

இராமன் முதலான புதல்வர்களின் அறிவு வளர்ச்சியையும், அறிவோடு கலந்து வளர்ந்த அந்த வீரத்தையும் பாராட்டியபின், தம் வேள்வி காக்க இராம லட்சுமணரை அழைத்துக்கொண்டு புறப்பட்டதையும், அவர்களுடைய வீர - பரீட்சைக்குரிய சந்தர்ப்பமொன்று உடனே வாய்த்ததையும் பிரஸ்தாபிக்கிறார் :

**ஈங்(கு)இவரால் என்வேள்விக்(கு) இடையூறு கடிதியற்றும்**
**தீங்குடைய கொடியோரைக் கொல்விக்கும் சிந்தையனுய்ப்**
**பூங்கழலார்க் கொண்டுபோய் வனம்புக்கேன்! புகாமுன்னம்**
**தாங்கரிய பேராற்றல் - தாடகையே தலைப்பட்டாள்!**

[ கடிது - விரைவாக. பூங்கழலார் - பூப்போல் மெல்லிய பாதங்களையுடைய குமாரர்கள். புகாமுன்னம் - புகுந்ததுதான் தாமதம் என்றபடி. தாங்கரிய - தாங்கமுடியாத. தலைப்பட்டாள் - எதிர்ப்பட்டாள். ]

'பூப்போல மெல்லிய அடிகளைப் பாலைவனத்தில் நடக்கும்படி செய்தேனே!' என்ற இரக்கம்தோன்ற, 'பூங்கழலார்க் கொண்டுபோய் வனம்புக்கேன்' என்றும், 'முதலாவது பரீட்சையான கன்னிப்போரே அவ்வளவு கடினமான பரீட்சையாக ஏற்படவேணுமா?' என்ற இரக்கம் தோன்ற, 'தாங்கரிய பேராற்றல் - தாடகையே தலைப்பட்டாள்' என்றும் சொல்லுகிறார்.

கடினமான பரீட்சையென்று முனிவர் நினைத்தார். இராமனுக்கோ அது கடினமாகவுமில்லை; பரீட்சையாகவுமில்லையாம் :

'அலையுருவக் கடலுருவத்(து) ஆண்டகைதன் நீண்டுயர்ந்த
நிலையுருவப் புயவலியை நீஉருவ நோக்(கு)ஐயா!
உலையுருவக் கனலுமிழ்கண் - தாடகைதன் உரம்உருவி,
மலையுருவி, மரம்உருவி, மண்ணுருவிற்(று) ஒருவாளி!'

[ அலை உருவக் கடல் - அலை வடிவமான கடல். நிலை உருவப் புயவலி - நிலையான அழகுடைய தோள்வலிமை. உருவ நோக்கு - ஊன்றிப்பார். உலை - கொல்லன் உலை. உருவக் கனல் - செந்நிறமான நெருப்பு. உரம் - மார்பு. வாளி - பாணம். ]

என்று இராமன் அடைந்த அநாயாச வெற்றியை ஜனகன் உள்ளத்திலே ஊன்றிப் பதியும்படி ஆச்சரியமாக வருணிக்கிறார்.

தாடகை மார்பை உருவிப்போன பாணம் பக்கத்திலிருந்த மலையையும் உருவி, மரத்தையும் உருவிக் கடைசியாக மண்ணையும் துளைத்துவிட்டதாம். 'இப்படி நான் சொல்வது உயர்வுநவிற்சி யன்று: இந்த வீரத் தோள்களே சாட்சி!' என்று சொல்லுகிறவர், சாட்சி விசாரணையையும் வெகு சுலபமாக்கி விடுகிறார். 'நீ உருவ நோக்கு; உண்மை தெரியு'மென்கிறார். சாதாரணமாக நோக்கினால் போதாதாம். கண்கள் தைத்து ஊடுருவும்படி ஊன்றிப்பார்க்க வேண்டுமாம், அந்த வீர சௌந்தரியத்தை. 'நோக்கு ஐயா!' என்று எவ்வளவு அருமையாகவும் அதிசயமாகவும் ஜனகன் கவனத்தை வசீகரித்துத் தம்முடைய அபிப்பிராயம் அப்படியே அவன் நெஞ்சில் ஊன்றித் தைக்கும்படி செய்துவிடுகிறார்.

இராமனது முன்னோர்களின் அருஞ் செயல்களைப் பாராட்டிப் பேசி வந்தவர், இப்போது இராமனது அருஞ்செயல்களையே சொல்லத் தொடங்கித் தாடகை வதத்தைக் குறிப்பிடும்போது, 'புயவலியை நீஉருவ நோக்கையா!' என்று அந்த அரக்கியை வதஞ் செய்த புயவலியை அப்படியே கண்முன் காட்டுவதுபோல் காட்டி, 'வில்லும் காண்பார்!' என்று தாம் முன்னமே சொன்னதை உறுதிப் படுத்துகிறார்.

கன்னிப் போரையும் அந்தக் 'கைவண்ண'த்தையும் இவ்வளவு ரஸமாகப் பிரஸ்தாபித்தவர் இரண்டாவது பரீட்சையையும் ரஸமாகவே குறிப்பிடுகிருர் :

செக்கர்நிறத்(து) எரிகுஞ்சிச் சிரக்குவைகள் பொருப்பென்ன
உக்கனவோ முடிவில்லை ; ஓர்அம்பி னெடும்அரக்கி
மக்களில்அங்(கு) ஒருவன்போய் வான்புக்கான் ; மற்றையவன்
புக்கஇடம் அறிந்திலேன் ; போந்தனன்என் வினைமுடித்தே.

[ செக்கர் - செவ்வானம். எரிகுஞ்சி - நெருப்புப்பற்றி எரிவதுபோல் தோன்றும் செம்மயிர்கள். குவை - குவியல். பொருப்பு - மலை. உக்கன - சிதறியன. புக்க - போய்ச் சேர்ந்த. போந்தனன் - (இங்கு) வந்தேன். ]

தாடகை புத்திரர்களான சுபாகு மாரீசர்களில் ஒருவன் (சுபாகு), இராமன் ஓர் அம்பு போட்டதும் அந்த அம்போடே ஆகாசம் போய்ச் சேர்ந்தானும். 'மற்றவன் போன இடம் எனக்குத் தெரியாது' என்கிருர். 'யாக காரியத்தை முடித்துக்கொண்டு அப்படியே இங்கு வந்துவிட்டேன்' என்று இராமன் யாகரட்சணம் செய்த கதையைக் குறிப்பிடுகிருர்.

இராமபாணம் ஒருவனைக் கடலிலே தள்ளிவிட்டதென்பதும், மற்றொருவனை யமலோகத்திற்கே கொண்டுபோய் விட்டதென்பதும் ஏற்கெனவே சொன்ன கதை. அந்த இடத்திலேயே சுபாகு செத்துப் போனுன் என்பதுதானே விசுவாமித்திரருக்குத் தெரிந்திருக்க முடியும்? எனவே 'மற்றையவன் புக்கஇடம் அறிந்திலேன்!' என்று இங்கே கூறுவது எவ்வளவு பொருத்தமானது !

'கைவண்ணம்' சொன்னவர், 'கால்வண்ணத்'தையும் சொல்லி முடிக்கிருர் :

'கோதமன்தன் பன்னிக்கு முன்னைஉருக் கொடுத்த(து)இவன்
போதுவென்ற(து) எனப்பொலிந்த பொலன்கழற்காற் பொடிகண்டாய்!

காதல்என்தன் உயிர்மேலும் இக்கரியோன் பால்உண்டால்!
ஈ(து)இவன்தன் வரலாறும் புயவலியும்' எனஉரைத்தான்.

[ பன்னி - பத்தினி. போது - மலர். பொலன் - பொன். கழற்கால் - வீரக்கழல் அணிந்த திருவடி. ஈது - இது. ]

இராமனது பாததூளி பட்டதும் அகலிகை 'பண்டை வண்ணமாய் நின்றனள்' என்று முதல்முதல் கவிக்கூற்றாகக் கூறினான். பிறகு 'முன்னை வண்ணத்த ளாகிநின்றாள்' என்று விசுவாமித்திரரே கூறியுள்ளார். அப்படித் தாமே கூறியதற்கு ஏற்றபடி 'முன்னைஉருக் கொடுத்தது' என்று இப்போதும் கூறுகிறார்.

'அகலிகைக்கு' என்று கூறாமல் 'கோதமன்தன் பன்னிக்கு முன்னைஉருக் கொடுத்தது' என்று கூறுவது கவனிக்கத்தக்கது. கௌதம பத்தினியாவதற்கு முன் இருந்த கன்னியுருவத் தைக் கொடுத்தான் இராமன் என்பது குறிப்பு. கற்பு அழிக்கப் பட்ட அந்த நிகழ்ச்சியே அவள் வாழ்க்கையிலிருந்து அழிக்கப்பட்ட தாம், இராமன் அருளால். கௌதமர், அவளை அந்த நிலையில் ஏற்றுக் கொண்டது, அப்போதுதான் புதிதாக அவளைக் கலியாணஞ் செய்து கொண்டதுபோலிருந்ததாம்.

இப்படியெல்லாம் இராமனது துஷ்ட நிக்கிரகப் பெருமையோடு சிஷ்ட பரிபாலனப் பெருமையையும் கூறி முடிக்கும்போது, தமக்கு அவன்மேலுள்ள விசேஷ அபிமானத்தையும் வெளியிடுகிறார். அந்த அபிமானத்தைக் 'காதல்' என்றே ஒப்புக்கொள்ளுகிறார். 'கண்ணிற் காண்பரேல், — ஆடவர் பெண்மையை அவாவும் தோளினாய்!' என்று ஏற்கெனவே புருஷோத்தமனுடைய அழகிற்கு நெஞ்சைப் பறி கொடுத்தவரல்லவா? எனவே 'ஈது இவன்தன் வரலாறும் புய வலியும்' என்று முடித்தவர், ஜனகன் 'ஈது இவன்தன் வரலாறும் புயவலியும் பேரழகும்!' என்று உய்த்துணரும்படி அந்த அழகையும் சேர்த்தே குறிப்பிடுகிறார். குலப் பெருமையும் வில்லேற்றும் புய

வலிமையும் போதுமா? சீதையின் கன்னியுள்ளத்திற் காதலைப் பிறப்பிக்கும் சௌந்தரியமும் வேண்டுமல்லவா?

'வில்லும் காண்பார்!' என்று கம்பீரமாக அறிமுகப்படுத்திய விசுவாமித்திரர், காதலனுடைய வரலாறும் புயவலியும் இது என்று கம்பீரமாகக் கட்டியம் கூறி முழக்குகிறார்.

## 16. வந்தான்; கண்டான்; வென்றான்!

இராமனது பேரழகைக் கண்ணால் முகந்து பருகிய ஜனகனுக்கு அந்தப் புயவலியையும் விசுவாமித்திரர் காட்ட முயல்கிறானென்று சொல்லவேண்டும். அழகைப் 'பருக நோக்கி' யவன் புய வலியை ஊன்றி நோக்குகிறான். இப்படி இராமனது மகிமையை நோக்குகிறவன், அவன் பிறந்த சூரிய வமிசத்தின் மகிமையையும் விசுவாமித்திரரது வாக்கின் மகிமையால் பிரத்தியட்சமாக நோக்குகிறானென்றே சொல்லலாம். உடனே தன் மகள் தவஞ் செய்தவள் தான் என்ற எண்ணம் உண்டாகிறது.

ஆனால் 'மணமகளுக்கும் மணமகனுக்கு மிடையே சிவதனுசு கிடக்கிறதே!' என்பதை நினைத்ததும் பகீரென்கிறது.

'மாற்றம்யா துரைப்ப(து)?என் மாய விற்குநான்
தோற்றவா(று) எனமனம் துளங்கு கின்றதால் :
நோற்றனள் நங்கையும், நொய்தின் ஐயன்வில்
ஏற்றுமேல் இடர்க்கடல் ஏற்றும்!' என்றனன்.

[மாற்றம் - வார்த்தை; விடை. தோற்றவாறு - தோற்ற விதம். துளங்குகின்றது - நிலை கலங்குகின்றது. நோற்றனள் - தவஞ் செய்தனள். நொய்தின் - இலேசாக; விரைவாக. ஐயன் - (இங்கே) அழகனான சிறுவன்.]

'அந்த வில் அல்லவா இப்போது குறுக்கே வந்து நிற்கிறது?' என்று மனம் நடுங்குகிறதாம். தன் பெண்ணை 'எனக்குத் தரவேணும்! எனக்குத் தரவேணும்!' என்று அரசர்கள் வற்புறுத்தி நெருங்கிய காலத்தில், 'சிவதனுசை எடுத்து வளைத்து நாணேற்றிய வீரனே மணமகனாக உரியவன்' என்று ஜனகன் ஒரு நியமம் ஏற்படுத்தியிருந்தான். அப்படி வைத்திருந்த வில்லைத் தொட்டு

அசைப்பதற்கும் அரசர்களுக்கு முடியாமற் போயிற்றும். 'இனி இந்த வில்லின் மகிமையால் என் மகளுக்குத் தகுந்த புருஷன் கிடைப்பான்: இதுவே கந்யாசுல்கம்' என்று மகிழ்ந்திருந்தான். ஆனால் நாளடைவில் மகிழ்ச்சி கவலையாக மாறிவிட்டது, — 'கந்யா சுல்கம் சீதையை என்றும் கன்னிகையாகவே வைத்துவிடுமோ?' என்று.

இராமனைக் கண்டதும், வரலாறு கேட்டதும், அந்தக் கவலை நடுக்கமாக மாறிவிடுகிறது. 'வில்லும் காண்பார்!' என்று விசுவா மித்திரர் உறுதியாகச் சொன்ன அந்தச் சொல்லையும் மறந்து, 'நீ உருவ நோக்கையா!' என்று அவர் காட்டிய அந்தப் புயவலியையும் மறந்து, 'என் மாய வில்லுக்கு நான் தோற்றேன்!' என்று நடுங்குகிறான் ஒரு கணம். வில்லை 'மாயவில்' என்று எவ்வளவு மனப் புண்ணோடு குறிப்பிடுகிறான், பாருங்கள்!

ஆனால் அடுத்த கணத்திலே 'பெண்களிற் சிறந்தவளான என் பெண் ( நங்கை ) பாக்கியவதிதான்' என்கிறான். எப்படியானால் பாக்கியவதி? 'பாக்கியசாலியான இராமன் வில்லில் நாணேற்று வானானால், சீதையும் பாக்கியவதி; தவஞ் செய்தவள்!' என்கிறான். 'இராமன் நாணேற்றுவது உண்மையில், எங்களை யெல்லாம் துன்பக் கடலிலிருந்து கரையேற்றுவதாகும்' என்றும் சொல்லு கிறான்.

'நொய்தின் ஐயன்வில் ஏற்றுமேல்' என்று ஜனகன் கூறுவது கவனிக்கத் தக்கது. விரைவாகக் காரிய சித்தி பெறவேண்டு மென்ற விருப்பத்தோடு, அழகனான இந்தச் சிறுவன் இலேசாக ( அதிக சிரமமில்லாமலே ) வில்லை வளைத்து நாணேற்ற வேண்டு மென்ற விருப்பமும் தொனிக்கிறது ஜனகன் வார்த்தையிலே. ஜனகனும் இராமனைக் கண்டவுடனே அன்பு பூண்டு அந்த அழகைப் பருகி வெறி கொண்டவனல்லவா? சீதைக்காக வில் வளைப்பதற்கும் 'ஐயன்' வருந்துவதை மனம் சகிக்கவில்லை.

ஜனகன், 'வில்லைக் கொண்டு வாருங்கள்' என்று எதிர் நின்ற ஏவலாளரை நோக்கிக் கட்டளை யிடுகிறான். சிவதனுசு வந்து சேரும் வைபவத்தைப் பாருங்கள் :

உறுவலி அனைவரும் ஒத்த மேனியர்,
செறிமயிர்க் கல்லெனத் திரண்ட தோளினர்,
அறுபதி னுயிரர், அளவில் ஆற்றலர்,
தறிமடுத்(து) இடையிடைத் தண்டில் தாங்கினர் ;

[ உறுவலி - மிக்க வலிமை. செறி - நெருங்கிய. அளவில் - அளவிட முடியாத. ஆற்றலர் - வல்லமையுள்ளவர்கள். தறி - தூண். மடுத்து - சேர்த்து. தண்டில் - தண்டுகளிலே. ]

நெடுநில மகள்முது(கு) ஆற்ற, நின்றுயர்
தடநிமிர் வடவரை தானும் நாணுற,
இடமிலை உலகென வந்த(து) எங்கணும்,
கடல்புரை திருநகர் இரைத்துக் காணவே !

[ நெடு நிலமகள் - நீண்ட பூமிதேவி. முதுகு ஆற்ற - முதுகின் நோவை ஆற்றிக்கொள்ள. தடம் - பெருமை. வடவரை - மேருமலை. புரை - ஒத்துள்ள. இரைத்து - இரைச்சலிட்டு. ]

மிதிலா நகரவாசிகள் சமுத்திரம்போல் கோஷஞ் செய்து கொண்டு வந்து பார்க்கிறார்கள். 'இது வில்லோ ?' என்றுகூடச் சந்தேகப்படுகிறார்களாம். 'எதற்காக இதைக் கொண்டுவரச்சொன்னான் ?' என்று அதிசயிக்கிறார் சிலர். 'விதி செய்த தீமை !' என்று வருந்துகிறார் சிற்சிலர்.

மொய்த்தனர் இன்னணம் மொழிய, மன்னன்முன்
உய்த்தனர், நிலமுது(கு) உளுக்கிக் கீழுற
வைத்தனர் : 'வாங்குநர் யாவ ரோ ?' எனக்
கைத்தலம் விதிர்த்தனர் கண்ட வேந்தரே !

[ மொய்த்தனர் - மொய்த்திருந்த ஜனங்கள். இன்னணம் - இவ்வாறு. உய்த்தல் - கொண்டுபோதல். நில முதுகு - நிலமகளின் முதுகு. உளுக்கி - சுளுக்கி; நெளிந்து. கீழுற - குழிந்துபோம்படி. வாங்குநர் - வளைக்கப் போகிறவர். எனா - என்று சொல்லி. விதிர்த்தனர் - நடுங்கினர்; உதறினர். ]

வில் வெகுகாலமாக இருந்த இடத்திலே, நிலமகள் வலியெடுத்த தன் முதுகை ஆற்றிக் கொண்டாளாம்: இப்போது அதை வைத்த இடத்திலே நிலமகள் முதுகு சுளுக்கிக் கொண்டதாம். இப்படி வைக்கப்பட்ட வில்லை நோக்கிய வேந்தர்கள், 'இவ்வில்லை வளைக்கப் போகிறவர் யாவரோ?' என்று சொல்லி நடுக்கங்கொண்டு கையை உதறினார்களாம்.

வில்லைத் தருவித்த ஜனக வேந்தனே இராமனது கம்பீரமான அழகை நோக்கி, 'வேதனை தருகின்ற வில்லை நோக்கி'னான்; உடனே தன் மகளையும் நோக்கினானாம், மனக்கண் முன்னே. அந்த முகக்குறியால் அந்த மனத்தை நோக்கினான் புரோகிதனான சதானந்த முனிவனும் பளிச்சென்று.

**போதகம் அனையவன் பொலிவு நோக்கி,அவ்**
**வேதனை தருகின்ற வில்லை நோக்கித்தன்**
**மாதினை நோக்குவான் மனத்தை நோக்கிய**
**கோதமன் காதலன் கூறல் மேயினான்.**

[ போதகம் - யானைக்கன்று. மாது - பெண். கோதமன் காதலன் - கௌதம ரிஷியின் புதல்வனாகிய சதானந்த முனிவன். கூறல் மேயினான் - கூறத் தொடங்கினான். ]

அந்த அழகை நோக்கியதும், இவன்தான் சீதைக்கு ஏற்ற கணவனென்று தோன்றுகிறது: வில்லை நோக்கியதும், 'அந்த முரட்டுத் தொழில் எங்கே? இந்த ஸௌகுமார்யம் எங்கே? தகாது, தகாது!' என்று தோன்றுகிறது. இத்தகைய சிந்தனைகளையும் கவலைகளையும் அந்த மனத் தடுமாற்றத்தோடும், அவற்றை அன்புடனும் அனுதாபத்

துடனும் நோக்கிய சதானந்தனது மனநிலையோடும், எவ்வளவு இலகுவாகவும் வேகமாகவும் நம் மனக்கண்முன் கொண்டுவந்து விடுகிறான் கவிஞன்!

சதானந்தனும் விரைவாகவும் சுருக்கமாகவும் வில்லின் வரலாற்றைச் சொன்னான். தட்சன் உமாதேவியை அவமதித்தானென்று, சிவபெருமான் தன் அம்சத்தினால் வீரபத்திரக் கடவுளை உண்டாக்கி விட்டாராம். அவர் இந்த வில்லுடன் தட்சனுடைய யாக சாலை சேர்ந்ததும், படுவேகத்தோடு காரியங்கள் நடைபெற்றனவாம்.

**உக்கன பல்லொடு கரங்கள்; ஓடினர்,**
**புக்கனர் வானவர் புகாத சூழல்கள்;**
**தக்கன்நல் வேள்வியில் தழலும் ஆறின :**
**முக்கண்எண் தோளவன் முனிவும் ஆறினன்.**

[ உக்கன - கிழே சிந்தின. புகாத - (அதுவரையில்) புகுந்திராத, சூழல் - இடம். தழல் - யாகாக்கினிகள். முக்கண் எண்தோளவன் - மூன்று கண்களையும் எட்டுத் தோள்களையுமுடைய சிவபெருமான். முனிவு - கோபம். ]

வேள்வித்தீ ஆறக் கோபத்தீயும் ஆறி விட்டது. பிறகு சிவ பெருமான் இந்த வில்லை எய்யாமல் வெறுமனே தாம் கையில் வைத்திருந்தாலும், தேவர்கள் நடுங்குவதைப் பார்த்து அவர்கள் பிழைத்திருக்கவேண்டுமே யென்று நினைத்து, இந்த ஜனக குலத்தில் தோன்றிய பூர்விக வேந்தன் ஒருவனிடம் வைத்துப் போய் விட்டாராம். இது பரம்பரையாக இவ்வரசனுக்குக் கிடைத்ததென்று குறிப்பாக உணர்த்திச் சதானந்தன், 'இனி இவ்வில்லை வளைப்பவன் மணத்தற்கு உரியவளான சீதையின் வரலாறும் கேளும்' என்று விசுவாமித்திரருக்குச் சொல்லத்தொடங்கினான்.

மினேர்வா என்ற அறிவுத் தெய்வம் வியாழ பகவானது சிரத்திலிருந்து பூரண உருவோடும் அழகோடும் பிறந்ததென்பது

ஐரோப்பியர் பழங்கதை. அழகுத் தெய்வமாகிய சீதை பூமிதேவியின் கர்ப்பத்திலிருந்து உருவிலும் திருவிலும் பூரணத் தன்மையோடு தோன்றினுள் என்பது நம்மவர்களின் இதிகாசம்.

வேள்வி செய்வதற்காக நிலத்தை உழுதார்களாம், வயிரக் கொழுவையுடைய பொற்கலப்பை கொண்டு. அந்தக் கொழு முனையிலே உதிக்கின்ற சீதையைப் பாருங்கள்:

உழுகின்ற கொழுமுகத்தின், உதிக்கின்ற கதிரினெளி
பொழிகின்ற புவிமடந்தை திருவெளிப்பட் டெனப்புணரி
எழுகின்ற தெள்ளமுதோ(டு) எழுந்தவளும் இழிந்தொதுங்கித்
தொழுகின்ற நன்னலத்துப் பெண்ணரசி தோன்றினுள்.

[முகத்தின் - முனையிலே. உதிக்கின்ற கதிர் - உதய சூரியன். புவி மடந்தை திரு - பூமிதேவியின் ஐசுவரியம். வெளிப்பட்டென - வெளிப் பட்டாற்போல. புணரி - கடல். இழிந்து - இறங்கி. நன்னலம் - மிக்க அழகு.]

கொழுமுகத்திலே திடீரென்று சூரியோதயமானதுபோல் தோன்றுகிறது! உதய சூரியன்போல் ஒளி பொழிகிறது உதய கன்னியின் மேனி. பூமியின் கர்ப்பத்திலுள்ள ஐசுவரிய மெல்லாம் — புவிமடந்தையின் கருவாகவுள்ள வளமும் வனப்பும் — ஓர் உருவமாய்ச் சமைந்து வெளிப்பட்டாற்போல வெளிப்படு கிருள் சீதை.

இவள் தோன்றியபின், உலகிலே ஒரு பெரு மாறுதல் — ஒரு புரட்சி — ஏற்பட்டதென்று கவிஞன் கற்பிக்கிருன். அலைகடலில் அமிர்தத்தோடு பிறந்த இலட்சுமிதேவியே பெண்ணரசியாகத் தனி முடி சூடி, அன்று தொட்டு இன்றளவும் தனியரசு புரிந்து வந்தாள். ஆனல் நிலம் தந்த திரு, நீர் தந்த திருவை எளிதில் வென்றுவிட்டது. சௌந்தரிய சிம்மாசனத்திலே இறுமாந்து வீற்றிருந்த மகாலட்சுமி சீதையைக் கண்டதும், அவளுடைய அழகுக்குத் தோற்றுத் தன்

சிம்மாசனத்திலிருந்து உடனே இறங்கி விடுகிருளாம். படிக்கட்டிலே அடிவைத்துச் சீதை ஏறத் தொடங்கியதும், இறங்கி வந்து கொண்டிருந்த அழகு - ராணி ஒதுங்கி வழிவிடுகிருளாம் : வழிவிட்டு வழிபட்டு நிற்கிருளாம். சீதை அனுயாசமாகச் சிங்காதனம் பொலிய வீற்றிருக்கிருள் !

இவ்வாறு நாடகத் திறமையோடு, நாதம் கலந்த வெண்சொற் கொண்டு புதை பொருள் காட்டும் சித்திரம் கம்பனது சிறப்பியல்பு. ஜீவ மாணிக்கமாகிய சீதையை வருணிக்கும் இப்பாட்டையும் கவியுலகின் மாணிக்கங்களில் ஒன்ருக மதிக்கலாம். காவிய நாயகியின் பிறப்பு, கம்பன் கவியுள்ளத்திலிருந்து எவ்வாறு பண்ணழகும் பொருளழகும் செறிந்த 'செஞ்சொற் கவியின்பம்' பிறந்திருத்தல் கூடுமென்பதையும் நமக்கு ஒருவாறு நினைப்பூட்டுகிறது.

இவ்விதமாகச் சீதையின் ரூப சௌந்தரியத்தை வருணிக்கும் சதானந்தர் அடுத்த பாட்டிலேயே, ரூபசௌந்தரியத்தோடு குண சௌந்தரியமும் ஒருங்கே அமைந்து சீதையை அழகின் தவப் பேருகக் காட்டுகிறதென்கிருர். உருவ அழகு மட்டும் உண்மையழகாகுமோ ? குண அழகை உயிர்நிலையாகக் கொண்ட அழகன்ருே அழகு ?

**குணங்களைஎன் கூறுவது ? கொம்பினைச்சேர்ந்(து) அவைஉய்யப்**
**பிணங்குவன : அழகிவளைத் தவஞ்செய்து பெற்றதுகாண் !**
**கணங்குழையாள் தோன்றியபின் கதிர்வானிற் கங்கையெனும்**
**அணங்(கு)இழியப் பொலிவிழந்த ஆறொத்தார் வேறுற்ருர்**

[ கொம்பினை - பூங்கொம்பு போன்ற சீதையை, பிணங்குவன - மாறுபடுகின்றன. கணங்குழை - திரண்ட குழையென்னும் காதணி. கதிர்வான் - ஒளியையுடைய ஆகாயம். அணங்கு - தெய்வப் பெண். இழிய - இறங்க. பொலிவு - அழகு ; மலர்ச்சி. ஆறொத்தார் - ஆறுகளை ஒத்தார். வேறுற்ருர் - மற்றை மாதர் அனைவரும். ]

என்கிருர் சதானந்தர்.

'இந்தப் பூங்கொம்பைச் சேர்ந்து வாழ்வோம்!' என்று குண சௌந்தரியங்களெல்லாம் 'நான் முந்தி! நான் முந்தி!' என்பதாகப் போட்டி போட்டுக்கொண்டு வந்து விழுகின்றனவாம். இப்படிக் குண சௌந்தரியங்கள் பொருந்தி யிருப்பதால்தான், 'அழகிவளைத் தவஞ்செய்து பெற்றதுகாண்!' என்கிறார் சதானந்தர். ரூப சௌந்தரியமும் குண சௌந்தரியமும் ஒன்றுபட்டு இசைந்தொளிரும் பேரழகின் பேறு, கம்பன் காவிய நாயகியாகப் பிறக்கிறது.

கடலிலே பிறந்த அந்தத் திருமகளை விண்ணரசர் எல்லாரும் காதலித்தார்களாம்: நிலத்திலே பிறந்த இந்தத் திருமகளை மண்ணரசர் எல்லாரும் காதலித்தார்களாம் :

சித்திரம்இங்(கு) இதுஒப்ப தெங்குண்டு ? செய்வினையால்
வித்தகமும், விதிவசமும் வெவ்வேறே புறங்கிடப்ப,
அத்திருவை அமரர்குலம் ஆதரித்தா ரெனஅறிநு !
இத்திருவை நிலவேந்த ரெல்லாரும் காதலித்தார்.

[வித்தகம் - சாமர்த்தியம்;(இங்கே) வில்வித்தையிலுள்ள சாமர்த்தியம்.]

நிலவேந்தர் எல்லாரும் ஆடம்பரமாக வந்து மணம் பேசத் தொடங்கியதும் சிவதனுசைக் காட்டி, 'இதை வளைத்தவனே மணமகனுவான்' என்று உறுதியாகச் சொல்லிவிட்டார்களல்லவா? அவர்களால் வில்லையும் வளைக்க முடியவில்லை; சீதையையும் மறக்க முடியவில்லை ! எனவே 'பெண்ணைத் தருகிறாயா? அல்லது சண்டைக்கு வருகிறாயா?' என்று வீரகர்ஜனை செய்துகொண்டு ஜனகனோடு போர் செய்யத் தொடங்கினார்களாம் :

வல்வில்லுக்(கு) ஆற்றார்கள், மாரவேள் வளைகரும்பின்
மெல்வில்லுக்(கு) ஆற்றாராய்த் தாம்எம்மை விளிவுற்றார்,
கல்வில்லோ(டு) உலகளித்த கனங்குழையைத் தருகென்று,
சொல்வில்லால் உலகளிப்பாய் ! போர்செய்யத் தொடங்கினார்.

[ வல்வில் - வலிய வில். ஆற்ருர்கள் - வலிமையற்றவர்கள். மாரவேள்-மன்மதன். வளை - வளைந்த. மெல்வில் - மெல்லிய வில். விளிவுற்ருர் - வீரகர்ஜனை செய்தார்கள். கல்வில் - மலை போன்ற வில். உலகளித்த - உலகம் தந்த. கணங்குழை - சீதை. சொல்வில்லால் உலகளிப்பாய் - சொல்லாகிய வில்லைக்கொண்டு உலகத்தைப் பாதுகாக்கும் விசுவா மித்திரனே. ]

அந்த அரசர்கள் போரிலும் தோற்றுப் போனுர்கள். அன்று முதல் இன்றளவும் இந்த வில்லருகே யாரும் தலைகாட்டத் துணிந்த தில்லையாம். அன்று போய் ஒளித்துக்கொண்ட அரசர்கள் திரும்பி வரவு மில்லையாம்; வெளியே தலை காட்டித் திரிந்தது மில்லையாம்.

'அன்றுமுதல் இன்றளவும் ஆருமிந்தச் சிலையருகு
சென்றுமிலர்; போயொளித்த தேர்வேந்தர் திரிந்துமிலர்;
"என்றும்இனி மணமில்லை!" யென்றிருந்தோம்: இவன்ஏற்றின்
நன்று;மலர்க் குழற்சீதை நலம்பழுதா கா'தென்ருன்.

[ சிலை - வில். ஏற்றின் - (வில்லை நாண்) ஏற்றினுல். நலம் - அழகு. ]

இனி என்றைக்கும் சீதை மணமில்லாமல் காலம் கழிக்க வேண்டியிருக்குமென்றுதான் எண்ணிக் கொண்டிருந்தார்களாம். இந்த நிலையில் 'இராமன் நாணேற்றினுல் நல்லது: சீதையின் அழகு பழுதாகாது' என்று கூறும் சதானந்தர், 'ஐயன்வில் ஏற்று மேல், இடர்க்கடல் ஏற்றும்' என்றும், 'நோற்றனள் நங்கையும்' என்றும், ஜனகன் சொன்னதை ஒட்டிப் பேசுகிருர். இவர் வாக்கி லும் ஜனகன் வாக்கிலே தொனித்த சந்தேகம் தொனிக்கிறது: சீதையின் அதிர்ஷ்டத்தை முன்னிட்டாவது இராமன் வெற்றி பெற வேண்டுமென்ற குறிப்பும் தொனிக்கிறது.

சதானந்த முனிவர் இப்படிச் சொல்லி முடித்ததும், 'விசுவா மித்திர முனிவர் என்ன செய்கிருர்? இராமன் உடனே என்ன

செய்கிறான்?' என்று பாருங்கள் — ஆம், கவிஞனுடைய ஜாலக் கண்ணாடி மூலமாக.

நினைந்தமுனி பகர்ந்ததெல்லாம் நெறிஉன்னி, அருந்தவனும்
புனைந்தசடை முடிதுளக்கிப் போரேற்றின் முகம்பார்த்தான் :
வனைந்தனைய திருமேனி வள்ளலும்,அம் மாதவத்தோன்
நினைந்ததனை நினைந்(து)அந்த நெடுஞ்சிலையை நோக்கினான்.

[ நினைந்த முனி - நினைந்து அம்முனி. நெறி உன்னி - முறையே ஆலோசித்து. புனைந்த - அணியாகக் கொண்ட. துளக்கி - அசைத்து. போரேறு - போரில் வல்ல ஆண் சிங்கம் போன்ற இராமன். வனைந்தனைய - சித்திரத்தில் அலங்கரித்தாற்போன்ற. ]

சதானந்தர் ஆலோசித்துச் சொன்னதை யெல்லாம் முறையே ஆலோசித்துப் பார்த்தாராம் விசுவாமித்திரர். ஆனால் ஒன்றும் பதில் சொல்லவில்லை. ஜனகனுடைய தடுமாற்றத்திற்கும், சதானந்தருடைய சந்தேகத்திற்கும் ஒரே மருந்து இராமன் செயல்தான் என்று கருதுகிறார். சீதையின் அதிர்ஷ்டத்தைக் காட்டிலும் அழகைக் காட்டிலும், இராமன் அழகும் பேராண்மையுமே இவருள்ளத்தை வசீகரித்திருக்கின்றன. தவராஜாவாகிய முனிவர் தமது தவக்கிரீடமான ஜடைமுடியைக் கம்பீரமாக அசைத்துக்கொண்டு இராமன் முகத்தைப் பார்க்கிறார். அவனிடத்திலும் ஒன்றும் சொல்லவில்லை,

இராமன் போரில் வல்ல சிங்கம்போல் கம்பீரமாக இருக்கிறான். எனினும் அந்தப் பேராண்மை இப்போது நீறு பூத்த நெருப்பைப்போல் பேரழகில் மறைந்து ஒளிர்கிறது. அழகைத் தொட்டுத் தொட்டு வனைந்த சித்திரம்போலிருக்கிறது திருமேனி. 'வனைந்தனைய திருமேனி வள்ளல்' என்று வசீகரமான அந்த அழகையும் வண்மையையும் சுட்டிக் காட்டுகிறான் கவிஞன். 'என்றும் இனி மணமில்லை!' என்றிருந்த சீதையின் குறைதீர, வண்மை பொழியும் அழகனான வள்ளல் அல்லவா?

விசுவாமித்திரர் இராமனைப் பார்க்க, இராமன் வில்லைப் பார்க்கிறான். 'மாதவத்தோன் நினைந்த'தை யெல்லாம் அந்தப் பார்வையிலிருந்தே கிரகித்துக்கொள்ளுகிறான். முனிவர் நினைப்பு இராமன் நினைப்பாகிவிடுகிறது. இனி நினைப்பின் வேகத்திலேயே நடைபெறப் போகும் செயலைக் கவனிப்போம்.

பொழிந்தநெய் ஆகுதி வாய்வழி பொங்கி
எழுந்த கொழுங்கன லென்ன எழுந்தான் :
'அழிந்தது வில்'லென விண்ணவர் ஆர்த்தார் ;
மொழிந்தனர் ஆசிகள் முப்பகை வென்றார்.

[ வாய் - இடம். ஆர்த்தார் - ஆரவாரஞ் செய்தார்கள். முப்பகை வென்றார் - (காமம், வெகுளி, மயக்கம் என்ற) மூன்று பகையையும் வென்ற முனிவர்கள். ]

இராமன் வில்லை நோக்கி எழுந்ததற்கு உபமானத்தைப் பார்த்தீர்களா? கவிஞன் வெகு தூரம் போகவில்லை. ஜனகன் ஆதியர் யாகத்தை முடித்துவிட்டு இராஜ மாளிகைக்கு வந்திருக்கிறார்கள்: அந்த யாக சாலையிலிருந்தே உபமானம் கிடைத்துவிட்டது. ஓம குண்டத்திலே நெய்யை ஆகுதியாகப் பொழியும்போது, அந்த நெய் விழுந்த வழியே ஓமத்தீ ஓங்கிக் கொழுத்து எழும்புகிறதல்லவா? அப்படி எழுகிறான் இராமன். அவனுக்கு வன்மையோடு நன்மையும் உடைய ஓமத் தீயை உபமானமாக்கும் சாதுரியம் கவனிக்கத் தக்கது.

ஏற்கெனவே காதலியைக் கண்டவன் : அந்தக் காதல், வீரத்தை விசிறி ஜ்வாலை செய்கிறது. நெய் பொழிந்த நெருப்பாகப் பொங்கியெழும் வீரம் அகமும் புறமும் நிறைந்து ஜொலிக்கிறது. இத்தகைய வீராவேசத்தோடு இராமன் எழுந்த தோற்றமே வெற்றியின் தோற்றமென்று தேவர்கள் கோஷிக்கிறார்கள். மகாத்மாக்களான முனிவர்கள் ஆசி கூறுகிறார்கள்.

அப்போது இராமனைக் கண்ட மாதர்கள் தமக்குள்ளே பலவாறு பேசிக்கொள்ளுகிறார்கள். சிலர் வில்லின் வலிமையைப் பார்த்துப் பிரமித்துப் போகிறார்கள்.

காணும் நெடுஞ்சிலை கால்வலி தென்பார்;
நாணுடை நங்கை நலங்கிளர் செங்கேழ்ப்
பாணி இவன்படர் செங்கை படாதேல்,
வாணுதல் நங்கையும் வாழ்வில ளென்பார்!

[கால் வலிது - அடி வலிமையுடையது. நாணுடை - நாணத்தையுடைய. நலங்கிளர் - அழகு விளங்குகிற. செங்கேழ்ப் பாணி - செந்நிறமுள்ள கை. படர் - பரவிய. வாணுதல் - வாள் நுதல் - ஒளியுள்ள நெற்றி.]

'இவ்வளவு வலிமையுள்ள வில்லை இராமன் வளைத்து விடுவானா?' என்ற சந்தேகமுடையவர்கள் இம்மாதர்கள். எனவே இராமன் அழகைக் கண்டு, 'இவன் கை அவள் கையில் படாமற் போனால் (இராமன் சீதையைப் பாணிக்கிரகணம் செய்யாமற் போனால்), 'சீதைக்கு வாழ்வு இல்லை!' என்கிறார்கள். 'நங்கையும் வாழ்விலள்' என்று கூறுவதால் 'இராமனும் வாழ்விலன்!' என்பது குறிப்பு.

இன்னும் சில மாதர்கள் என்ன செய்கிறார்கள்? என்ன சொல்லுகிறார்கள்? பாருங்கள்.

கரங்கள் குவித்(து)இரு கண்கள் பனிப்ப,
'இருங்களி(று) இச்சிலை ஏற்றில னாயின்,
நரந்த நறைக்குழல் நங்கையும் நாமும்
முருங்கெரி யிற்புக மூழ்குது' மென்பார்.

[பனிப்ப - நீர் துளிக்க. இருங்களிறு - பெரிய யானைபோன்ற இராமன். நரந்தம் - கஸ்தூரி. நறை - மணம். முருங்கெரி - அழியச் செய்யும் நெருப்பு.]

இரண்டு கைகளையும் குவித்தவண்ணம் சொல்லிக் கொள்ளு கிறார்களாம், 'இவன் இந்த வில்லை வளையானாயின், சீதையும் நாமும் தீயில் முழுகுவோம்!' என்று. இப்படி அந்த மாதர்கள் இஷ்ட தேவதைகளை முன்னிட்டுப் பிரதிக்ஞை செய்து கொள்ளுகிறார்கள் என்பது குறிப்பு.

வேறு சில மாதர்,

'வள்ளல் மனத்தை மகிழ்ந்தன னென்றால்,
கொள்ளென முன்பு கொடுப்பதை யல்லால்,
வெள்ளம் அணைத்தவன் வில்லை யெடுத்(து),இப்
பிள்ளைமுன் இட்டது பேதைமை!' யென்பார்.

[ வெள்ளம் அணைத்தவன் - கங்கை வெள்ளத்தைச் (சடைமீது), அணை போட்டு நிறுத்தியதுபோல், நிற்கச் செய்த சிவபெருமான். ]

இன்னும் சிலர், ஜனக மன்னனோடு விசுவாமித்திர முனிவரை யும் சேர்த்துப் பழிக்கிறார்களாம்.

ஞான முனிக்கொரு நாணிலை யென்பார்;
கோனிவ னிற்கொடி யோனிலை யென்பார்;
மானவன் இச்சிலை கால்வளை யானேல்,
பீனத னத்தவள் பேறிலி யென்பார்.

[ ஞானமுனி - விசுவாமித்திர முனிவன். மானவன் - மனுமரபில் உதித்த இராமன். கால் - (இங்கே) முனைகள். பீனம் - பருமை. பீனதனத் தவள் - சீதை. பேறு - நல்ல அதிர்ஷ்டம். ]

'ஞானமுனி' யென்பதால், விசுவாமித்திரர் உலக நடை அறியாத தத்துவ ஞானி யென்பது குறிப்பு. இராஜ ரிஷியாகிய ஜனகனைக் குறித்தோ, 'இவனைக் காட்டிலும் கொடிய அரசனில்லை!' யென்று சித்தாந்தஞ் செய்து விடுகிறார்கள். இவ்வளவு தூரம் வசிகரித்து விடுகிறது இராமனது பேரழகு.

## வந்தான்; கண்டான்; வென்றான்!

இப்படி யெல்லாம் இவர்கள் சொல்லிக்கொண்டிருக்கையில், இராமன் வில்லை நோக்கி நடந்து செல்லுகிறான்.

தோகையர் இன்னன சொல்லிட, நல்லோர்
ஓகை விளம்பிட, உம்பர் உவப்ப,
மாக மடங்கலும், மால்விடை யும்,பொன்
நாகமும், நாகமும் நாண நடந்தான்.

[ தோகையர் - பெண்கள். இன்னன - இவை போன்றவை. ஓகை - மகிழ்ச்சி. உம்பர் - தேவர். மாக மடங்கல் - மிகச் சிறந்த சிங்கம். மால் விடை - பெரிய ரிஷபம். நாகம் - (1) மலை; (2) யானை. ]

'கடந்தரு மாமதக் களிநல் யானைபோல் — நடந்தது கிடந்த தென் உள்ளம் நண்ணியே!' என்று சீதை ஏங்கி ஈடுபடும்படி அவள் மனத்திற்கிடந்த அந்த நடை யழகு, இப்போது எவ்வளவு உத்ஸாகத்திற்கும் கவலைக்கும் மகிழ்ச்சியுரைகளுக்குமிடையே எவ்வளவு கம்பீரமாகக்காண்கிறது!

வில்லோ மகாமேரு மலைபோலப் பயங்கரமாகக் காண்கிறது. ஆனால் காதலன் கண்களில் அது அவ்வாறு காணப்படவில்லையாம்.

ஆடக மாமலை அன்னது தன்னைத்
தேடரு மாமணி சீதையெ னும்பொற்
சூடக வால்வளை சூட்டிட, நீட்டும்
ஏடவிழ் மாலையி தென்ன எடுத்தான்.

[ ஆடகமாமலை - பெரிய பொன்மலை; மகாமேருமலை தேடரு மாமணி - தேடிப் பெறுதற்கு அருமையான சிறந்த இரத்தினம். பொற்சூடகம் - பொன்னால் செய்த ஒருவகைக் கையணி. வால்வளை - வெண்ணிறமான சங்குவளை. ஏடு அவிழ் - இதழ்கள் மலர்கின்ற ]

பார்ப்பவர்களுக்கெல்லாம் பயங்கரமாய்த் தோன்றும் மலை போன்ற பெரிய வில், காதல் நிறைந்த இராமன் கண்களுக்கு மாத்திரம் காதலிக்குச் சூட்ட வைத்திருக்கும் மணமாலையாகிய பூமாலை

போலவே காண்கிறது. எனவே, காதலன் அந்த வில்லை மிக இலேசாக எடுக்கிறான்.

'தேடரு மாமணி' என்று சீதையை மதிக்கும் காதல், எவ்வளவு எளிதாகவும் குதூகலமாகவும் விரைவாகவும் வில்லை முறித்து வெற்றி சூடுகிறது!

> தடுத்திமை யாமல் இருந்தவர், தாளில்
> மடுத்ததும், நாண்நுதி வைத்ததும் நோக்கார்;
> கடுப்பினில் யாரும்அ றிந்திலர்: கையால்
> எடுத்தது கண்டனர், இற்றது கேட்டார்!

[ தடுத்து - தடை செய்து. தாள் - கால். மடுத்ததும் - (மிதித்து) அடக்கிக் கொண்டதும். நுதி - முனை. கடுப்பு - விரைவு. ]

இராமனது பாதம் — ஆம், அந்தப் பெருவிரல், — வில்லின் ஒரு முனையில் பட்ட மாத்திரத்திலே மற்றொரு முனை தானே வளைந்து வந்ததென்று கருதும்படி, அவ்வளவு விரைவாக இராமன் நாணேற்றப் பார்க்கிறான். ஜனங்கள் கண் கொட்டாமல் ஆச்சரியமாய்ப் பார்த்துக் கொண்டேயிருக்கிறார்கள், 'ஒவ்வொரு செயலையும் இம்மியும் விடாது பார்க்கவேணும்' என்ற ஆசையோடு. 'தடுத்து இமையாமல் இருந்தவர்' (இமைக்கிற இமையை இமைக்கவொட்டாமல் தடுத்து இருந்தவர்) என்கிறான் கவி. எனினும் அவர்கள் இராமன் வில்லை வளைத்து நாண் பூட்ட வைத்ததைக் காணவில்லையாம். அவன் வில்லை எடுத்ததைக் கண்டார்கள்; உடனே ஒடிந்த சப்தத்தையும் கேட்டார்கள். 'எடுத்தது கண்டனர்; இற்றது கேட்டார்!'—அவ்வளவுதான்.

என்ன வேகமான, அனுயாசமான, வெற்றி! எவ்வளவு வேகமாகவும் அனுயாசமாகவும் சமத்காரமாகவும் இந்தக் காட்சியைக் காட்டுகிறான் கவிஞன், — ஏதோ ஒரு செப்படி வித்தைசெய்து காட்டுவதுபோலே! நாணேற்றுவதற்கு முன் வில் இற்றது குறிக்க, 'நாண் வைத்ததும்' என்கிறான். இப்படி இராமன் வில் இறுத்த வெற்றி, காதலின் கன்னி வெற்றியே என்பது குறிப்பு.

வில் முறிந்த அந்தப் பேரோசையை அங்கேயிருந்த ஜனங்கள் மட்டுமா கேட்டார்கள் ?

'ஆரிடைப் புகுதும் நா'மென்(று) அமரர்கள், 'கமலத் தோன்தன்
பேருடை அண்ட கோளம் பிளந்ததாம் !' என்ன நைந்தார் :
பாரிடை உற்ற தன்மை பகர்வதென் ? பாரைத் தாங்கி
வேரெனக் கிடந்த நாகம் இடியென வெருவிற் றன்றே !

[ புகுதும் - புகுவோம். கமலத்தோன் - பிரமதேவன். பேருடை - பெருமை பெற்ற. பார் - பூமி. நாகம் - (இங்கே) ஆதிசேஷன். வெருவிற்று - மிகவும் பயமடைந்தது. ]

சொர்க்க மத்திய பாதலம் என்ற மூவுலகத்தும் சென்று இடித்த இந்த இடி முதல்முதல் பயங்கரமா யிருந்தபோதிலும், 'சீதா கல்யாணம் இனிது நிறைவேறும்' என்று விரைவில் எல்லாரையும் குதூகலிக்கச் செய்துவிட்டதாம். இந்த மங்களகரமான இடிக்குப் பின் பெய்யும் மங்களகரமான மழையைத்தான் பாருங்கள் !

பூமழை சொரிந்தார் விண்ணோர் ; பொன்மழை பொழிந்த மேகம் ;
பாமமாக் கடல்க ளெல்லாம் பன்மணி தூவி ஆர்த்த !
கோமுனிக் கணங்க ளெல்லாம் கூறின ஆசி : கொற்ற
நாமவேற் சனகன் 'இன்றென் நல்வினை பயந்த' தென்றான்.

[ பாமம் - பரப்பு. ஆர்த்த - ஆரவாரித்த. கோமுனிக் கணம் - சிறந்த முனிவர்களின் கூட்டம். கொற்றம் - வெற்றி. நாம வேல் - அச்சம் தரும் வேல். பயந்தது - பலித்தது. ]

உலகமெங்கும் ஒரே குதூகலம். தேவர்கள் பூ மழை பொழிய, மேகம் பொன் மழை பொழிகிறதாம். கடல்களெல்லாம் சந்தோஷ ஆரவாரஞ் செய்து பலவகை இரத்தினங்களையும் அலைக் கைகளால் வாரி வாரி இறைக்கின்றனவாம். முனிவர் கூட்டங்களோ ஆசிகளைப் பொழிகின்றன.

இத்தகைய மங்கள கோஷங்களுக்கிடையே, ஜனகமன்னன் 'இன்றுதான் என் நல்வினை பலித்தது!' என்று குதூகலமடைந்தான். 'குதூகலம்' என்று சொன்னால் போதுமா? 'மாற்றம்யா(து) உரைப்ப(து)? என் மாய விற்குநான் தோற்றவா(று)' என்று நடுங்கிய அந்த உள்ளத்தில், சந்தோஷம் சமுத்திரம் பொங்குவதுபோல் பொங்கி யிருக்குமல்லவா?

ஒரே சந்தோஷ சமுத்திரமாய்க் காண்கிறது நகரமெல்லாம் :

மாலையும் இழையும் சாந்தும் சுண்ணமும் வாச நெய்யும்
வேலைவெண் முத்தும் பொன்னும் காசும்நுண் துகிலும் விசிப்
பால்வளை அமிழ்த ளாய பல்லியம் துவைப்ப, முந்நீர்
ஓல்கிளர்ந்(து) உவாஉற் றென்ன ஒலிநகர் கிளர்ந்த தன்றே.

[ இழை - ஆபரணம். சாந்து - சந்தனம். சுண்ணம் - நறுமணப்பொடி. வாச நெய் - ஒருவகை வாசனைத் தைலம். வேலை - சமுத்திரம். காசு - இரத்தினம். நுண் துகில் - நுண்ணிய ஆடை. பால் வளை - வெண்ணிறமுள்ள சங்கு. அமிழ்தளாய - அமிர்தம் கலந்த. பல்லியம் - பல வகை வாத்தியங்கள். துவைப்ப - ஒலிக்க. முந்நீர் - சமுத்திரம். ஓல் - ஒலி. கிளர்ந்து - மிகுந்து. உவா - பௌர்ணிமை, நிறைமதி. ]

வெற்றிச் சங்குகள் முழங்க, கீதவாத்தியங்கள் அமுதம்போல் இன்னிசை பொழிய, நகரவாசிகள், பூமாலை ஆபரணம் வாசனைப் பண்டம் வெண்முத்து இரத்தினம் ஆடை என்றெல்லாம் வித்தியாசம் பாராமல் வாரி வாரி வழங்குகிறார்கள் ; ஆனந்த கோஷஞ் செய்கிறார்கள்.

ஆடவரைக் காட்டிலும் பெண்களுக்கு அதிகமான குதூகலம் — கொண்டாட்டம்.

நல்லியல் மகர வீணைத் தேனுக, நகையும் தோடும்
வில்லிட வாளும் வீச, வேல்கிடந் தனைய நாட்டத்(து)

எல்லியல் மதியம் அன்ன முகத்தியர், எழிலி தோன்றச்
சொல்லிய பருவம் நோக்கும் தோகையின் ஆடி ஞரே.

[ நல் இயல் - நல்ல தன்மை. வீணைத் தேன் - வீணுகானமாகிய தேன். உக - சிந்த. நகை - (இங்கே) புன்னகை. தோடு - காதணி. வில், வாள் - (இங்கே) ஒளி விசேஷங்கள். வேல் கிடந்தனைய நாட்டம் - வேல் கிடந்தாற் போன்ற கண்கள். எல் - இரவு. மதியம் - சந்திரன். எழிலி - மேகம். பருவம் - (இங்கே) கார்காலம். தோகையின் - மயில்போல். ]

மேகம் கண்டு மயிலாடுவது போல், வில் முறிந்த ஓசை கேட்டுப் பெண்கள் ஆடுகிருர்கள். அப்போது அவர்கள் புன்னகை வில்லிடு வதுபோல் பிரகாசிக்க, காதிலுள்ள பொன்னகை வாள் வீசுவது போல் விட்டுவிட்டுப் பிரகாசிக்கிறதாம். வில் முறிந்த ஓசை கேட்ப தற்குமுன், சில பெண்கள் கணவரோடு ஊடல் கொண்டிருந்தார்க ளாம் : மை தீட்டிய கண்கள் கோபத்தால் சிவந்திருந்தனவாம். இந்த ஓசை கேட்டதும் அவர்கள் ஊடல் நீங்கிக் கணவரைத் தழுவிக் கொள்கிருர்களாம்.

எங்கே பார்த்தாலும் ஆடல்களும் பாடல்களும் கீத வாத்திய விநோதங்களுமாயிருக்கின்றன.

வயிரியர் மதுர கீதம், மங்கையர் அமுத கீதம்,
செயிரியர் மகர யாழின் தேம்பிழி தெய்வ கீதம்,
பயிர்கிளை வேயின் கீதம் என்றிவை பருகி விண்ஞேர்,
உயிருடை உடம்பு மெல்லாம் ஓவியம் ஒப்ப நின்ருர்.

[ வயிரியர் - கூத்தர். செயிரியர் - பாணர். மகர யாழ் - மகரமீன் வடிவமுள்ளதும், பத்தொன்பது நரம்புகள் கொண்டதுமான வீணைக்கருவி. தேம்பிழி - இனிமை சொரிகிற. பயிர் - இசைக்கின்ற. கிளை வேய் - ஒரு வகையான புல்லாங்குழல். ஓவியம் - சித்திரம். ]

வில்லிறுத்த வெற்றி, கூத்தர்களின் கூத்தை மிகவும் சுவாரஸ்ய மாக்குவதோடு அவர்கள் கீதத்திற்கும் விசேஷ மதுரம் தருகிறது ;

மங்கையரின் கீதத்தையோ அமுதமாக்கி விடுகிறது. இந்த வெற்றியால், பாணர்களின் யாழிசை தெய்வகீதமாக உயர்கிறது. இத்தகைய கீதங்களையும் புல்லாங்குழலின் இசை யமுதத்தையும் பருகித் தேவர்கள், எழுதிவைத்த சித்திரங்கள்போல நின்று கொண்டிருக்கிறார்களாம். வில்லிறுத்த வெற்றி கலைகளுக்கும் வெற்றியாகிவிட்டது!

அந்த மகத்தான குதூகலத்திலே, விண்ணும் மண்ணும் தழுவிக் கொள்ளுகின்றன !

ஐயன்வில் இறுத்த ஆற்றல் காணிய, அமரர் நாட்டுத்
தையலர் இழிந்து, பாரின் மகளிரைத் தழுவிக் கொண்டார் ;
செய்கையின், வடிவின், ஆடல் பாடலின், தெளிதல் தேற்றார் :
மையரி நெடுங்கண் நோக்கி இமைத்தலும், மயங்கி நின்றார்.

[ காணிய - காணும் பொருட்டு. இழிந்து - இறங்கி. தெளிதல் தேற்றார் - (வித்தியாசம்) தெளிய முடியாதவர்களாகி. மை அரி நெடுங்கண் - மையுண்டு செவ்வரி படர்ந்து நீண்ட கண்கள். ]

வில்லிறுத்த விஜய சௌந்தரியத்தைக் காணும்பொருட்டு, தேவலோகத்துப் பெண்கள் வானத்திலிருந்து இறங்கி வந்தார்களாம். வந்தவர்கள் உவகை மிகுதியால், பூலோகத்துப் பெண்களைத் தழுவிக் கொள்ளுகிறார்களாம். சகோதரிகளென்றா? தம்மவர்களென்றே தழுவிக் கொள்ளுகிறார்கள் ! அழகிலும் வித்தியாசம் தெரியவில்லை ; செய்கையிலும் தெரியவில்லை : ஆடல் பாடல்களினாலும் கண்டு பிடிக்கமுடியவில்லையாம். கண் இமைத்ததும், 'என்ன புதுமையடீ !' என்று மயங்கி நிற்கிறார்களாம்.

விண்ணும் மயங்கி மண்ணும் மயங்குகிறது, அந்த உவகையிலும் சௌந்தரியத்திலும்.

தயரதன் புதல்வ னென்பார் ; தாமரைக் கண்ண னென்பார் ;
புயல்இவன் மேனி யென்பார் ; பூவையும் பொருவு மென்பார் ;

மயலுடைத்(து) உலக மென்பார் ; மானுடன் அல்ல னென்பார் ;
கயல்பொரு கடலுள் வைகும் கடவுளே கானு மென்பார்.

[ புயல் - மேகம். பூவை - காயாம்பூ. பொருவும் - ஒத்திருக்கும். மயல் - மயக்கம். கயல் - கயல்மீன்கள். பொரு - தாக்குகிற ; முட்டு கிற. வைகும் - தங்கும். ]

நகர வாசிகளில் சிலர், இராமன் சௌந்தரியத்தையும் சீதை சௌந்தரியத்தையும் ஒப்பிட்டுப் பொருத்தம் காண்கிறார்கள். வேறு சிலர் 'மயலுடைத்(து) உலகம்!' என்ற கொள்கையை ஒப்புக் கொள்ளாதவர்கள்போல், 'தவமுடைத்(து) உலகம்!' என்கிறார் களாம்.

நம்பியைக் காண நங்கைக்(கு) ஆயிரம் நயனம் வேண்டும் ;
கொம்பினைக் காணுந் தோறும் குரிசிற்கும் அன்ன தேயாம் :
தம்பியைக் காணீர் என்பார் ; தவமுடைத்(து) உலக மென்பார் ;
இம்பர்இந் நகரில் தந்த முனிவனை இறைஞ்சு மென்பார்.

[ கொம்பு - பூங்கொம்பு போன்ற சீதை. காணுந்தோறும் - காணும் போதெல்லாம், குரிசில் - பெருமையிற் சிறந்த இராமன். அன்னதே - அத்தன்மையதே. இம்பர் - இவ்வுலகில். இறைஞ்சும் - வணங்குங்கள். ]

'நம்பியைக் காணும் நங்கைக்கு அக்காட்சி இரு கண்ணால் அமையாது ; அவளுக்கு ஆயிரம் கண்கள் வேண்டும்!' என்று கூறும் மிதிலை மக்கள், 'நங்கையைக் காணுந்தோறும், காணுந்தோறும், இராமனுக்கு ஆயிரமாயிரம் கண்கள் புதிதுபுதிதாக வேண்டும்!' என்கிறார்கள். சீதையின் அழகு இராமனது அழகையும் வென்று விடும் என்பது குறிப்பு. இத்தகைய அழகிமீது இராமன் கொண்ட காதல், வில்லை முறித்து வெற்றி பெற்றதற்கு முக்கிய காரணம் என்று கருதுதல் கூடும்.

வால்மீகி ராமாயணத்தில் வில்லிறுத்தல் இராமனது வீரத்தின் வெற்றி : கம்ப சித்திரத்திலே காதலின் வெற்றி.

'வந்தேன் ; கண்டேன் ; வென்றேன் !' என்று ஜூலியஸ் ஸீஸர் என்னும் ரோமாபுரி வீரன் ஒரு சமயம் தான் அடைந்த வெற்றியைச் சுருங்கக் கூறி விளங்க வைத்தானும். கம்பனின் காவிய நாயகனது வில்லிறுத்த வெற்றியையும் இம்மூன்று சொற்களால் கூறுதல் கூடும். 'இராமன் வந்தான் ; சீதையைக்கண்டான் ; வில்லிறுத்து வெற்றி பெற்றான் !' என்பது கம்ப சித்திரம்.

'வந்தான் ; வென்றான் ; கண்டான் !' என்ற வால்மீகி மகரிஷியின் கதையைத் தமிழர்கள் கம்பன் காலத்துக்கு முன்பே தங்கள் சுவைக்கு ஏற்றபடி மாற்றி அமைத்துக்கொண்டார்கள். அத்தகைய கற்பனையைப் பின்பற்றியே கம்பனும் தன் கதையை அமைத்திருக்கிறான்.

கம்பராமாயணம் முழுதுமே இராமனது வீரத்தோளின் வெற்றியாக மட்டும் அமையாமல், காதலின் வெற்றியாகவும் அமைகிறது.

# 17. சீதையும் தோழியும்

இராஜ சபையில் நிகழ்ந்தது சீதைக்குத் தெரியாது. காதலனைப்போல் காதலியும் இரவு முழுதும் கண்ணுறங்கவில்லை. காதலன் துன்பத்தைக் காட்டிலும் காதலி துன்பம் அதிகமென்றே சொல்லவேண்டும். மாலையும் இருளும் நீங்கிச் சந்திரோதயமாகும்வரை இராமன் விசுவாமித்திரன் ஆதியரோடு இருந்ததால், அவன் நிலவை மட்டும் நொந்ததாகக் கவி வருணிக்கிறான். சீதையோ மாலை இருள் நிலவு ஆகிய மூன்றையும் நொந்துகொண்டாள்.

மாலை தொடங்கி இவளுயிர் உடம்பைவிட்டு நீங்கிக்கொண்டிருந்ததென்றே சொல்லலாம். அப்படி நீங்கிக்கொண்டிருந்த உயிரை, இரவு நீங்கியதும், சிறிது மீட்கப்பெற்றாளாம், 'இராமனை மறுபடியும் காணவேணும்!' என்னும் ஆசையால். ஆசை - நோயால் நீங்கிக் கொண்டிருந்த உயிரை ஆசை - மருந்தே ஒருவாறு மீட்டிக்கொண்டு வந்ததாம்.

இந்த நிலையில் படுக்கையை விட்டெழுந்து, பாங்கியர் சூழப் போய்க் கன்னியாமாடத்தின் அருகே அமைக்கப்பட்டிருந்த ஒரு தாமரைத் தடாகத்தை அடைந்தாள், அங்கே சிறிது இளைப்பாறலா மென்று. தடாகக் கரையில் ஒரு பளிங்கு - மாளிகை: அதிலே ஒரு பூம்படுக்கை. அந்தப் படுக்கையில் அமர்ந்தாள் சீதை.

ஊசலா டுயிரி னோடும், உருகுபூம் பள்ளி நீங்கிப்
பாசிழை மகளிர் சூழப் போய்,ஒரு பளிக்கு மாடக்
காசில்தா மரையின் பொய்கைச் சந்திர காந்தம் ஈன்ற
சீதநீர் தெளித்த மென்பூஞ் சேக்கையை அரிதிற் சேர்ந்தாள்.

[ உருகு பூம்பள்ளி - (தான்) உருகிக்கிடக்கும் மலர்ப்படுக்கை பாசிழை மகளிர் - பசும்பொன் ஆபரணங்கள் பூண்ட பெண்கள். காசில் - குற்றமற்ற. பொய்கை - தடாகம். சந்திரகாந்தம் - சந்திரிகையில் நீர் உமிழ்வதாகக் கருதப்படும் சந்திரகாந்தக்கல். ஈன்ற - உண்டாக்கிய. சீத நீர் - குளிர்ந்த நீர். சேக்கை - படுக்கை. ]

அந்த மெல்லிய படுக்கை, சந்திரகாந்தம் உமிழ்ந்த குளிர்ந்த நீர் தெளிக்கப்பெற்றிருந்ததாம். சீதை பிரயாசத்தோடு அப்படுக்கையை அடைந்தாள். ஒரு பூம்படுக்கையிலிருந்து வேறொரு பூம்படுக்கைக்கு வந்து சேர்ந்தாளாம், ஊஞ்சலாடுவதுபோல் வருவதும் போவதுமாய் ஆடிக்கொண்டிருந்த உயிரோடும்.

அந்தப் பொய்கையில் செந்தாமரைகள் இதழ் விரிந்து மலர்ந்தன, பொன்னிறமான காலைக் கிரணங்களுக்கிடையே. சீதை அந்தத் தாமரைகளை நோக்கி,

'பெண்ணிவள் உற்ற' தென்னும் பெருமையால், அருமை யான
வண்ணமும் இலைக ளாலே காட்டலால், வாட்டம் தீர்ந்தேன்!
தண்ணறுங் கமலங் காள்! என் தளிர்நிறம் உண்ட கண்ணன்
உண்ணிறங் காட்டி, நீர்என் உயிர்தர உலோபி னீரே!

[ உற்றது - தங்கியது ; அடைந்தது. பெருமை - பெருந்தன்மை ; பெரியாரது தன்மை. வண்ணம் - நிறம். தண் நறுங் கமலங்காள் - குளிர்ந்த மணமுள்ள தாமரைகளே. தளிர் - (இங்கே) மாந்தளிர். உண்ணிறம் - உள்நிறம் - உள்ளத்தின் தன்மை, உலோபினீர் - உலோபஞ் செய்தீர். ]

என்று சொல்லுகிறாள்.

'தாமரைகளே! நீங்கள் பெரியவர்கள் : உங்களிடத்தில் பெருந்தன்மை யிருக்கிறது! "இங்கே வந்து தங்குகிறாளே, இவள் ஒரு பெண்ணல்லவா?" என்று இரக்கப்படுகிறீர்கள்!' என்கிறாள். "பெண்ணென்றால், பேயும் இரங்கும்!" பூவும் இரங்குகிறது — ஆம், பெருமை வாய்ந்த தாமரைப் பூவும்!' என்பது கருத்து.

## சீதையும் தோழியும்

மலர்களைச் சூழ்ந்திருந்த தாமரையிலைகள் காதலனது மேனியின் அருமையான பச்சை நிறத்தைக் காட்டுகின்றனவாம். அந்தச் செந்தாமரை மலர்களோ அக்கண்ணின் நிறத்தைக் காட்டுகின்றனவாம். 'அதனால் வாட்டம் தீர்ந்தேன்!' என்று நன்றி தெரிவித்துக் கொள்ளுகிறாள். எனினும் 'நீங்கள் வள்ளல்களில்லை; லோபிகள் தான்!' என்றும் குற்றஞ் சாட்டுகிறாள். வெளி நிறத்தைக் காட்டியவர்கள், 'அந்த உள்நிறம் அல்லது உள்ளத்தின் தன்மை இதுதான்!' என்று காட்டவில்லையாம். 'உள்நிறம் காட்டினா லல்லவா எனக்கு உயிர்தாமுடியும்? அதற்கு லோபஞ் செய்தீர்களே!' என்று நொந்து குறைகூறுகிறாள்.

மேனியழகுக்கும் கண்ணழகுக்கும் ஒப்பான இலைகளையும் மலர்களையும் கண்டு சிறிது ஆறியிருந்தவள், 'ஐயோ! என் உடம்பு நிறங்குன்றிப் பசலை போர்க்கும்படி செய்த அந்தக் கண்ணனுடைய உள்ளமும் உடம்புபோல் அழகு வாய்ந்ததுதானா? அதில் இரக்கம் இருக்கிறதா? தயை இருக்கிறதா? அன்பு இருக்கிறதா?' என்று அறிய விரும்புகிறாள். 'சிறிது அருள் செய்த பெரியவர்கள், முழுதும் அருள் செய்து, அந்த அழகையும் காட்டி உயிர் தாராமல் ஏன் இப்படி லோபிகளாக வேணும்?' என்று புலம்புகிறாள்.

எவ்வளவு சுருங்கிய சொற்களால் எவ்வளவு ஆழமும் விரிவுமுள்ள கருத்தை எவ்வளவு அழகாகக் கவி வெளியிடுகிறான்!

'என் உயிர்தர உலோவினீரே!' என்று கூறுவதால் இவளுயிர் இப்போது இவள் வசமாக இல்லையென்பது குறிப்பு. 'திரும்பவும் அவனைக் காணக்கூடுமானால், என் உயிரையும் காணக்கூடும்!' என்கிறாள். அந்த மேனிக்கு ஒப்பாக இருக்கும் போலிப் பொருள்களான இலைகளும் மலர்களும் அளிக்கும் ஆறுதல் போதவே போதாதென்று தெளிவாகி விட்டது. இவையல்ல இவளுக்கு உயிர்தரும் பொருள்கள்: எனவே,

'நாணுலாவு மேருவோடு நாணுலாவு பாணியும்,
தூணுலாவு தோளும்,வாளி ஊடுலாவு தூணியும்,
வாணிலாவின் நூலுலாவு மாலைமார்பும், மீளவும்
காணலாகு மாகின்,ஆவி காணலாகு மேகொலாம் !'

[ நாண் - வில்நாண். மேரு - மேருமலையை ஒத்த (பெரிய வலிய) வில். பாணி - கை. வாளி - அம்பு. ஊடு - உள்ளே. தூணி - அம்பறாத்தூணி; அம்புக்கூடு. வாணிலா - வாள்நிலா - ஒளியுடைய நிலா. நிலாவின் - நிலவைப் போன்ற. நூல் - பூணூல். ஏ, கொல், ஆம் - அசைகள். ]

என்று தனக்குள் தானே சொல்லிக்கொள்ளுகிறாள்.

இராமன் உலாவிக் கொண்டிருந்தபோது பார்த்தவளல்லவா? அவனோடு வில், நாண், பூணூல் முதலியனவெல்லாம் உலாவின என்கிறாள், ஆச்சரியமாக.

மலை போன்ற அந்த வில்லையும், நாணில் உலாவிக் கொண்டிருந்த அந்தக் கையையும், தூண்போல் திரண்ட தோள்களையும், அம்பறாத் தூணியையும் மறுபடியும் காணப் பெறுவேனா? — என்று தவிக்கிறது உள்ளம். அந்த மேனியைச் சார்ந்து வில்லும் நாணும் அம்பறாத் தூணியும் கூட அழகு பெற்று, அவ்வளவு வசீகர சக்தியும் பெறுகின்றன! 'அவை யெல்லாம் அப்படியே நேற்றுக் கண்டது போல் மீளவும் காணக் கிடைக்குமா? அப்படியானால், என் உயிரையும் காணலாகும் இந்த உடம்பிலே!' என்கிறாள்.

இப்படி இவள் வசமாக இல்லாத இவளுயிர் அவன்வசமாகவே யிருக்கிறதாம். 'அவனே தன் இரண்டு கண்களாலும் என் உயிரை முகந்து பருகிவிட்டான்!' என்கிறாள் :

விண்தலம் கலந்திலங்கு திங்களோடும், மீதுசூழ்
வண்டலம்(பு) அலங்கல்தங்கு பங்கியோடும், வார்சிலைக்
கொண்டலொன்(று) இரண்டுகண்ணின் மொண்டுகொண்டேன் ஆவியை
உண்டதுண்(டு):என் நெஞ்சின்இன்றும் உண்(டு); அ(து)என்றும் உண்டரோ !

[ விண்தலம் - ஆகாயமாகிய இடம் திங்கள் - சந்திரன். மீது சூழ் - மேலே சுற்றும். வண்டலம்பு - வண்டுகள் ஒலிக்கின்ற. அலங்கல் - பூமாலை. பங்கி - ஆண்மக்களின் ரோமம். வார் சிலை - நீண்ட வில். கொண்டல் - மேகம். கண்ணின் - கண்களால். அரோ - அசை. ]

ஆகாசத்திலே பிரகாசிக்கும் சந்திரனோடும் வானவில்லோடும் நழுவிவந்த மேகம் என்கிறாள், தன் உயிரை மொண்டு பருகிய ரூப சௌந்தரியத்தை. அந்த மேகம் பூமாலையையும் தலையில் சூட்டிக் கொண்டு வந்ததாம். கன்னிமாடத்தின் மேலிருந்து தான் முதல் முதல் பார்த்தபோது தோன்றிய முறைப்படியே அந்தப் பூச்சூட்டிய தலையையும், அதன்கீழ் அந்த முகசந்திரனையும், அதன்கீழ் வில்லையும் ஞாபகப்படுத்திக் கொள்ளுகிறாளென்று ஊகிக்கலாம். 'இத்தகைய அதிசயமான மேகம் இப்போது என் நெஞ்சில் இருக்கிறது: அது இங்கே இன்றும் உண்டு; என்றும் உண்டு!' என்கிறாள்.

அந்த ரூப சௌந்தரியம் வீர சௌந்தரியமாகவே இவள் கண்ணுக்கு இலக்காயிற்று: இப்போது அகக்கண்ணுக்கும் அப்படியே இலக்காகிறது. எனினும் அந்த வீரபுருஷன், பெண்பாலாகிய தான் இவ்வளவு துன்பத்தை அனுபவித்துக் கொண்டிருக்கும்போதும், 'நீ அஞ்சாதே! அஞ்சாதே!' என்று அருகே வந்து அபயம் அளிக்க வில்லையே! — என்கிறாள். 'அவன் இன்றும் என்றும் என் நெஞ்சில் தான் இருக்கிறான்' என்று தான் செய்துகொண்ட சித்தாந்தத்தை எவ்வளவு சீக்கிரமாக மறந்துவிடுகிறாள்! அந்த நெஞ்சுதான் இப்போது என்ன பாடு படுகிறது!

'பஞ்சரங்கு தீயின்ஆவி பற்றிஊடு கொற்றவார்
வெஞ்சரங்கள் நெஞ்சரங்க வெய்யகாமன் எய்யவே,
சஞ்சலம் கலந்தபோது தையலாரை உய்யவந்(து)
"அஞ்சல்!அஞ்சல்!" என்கிலாத ஆண்மையென்ன ஆண்மையே!'

[ பஞ்சு அரங்கு - பஞ்சை அழிக்கிற. தீயின் - தீயைப்போல. கொற்றம் - வெற்றி. வார் - நீண்ட. வெஞ்சரங்கள் - கொடிய அம்புகள். வெய்ய காமன் - கொடிய மன்மதன். உய்ய - உயிர் பிழைக்கும்படி. ]

என்று கேட்கிறாள்.

மன்மத பாணங்களால் தகிக்கப்படும் அந்த நெஞ்சு கேட்கும் கேள்வியல்லவா ? 'சஞ்சலம் கலந்தபோது தையலாரை உய்ய வந்(து) — "அஞ்சல்! அஞ்சல்!" என்கிலாத ஆண்மை என்ன ஆண்மையே!' என்று பொதுவாகக் கூறி இராமன் வீரத்தைப் பழிப்பவள்போல் சீதை தன் விரகதாபத்தை வெளியிடுகிறாள். 'தையலார்' என்று சீதை தன்னை ஜாதிப் பன்மையால் குறிப்பிடு வதும், இந்தப் பாட்டின் ஓசை நயமும், காதலியின் 'குழந்தை யுள்ள'த்தை வெளியிடுகின்றன.

மறுபடியும், அவன் தன்னுடைய எண்ணத்திற்குள்ளே ஒளித் திருக்கிறான் என்ற நினைவு வருகிறது. எண்ணத்திற்குள் மட்டுமா ? தன் கண்ணுக்குள்ளும் அவன் இருப்பதாகத் தோன்றுகிறது.

'விண்ணுளே எழுந்தமேகம், மார்பினூலின் மின்னொ(டு)இம்
மண்ணுளே இழிந்ததென்ன, வந்துபோன மைந்தனூர்,
என்னுளே யிருந்தபோதும் யாவரென்று தேர்கிலேன் ;
கண்ணுளே யிருந்தபோதும் என்கொல்காண்கி லாதவே ?'

[ விண் - வானம். நூலின் மின் - பூணூலாகிய மின்னல். இழிந்தது - இறங்கியது. என் - எண்ணம். தேர்கிலேன் - ஆராய்ந்து அறிந்தேனில்லை. ]

என்று ஆச்சரியமும் ஆறாத துயரமும் அடைகிறாள்.

இவளுடைய எண்ணத்துக்குள்ளே யிருக்கிறார் ; எனினும் இன்னா ரென்று தெரிந்து கொள்ளமுடியவில்லை ! கண்ணுக்குள்ளே யிருக் கிறார் : எனினும் கண்டுகொள்ள முடியவில்லை ! 'இது என்ன மாயமோ ? இதற்கென்ன காரணமோ ?' என்று பரிதவிக்கிறாள். இடத்தால் தூரமான பொருள்களைக் காணக்கூடிய கண் தன்னுள்ளே இருப்பவரைக் காணாததும், காலத்தால் தூரமான பொருள்களை அறியக்கூடிய எண்ணம் தன்னுள்ளே இருப்பவரை அறிந்து கொள்ளாததும் ஆச்சரியங்களல்லவா ?

'விண்ணுளே எழுந்த மேகம்' என்பதால், தான் விரும்பிய பொருள் எட்டாத தூரத்திலுள்ளதென்பது குறிப்பு. அந்த மேகம் மின்னற் பூணுலோடு 'மண்ணுளே இழிந்ததென்ன, வந்துபோன மைந்தனர்' என்று எவ்வளவு வசீகரமாய்க் குறிப்பிடுகிருள், 'எட்டாத பொருள் கிட்ட வந்து மறைந்துபோயிற்றே!' என்ற அந்த இதயதாபத்தை!

இப்போது அணையை உடைக்கும் வெள்ளம் போலாகி விடுகிறது சீதையின் காதல். 'சீதை தானு இப்படி எண்ணுகிறவள்?' என்று கூட ஆச்சரியப்படுகிறேம்.

'பெய்கடற் பிறந்(து)அயல் பிறக்கொணு மருந்துபெற்(று),
ஐயபொற் கலத்தொ(டு)அங்கை விட்டிருந்த ஆதர்போல்,
மொய்கிடக்கும் அண்ணல்தோள் முயங்கிடாது, முன்னமே
கைகடக்க விட்டிருந்து, கட்டுரைப்ப தென்கொலோ?'

[பெய் கடல் - சொரிகின்ற கடல். பிறக்கொணு - பிறக்க முடியாத. மருந்து - அமிர்தம். ஐய - அழகையுடைய. அங்கை - அழகிய கை. ஆதர் - அறிவில்லாதவர். மொய் - வலிமை. அண்ணல் - பெருமையிற் சிறந்தவன். முயங்கிடாது - தழுவிக் கொள்ளாமல். கட்டுரைப்பது - (இங்கே) அலங்காரமாகச் சொல்வது.]

என்ற மனநிலையைப் பாருங்கள்.

பாற்கடலிலே பிறந்த அமிர்தத்தை — அதை வேறு எங்கேதான் பெறமுடியும்? — ஓர் அழகிய பொற்கலத்திலே பார்த்து விட்டானும் ஒருவன். ஆனுல் கண்ணிற்பட்ட அந்தத் தேவாமிர்தம் கைக்கெட்டாமலே போய்விட்டதாம். அமிர்தமும் போய்ப் பாத்திரமும் போய்விட்டதாம். அப்படிக் கைவிட்டவன் எப்பேர்ப்பட்ட புத்திசாலியா யிருக்கவேணும்! அதுதான் தன்னுடைய நிலையும் — என்று கருதுகிருள் சீதை. இதற்குமுன் தனக்குள் தானே உருகி உருகிச் சொல்லிக்கொண்டதெல்லாம் கேவலம் அலங்காரப் பேச்சென்றே தோன்றுகிறது.

'கண்ணால் நுகரும் அமுதம் அல்லவா காணக் கிடைத்தது, அந்தத் திருமேனியில்?' என்று எண்ணுகிறாள். 'அப்போதே தழுவிக்கொள்ளாமல் கைகடக்க விட்டிருந்தேனே! இப்போது "விண்ணுளே எழுந்த மேகம் மண்ணிலே இறங்கியது; மின்னலோடு நழுவியது; சந்திரனோடு நழுவியது; வான வில்லோடு நழுவி வந்தது! வில்லும் தோளுமாக உலாவி மறைந்தது! எனினும் அது கண்ணுளே யிருந்தது; எண்ணுளே யிருந்தது!" என்றெல்லாம் அலங்காரமாய்க் கட்டுரை கட்டிக்கொண்டிருக்கிறேனே! யாது பயன்?' என்று பல படியாக நைந்து விம்மி விம்மி அழுகிறாள்.

இத்தகைய துன்பவெள்ளத்தில் சீதை ஆழ்ந்து கொண்டிருந்த சமயத்திலே, மலைபோன்ற சிவதனுசு முறிந்துபோய் விட்டது. துன்பவெள்ளத்தில் மூழ்கித் தன்னை மறந்திருந்ததால்தான் அந்த இடிபோன்ற சத்தமும் இவளுக்குக் கேட்கவில்லை.

வில் முறிந்த அதிசயத்தைப் பார்த்துக்கொண்டிருந்த பெண்களில் ஒருத்தி ஓடிவருகிறாள், சீதை யிருக்குமிடத்திற்கு. எவ்வளவு ஆத்திரமாக, எவ்வளவு உத்ஸாகமாக வருகிறாள்! பாருங்கள்:

வடங்களும் குழைகளும் வான வில்லிடத்
தொடர்ந்துபூங் குழல்களும் துகிலும் சோர்தர,
நுடங்கிய மின்னென நொய்தின் எய்தினள்,
நெடுந்தடங் கிடந்தகண் நீல மாலையே.

[ வடங்கள் - (கழுத்தில் அணியும்) ஆரங்கள். குழை - காதணி. பூங் குழல் - பூ அணிந்த கூந்தல். துகில் - ஆடை. சோர்தர - நழுவிச் சரிய. நுடங்கிய - ஆடிய; தள்ளாடிய. நொய்தின் - விரைவாக. தடம் - அகலம். ]

கழுத்தில் அணிந்த இரத்தின ஆரங்களும் காதணிகளும் வானவில் இடுகின்றனவாம், அவள் மின்னல்போலப் பாய்ந்து வரும் போதே. பூ அணிந்த கூந்தலும் ஆடையும் நழுவி ஒன்றோடொன்று சேர்ந்து சரிந்து கொண்டிருக்கின்றனவாம். அவிழ்ந்த கூந்தலை

எடுத்துக் கட்டிக்கொள்ளாமல், குலைந்த ஆடையையும் சீர்ப்படுத்திக் கொள்ளாமலே, வந்து விடுகிறாள் சீதைமுன்னே. அந்தக் கண்கள் தான் ஆனந்தத்தால் எப்படி விரிந்து மலர்ந்திருக்கின்றன! 'நெடுந் தடங் கிடந்தகண்' என்று அந்தக் கண்களையே காட்டிவிடுகிறான் கவிஞன்.

இவள் யார்? வேறு யாராயிருக்க முடியும்? சீதையின் சேடியாகிய நீலமாலை இவள்தான். இவ்வளவு குதூகலமாக வந்து, 'கைகடக்கவிட்ட அமிர்த கலசம் கைவசமாகிவிட்ட'தென்று செய்தி சொல்லித் துன்பவெள்ளத்திலிருந்த சீதையை இன்பக்கரையேற்று கிறவளுக்குத்தான் எவ்வளவு வசீகரமான பெயர்!

வந்த சேடி வழக்கம் போலத் தலைவியை வணங்கவில்லையாம். 'வணக்கமுமில்லை; ஒடுக்கமுமில்லை' யென்று சொல்லும்படி நடந்து கொள்ளுகிறாளாம்.

> வந்தடி வணங்கிலள்; வழங்கும் ஓதையள்;
> அந்தமில் உவகையள், ஆடிப் பாடினள்:
> 'சிந்தையுள் மகிழ்ச்சியும், புகுந்த செய்கையும்,
> சுந்தரி சொல்'லெனத் தொழுது சொல்லுவாள்.

[ஓதை - ஓசை. அந்தமில் - எல்லையற்ற.]

உவகை மிகுதியால் தன்னை மறந்து ஆரவாரஞ் செய்து கொண்டும், ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டுமிருந்தவளைச் சீதை 'சுந்தரி!' என்று அருமையாக அழைத்து, 'இவ்வளவு மகிழ்ச்சிக்குக் காரணமென்னடீ?' என்று கேட்கிறாள். கேட்டதும் நீலமாலைக்கு நினைவு வந்துவிடுகிறது. உடனே அவள் தலைவியைத் தொழுது செய்தி சொல்ல ஆரம்பிக்கிறாள்.

பளிச்சென்று ஓடி வந்தவள் வில் முறிந்த செய்தியைப் பளிச் சென்று நேராகச் சொல்லி விடவில்லை. 'யானை இரதம் குதிரை என்னும் சேனைக்கடலை யுடையவன்; கல்விக் கடலாகவுமிருப்பவன்'

என்று தொடங்குகிறாள். பிறகு 'அந்த மன்னன் பெயர் தசரதன்' என்கிறாள். அந்தப் பெயர் வாய்ந்த மன்னன் தனிச் செங்கோல் செலுத்தும் சக்கரவர்த்தி என்கிறாள். அந்தச் சக்கரவர்த்தி மழை போல் வழங்கும் வள்ளல் என்கிறாள். தசரதனை இவ்வளவு தூரம் வருணித்த பின்புதான், அவன் புதல்வனைக் குறித்தும், அந்தப் புதல்வனுடைய வடிவழகைக் குறித்தும் பிரஸ்தாபிக்கிறாள்.

'கயரத துரகமாக் கடலன், கல்வியன்,
தயரத னெனும்பெயர்த் தனிச்செல் நேமியான்,
புயல்பொழி தடக்கையான் புதல்வன், பூங்கணை
மயல்வினை மதனற்கும் வடிவு மேன்மையான்'

[ கயம் - யானை. துரகம் - குதிரை. மாக்கடலன் - பெரிய கடலை யுடையவன். தனிச்செல் நேமியான் - தனிச் செங்கோல் செலுத்துகிற சக்கரவர்த்தி. பூங்கணை மயல்வினை - மலரம்புகளால் மயக்கத்தை விளை விக்கிற. மதனற்கும் - மன்மதனைக் காட்டிலும். ]

என்று நீலமாலை ஒரு நெடுங்கதை சொல்வதுபோல் சொல்லுகிறாள்.

பிறகு அவனுடைய வீரத் தோள்களை வருணித்து, அத்தகைய சௌந்தரியம் தெய்விக சௌந்தரியமோ என்று சந்தேகிக்கும்படி யிருக்கிறதென்கிறாள். அப்பால் பெயரைச் சொல்லி, அவன் தம்பி யோடும் முனிவரோடும் நம்முடைய நகரத்திற்கு வந்து சேர்ந்தான் என்கிறாள்.

'மராமரம் இவையென வளர்ந்த தோளினன்,
அராவணை அமலனென்(று) அயிர்க்கும் ஆற்றலான்,
இராமனென் பதுபெயர்: இளைய கோவொடும்
பராவரு முனியொடும் பதிவந் தெய்தினன்'

[ மராமரம் - ஒரு வகை மரம். அரா அணை அமலன் - ஆதிசேஷனுகிய படுக்கையில் பள்ளிகொண்டிருக்கும் மகாவிஷ்ணு. அயிர்க்கும் - சந்தே கிக்கிற. இளைய கோ - தம்பியாகிய அரச குமாரன். பராவரு முனி - துதித் தற்கு அருமையான விசுவாமித்திர முனிவர். ]

என்றெல்லாம் கதை நடத்தும்போது, சீதையின் மனம் ஊஞ்சலாடுகிற தென்று சொல்லவேண்டும். இப்போது சீதைக்கு இப்படி யெல்லாம் தொந்தரவு கொடுக்க வேணுமென்று சேடியே ஆசைப்படுவது போலத் தோன்றுகிறது.

அந்தத் தசரத ராஜகுமாரன் — தம்பியோடும் முனிவரோடும் வந்த வீரபுருஷன் — சிவதனுசைக் காணும்பொருட்டு வந்தனன் என்பது அந்த முனிவர் வாய்மொழியாகவே ஜனகனுக்குத் தெரிந்து விட்ட தென்கிறாள்.

'பூணியல் மொய்ம்பினன், புனிதன் எய்தவில்
காணிய வந்தன னென்னக் காவலன்
ஆணையின் அடைந்தவில் லதனை, ஆண்டகை
நாணினி(து) ஏற்றினன்: நடுங்கிற்(று) உம்பரே!'

[ பூண் - அணி; (இங்கே) வீரர்களின் தோளணியாகிய வலயம். மொய்ம்பினன் - தோள்களை யுடையவன். புனிதன் - பரிசுத்த மூர்த்தியான சிவபெருமான். காணிய - காணும்பொருட்டு. காவலன் - (இங்கே) ஜனக மன்னன். ஆண்டகை - ஆண்மைக் குணமுள்ளவன். உம்பர் - மேலுலகம்.]

என்று கடைசியாக இராமன் நாணேற்றிய செய்தியைத் தெரிவித்து விடுகிறாள்.

'வேள்வி காணிய வந்தார்: வில்லும் காண்பார்!' என்று விசுவாமித்திரர் ஜனகமன்னனை நோக்கிச் சொன்னாரல்லவா? அதையொட்டி 'வில் காணிய வந்தனன் என்ன' என்று ஒரு பகுதியை மாத்திரம் வெளியிடுகிறாள். இதற்குப் பின்பும் உடனே செய்தி சொல்லாமல், அந்த வில் அரசன் ஆணையால் கொண்டுவரப்பட்ட தென்கிறாள். இப்படியெல்லாம் சுற்றிச் சுழற்றிக் கதை வளர்த்துத் தலைவியின் ஆத்திரத்தைத் தூண்டி, ஆசையையும் துன்பத்தையும் அச்சத்தையும் முகத்திலே பார்த்துக் குறும்புத்தனமாய்க் குதூகலம் அடைந்தவள்,

'ஆண்டகை நாண் இனி(து) ஏற்றினன்' என்ற சந்தோஷச் செய்தியைத்தான் எவ்வளவு குதூகலமாக வெளியிட்டிருக்க வேண்டும்! இவ்வளவு குதூகலமும் பொங்கி, 'அந்த விசையால் நடுங்கிற்று மேலுலகமும்!' என்ற செய்தியாக வெளிப்படுகிறது.

அப்பால் நாணேற்றிய விவரத்தைச் சொல்லத் தொடங்கி,

'மாத்திரை யளவில்தாள் மடுத்து, முன்பயில்
சூத்திரம் இதுவெனத் தோளின் வாங்கினன்:
ஏத்தினர் இமையவர்; இழிந்த பூமழை;
வேத்தவை நடுக்குற முறிந்து வீழ்ந்ததே!'

[மாத்திரை அளவில் - ஒரு நொடிப்போதில். தாள் மடுத்து - காலால் மிதித்துக்கொண்டு. பயில் - பழகின. சூத்திரம் - யந்திரம்; இரகசியம். வாங்கினன் - வளைத்தான். இமையவர் - தேவர்கள். இழிந்த - இறங்கியது; விழுந்தது. வேத்தவை - வேந்து அவை - இராஜசபை. நடுக்குற - நடு நடுங்க.]

என்று முடிக்கிறாள்.

இந்தச் சேடியும் அந்தச் செயலை அப்போது பார்த்துக்கொண்டிருந்தாள். இமைகளை இமைக்கவொட்டாமல் தடுத்துப் ('தடுத்து இமையாமல்') பார்த்துக் கொண்டிருந்தாள். சீதைமேலுள்ள பேரன்பினால் விசேஷமாய்க் கவனித்துப் பார்த்துவிட்டாள். அதனால் தான் அவ்வளவு வேகமாக வில்லின் ஒரு முனையை இராமன் காலால் மிதித்துக்கொண்டு வில்லை வளைத்ததையும் பார்த்துவிட்டாளென்று தோன்றுகிறது. அந்தப் படுவேகத்தில் நடந்த அந்தச் செயல்களை மற்றவர்கள் நோக்கியதுமில்லை; அறிந்ததுமில்லையே! ஆனால் அவன் வில்லை வளைத்தது, இவ்வளவு கவனமாகப் பார்த்துக்கொண்டிருந்த இவளுக்கும் ஏதோ ஒரு இரகசிய வித்தைபோலவே தோன்றியது.

வளைக்கமுடியாத சிவதனுசு வளைந்ததும், 'இதுதான் வீரம்' என்று தேவர்கள் புகழ்ந்தார்களாம். உடனே பூ மழை பொழிந்ததாம். விண்ணுலகம், புகழுரை பொழிந்து பூ மழையும் பொழிந்த

தாம். அந்தப் புகழ்மழைக்கும் பூமழைக்குமிடையே முறிந்து விழுந்ததாம் சிவதனுசு, அந்த உலகத்தோடு இந்த உலகமும் இராஜ சபையும் நடுநடுங்கும்படி. எல்லாம் ஒரு நொடிப்பொழுதில் நடந்து முடிந்துவிட்டது: சொல்லத்தான் நெடுங்கதை!

சேடி சொன்ன அடையாளத்தால், வில்லை முறித்தவன், தான் காதலித்தவனே யென்று சீதை பூரித்துப் போகிறாள். இப்படிப்பட்ட நிலையிலும் சந்தேகம் முற்றும் நீங்கிவிடவில்லையாம்.

இல்லையே நுசுப்பென்பார் உண்டுண் டென்னவும்,
மெல்லியல், முலைகளும் விம்ம விம்முவாள்:
'சொல்லிய குறியின்அத் தோன்ற லே;அவன்
அல்லனேல், இறப்ப'னென்(று) அகத்துள் உன்னினாள்.

[நுசுப்பு - இடை. மெல்லியல் - சீதை. குறியின் - அடையாளங்களால். தோன்றல் - தலைவன். உன்னினாள் - நினைத்தாள்.]

'அவன் அல்லனேல் இறப்பனென்று அகத்துள் உன்னினாள்' என்று கவி கூறுவது சீதையின் மணம் காதல்மணம்தான் என்பதை எவ்வளவு பொருத்தமாக வற்புறுத்துகிறது!

சீதையின் நிலை இவ்வாறாக, வில் முறிந்த ஓசை கேட்ட ஜனகன் பேருவகையோடு விசுவாமித்திரரை நோக்கி,

'உரைசெய்:எம் பெரும!உன் புதல்வன் வேள்விதான்
விரைவின்இன்(று) ஒருபகல் முடித்தல் வேட்கையோ?
முரசெறிந்(து) அதிர்கழல் முழங்கு தானைஅவ்
வரசையும் இவ்வழி அழைத்தல் வேட்கையோ?'

[எம்பெரும - எமது பெருமானே. வேள்வி - மணவேள்வி - விவாகம். வேட்கை - விருப்பம். முரசு எறிந்து - முரசு அடித்து. அதிர் கழல் - அதிர்கின்ற வீரக் கழல். தானை - சேனை.]

என்று கேட்கிறான்.

என்ன கேள்வி! என்ன ஆத்திரம்! இராமனை இங்கே தசரதராஜ குமாரனென்று குறிப்பிடாமல் விசுவாமித்திர ரிஷி குமாரனென்று குறிப்பிடுவது கவனிக்கத் தக்கது. தசரதன் இராம லட்சுமணர்களை விசுவாமித்திரர் வசம் அடைக்கலமாக ஒப்பிக்கும்போது, 'நற்றந்தை நீ; தனித்தாயும் நீ இவர்க்கு' என்று சொன்னனல்லவா? விசுவாமித்திரரும் அப்படியே மனமெய் மொழிகளிலும் இராமனைத் தன் புதல்வனுகவே மதித்து நடத்திவருகிருர். அறிஞனுன ஜனகனும் இதை நன்ருக அறிந்துகொண்டு விசுவாமித்திரரிடம் இராமனை 'உன் புதல்வ'னென்று குறிப்பிடுகிருன். இப்படிக் குறிப்பிடுவதோடு அமையாது தசரதனை 'அந்த அரசன்' ('அவ்வரசு') என்று குறிப்பிடுவதும் கவனிக்கத் தக்கது.

'தசரதனைக்கூட அழையாமல் இன்றைத்தினத்திலேயே ஒருநாள் மணமாக நடத்தி முடித்துவிடலாமோ?' என்ற ஆசையையும் ஆத்திரத்தையும் கண்டு, விசுவாமித்திர முனிவர் அமைதியாக, 'விரைவில் அவனும் வந்து சேர்வது நல்லதுதான்' என்கிருர். இம்முனிவரும் ஜனகன் தனக்கு அளித்த ஸ்தானத்தை ஒப்புக்கொண்டு, தசரதனைத் தந்தையென்று குறிப்பிடாதது கவனிக்கத்தக்கது.

மல்வலான் அவ்வுரை பகர, மாதவன்
'ஒல்லையில் அவனும்வந் துறுதல் நன்றென,
எல்லையில் உவகையான், இசைந்த வாறெலாம்
சொல்லுகென்(று) ஓலையும் தூதும் போக்கினுன்.

[ மல்வலான் - மற்போரில் வல்ல ஜனகன். ஒல்லையில் - விரைவில். ]

'சிதைக்கும் மணம் நடக்குமோ? இம்மாய வில்லை வளைத்தலென்பதும் நடைபெறுமோ?' என்று ஏங்கிக்கொண்டிருந்தவனல்லவா ஜனகன்? அவன் அவ்வளவு ஆத்திரமாகப் பேசுவதும், அந்த இரண்டு காரியங்களும் நடைபெறுவது நிச்சயமென்று உறுதிகொண்டிருந்த முனிவர் அமைதியாகப் பதில் சொல்லுவதும் இயற்கைதானே.

## சீதையும் தோழியும்

எல்லையில்லாத கவலையில் இருந்த ஜனகன் இப்போது எல்லையில்லாத உவகையில் இருக்கிறான். தசரதனைக் கலந்துகொள்ளாமலே எவ்வளவு விரைவில் திருமணப் பத்திரிகை தயாராகி விடுகிறது! எவ்வளவு விரைவில் தூதர்கள் அயோத்தியை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறார்கள்!

## 18. சக்கரவர்த்தியின் யாத்திரை

'ஜனகனது தூதர்கள் எவ்வளவு வேகமாய்ப் போனூர்கள், எவ்வளவு வேகமாய்ச் செய்தி சொல்ல முயன்றூர்கள்!' — என்பதைக் கவியும் படுவேகமாய் ஒரே பாட்டில் காட்டி யிருக்கிறூன் :

கடுகிய தூதரும் காலிற் காலிற்சென்(று),
இடிகுரல் முரசதிர் அயோத்தி எய்தினூர் ;
அடியிணை தொழஇட மின்றி மன்னர்கள்
முடியோடு முடிபொரு வாயில் முன்னினூர்.

[ கடுகிய - விரைந்துபோன. காலில் காலின் சென்று - காலினுல் காற்றுப் போலச் சென்று. முரசு அதிர் - முரசு அதிர்கின்ற. பொரு - தாக்கப்பெற்ற. முன்னினூர் - முற்பட்டுச் சென்றூர்கள். ]

நடந்துதான் போனூர்களா? காற்றுப்போல அவ்வளவு வேக மாய்ப் போய்ச் சேர்ந்தார்களாம், இடி முழங்குவதுபோல் முரசுகள் முழங்கிக்கொண்டிருந்த அயோத்திமா நகரத்திலே, — உட்புக இட மில்லாமல் கிரீடத்தோடு கிரீடம் உராய்ந்துகொண்டிருந்த அரண்மனை வாசலிலே. அந்த அரசர்களை யெல்லாம் நெட்டித் தள்ளிக்கொண்டு முற்பட்டு உள்ளே போனூர்களாம், சக்கரவர்த்தியின் உத்தரவுபெற்று.

வில் முறிந்த செய்தியையும் அந்தப் பேரொலியையும் குறித்த விவரம் கேட்ட அளவில், சக்கரவர்த்தி தோள் பூரிக்க, ' அன்று இங்கு ஒரு பெருஞ்சத்தம் கேட்டதே! அந்த வில்லொடிந்த சத்தம்தானே அப்படி இடிபோல் இடித்தது?' என்று பிரமித்துப் போனூனும். பிறகு பெருமகிழ்ச்சியோடு தூதர்களுக்கு வெகுமதியாக ஆடை யாபரணங்கள் அளித்தான். யானைமேல் முரசறைந்து தன்சேனையும் சிற்றரசர்களும் முன்னதாக மிதிலைக்குச் செல்லும்படி கட்டளை

யிட்டான். படைவீரர்களும் அரசர்களும் தங்கள் மனைவிமாரோடு புறப்பட்டார்கள்.

வழியில் சில ஆடவர்கள் பொழுது போக்காக, ‘என் அப்பன் வில் முறித்தான்!’ என்று அந்த விவரங்களைச் சொல்லிக்கொண்டே போகிறார்கள். அப்போது எவ்வளவு ஆத்திரத்தோடும் அகமகிழ்ச்சி யோடும் பெண்கள் அக்கதையைக் கேட்டுக்கொண்டே ஓடுகிறார்கள்! அவிழ்ந்த கூந்தலை முடித்துக்கொள்ளவில்லையாம்; கைகளால் ஏந்திக்கொள்ளவு மில்லையாம். மேகலையின் கோவைகள் அறுந்து சிந்தியபோதிலும், அவற்றைப் பொறுக்கி யெடுக்க வேணுமென்ற எண்ணமே யில்லையாம்.

**சந்த வார்குழல் சோர்பவை தாங்கலார்,**
**சிந்து மேகலை சிந்தையும் செய்கிலர்,**
**எந்தை வில்லிறுத் தானெனும் இன்சொலை**
**மைந்தர் பேச, மனங்களித் தோடுவார்.**

[ சந்த வார்குழல் - அழகிய நீண்ட கூந்தல். தாங்கலார் - ஏந்திக் கொள்ளாதவராய். சிந்து மேகலை - சிந்துகிற மேகலை. எந்தை - என் அப்பன். ]

அதோ கைகேயி, தாமரைத் தடாகத்தில் அன்னம்போல் தாசி மார் சூழப் பல்லக்கில் போகும் காட்சியைப் பாருங்கள் :

**பொய்கையங் கமலக் கானில் பொலிவதோர் அன்ன மென்னக்**
**கைகயர் வேந்தன் பாவை, கணிகையர் ஈட்டம் பொங்கி**
**ஐயிரு நூறு சூழ, ஆய்மணிச் சிவிகை தன்மேல்,**
**தெய்வமங் கையரும் நாணத் தேனிசை முரலப் போனள்.**

[ பொய்கை-தடாகம். அங்கமலக்கானில்-அழகிய தாமரைக் காட்டிலே கைகயர் வேந்தன் பாவை - கேகய அரசனின் மகளாகிய கைகேயி. கணிகையர் - தாசிகள். ஈட்டம் - கூட்டம். ஐயிரு நூறு - ஆயிரம். ஆய்

மணிச் சிவிகை - ஆராய்ந்து மதிக்கப்பெற்ற இரத்தினங்களாலான பல்லக்கு. தேன் - (இங்கே) வண்டுகள். முரல - ஒலிக்க. ]

நீலமணிச் சிவிகையில் சுமித்திராதேவி மேகத்தில் தோன்றும் மின்னல்போலப் போகிருள். பிரதான பட்ட மகிஷியும் இராமன் தாயுமான கௌசலாதேவி, பாடகர்கள் இசையாகிய தேன் சொரியத் தன்னுடைய மணிச்சிவிகையில் போகிருளாம்.

வெள்ளெயிற் றிலவச் செவ்வாய் முகத்தைவெண் மதிய மென்று
கொள்ளையில் திரளு மீன்கள் குழுமிய அனைய ஊர்தி,
தெள்ளரிப் பாண்டிற் பாணிச் செயிரியர் இசைத்தேன் சிந்த,
வள்ளலைப் பயந்த நங்கை வானவர் வணங்கப் போனுள்.

[ வெள் எயிறு இலவச் செவ்வாய் - வெண்ணிறமுள்ள பற்களும், இல வம் பூவை யொத்த செந்நிறமுள்ள அதரமும். வெண்மதியம் - வெண்ணிற முள்ள சந்திரன். கொள்ளை - மிகுதி. மீன்கள் - நட்சத்திரங்கள். குழுமிய அனைய - கூடினுற் போல. ஊர்தி - வாகனம். தெள் - தெளிந்த. அரி - வண்டு; (இங்கே) வண்டுகளின் இசை. பாண்டில் - கைத்தாளம் பாணி - இசைப்பாட்டு. செயிரியர் - பாணர். வள்ளல் - இராமன். பயந்த - பெற்ற. ]

நட்சத்திரங்கள்போல் ஒளிரும் பல மணிகள் அழுத்திய அந்தச் சிவிகைக்கிடையே கௌசலையின் முகம் பிரகாசிக்கிறது. வானவரும் வணங்கும் இந்த முகமண்டலத்தைச் சந்திரனென்று மயங்கியே, வானத்தில் சிதறிக்கிடந்த நட்சத்திரங்கள் ஒருங்கே கூடிவந்து இப்படிச் சூழ்ந்துகொண்டனவோ? — என்கிருன் கவி.

மற்றும் பல மங்கையர் கௌசலையைச் சூழ்ந்து வண்டிகளில் சித்திரப் பதுமைகள் போவதுபோலப் போனுர்கள்.

வசிஷ்ட முனிவர் முத்துப்பல்லக்கில் ஏறிப் பல முனிவர்கள் சூழச்சென்ருர். அவர் பின்னே,

பொருகளி(று), இவுளி, பொற்றேர், பொலங்கழற் குமரர், முந்நீர்
அருவரை சூழ்ந்த தென்ன, அருகுமுன் பின்னும் செல்லத்
திருவளர் மார்பர், தெய்வச் சிலையினர், தேரர், வீரர்
இருவரும், முனிபின் போன இருவரும் என்னப் போனர்.

[ பொருகளிறு - போர் செய்வதற்குரிய யானை. இவுளி-குதிரை. பொற்றேர் - பொன்தேர் - அழகிய தேர். பொலங்கழற் குமரர் - பொன்னாலாகிய வீரக்கழல் அணிந்த காலாட்படைகள். முந்நீர் - சமுத்திரம். அருவரை - (அளத்தற்கு) அரிய மலை. அருகு - அருகாக. திரு - ஜயலட்சுமி. சிலை - வில். ]

யானைகளும் குதிரைகளும் தேர்களும் காலாட்படைகளும், சமுத்திரம் மலையைச் சூழ்ந்து போவதுபோலத் தமக்கு முன்னும் பின்னும் செல்ல, பரத சத்துருக்கனர் இருவரும் வசிஷ்டமுனிவர் பின்னே போனர்கள். இவர்களுக்கு, விசுவாமித்திர முனிவர் பின்னே போன இராம லட்சுமணரை உவமையாக்குகிறான் கவிஞன். பரத சத்துருக்கனர்களுக்கு இராம லட்சுமணர் வழிகாட்டிகளானர்கள் என்பது குறிப்பு. இராம லட்சுமணரைப்போல் இவர்களும் குழந்தைப் பருவம் தொடங்கி ஒருவரையொருவர் பிரியாத பேரன்புடையவராயிருந்தனரென்பது திருஅவதாரப் படலத்திலேயே சொல்லப் பட்டிருக்கிறது.

இனி, தசரத சக்கரவர்த்தி மிதிலைக்குப் புறப்பட்டுப் போகும் சிறப்பைப் பாருங்கள் :

சங்கமும் பணையும் கொம்பும் தாளமும் காளத் தோடு
மங்கல பேரி செய்த பேரொலி மழையை ஓட்டத்
தொங்கலும் குடையும் தோகைப் பிச்சமும் சுடரை ஓட்டத்
திங்கள்வெண் குடைகண் டோடத் தேவரும் மருளச் சென்றான்.

[ பணை - ஒருவகை வாத்தியம். கொம்பு - ஊது கொம்பு. காளம் - எக்காளம். மங்கல பேரி - மங்கள பேரிகை. மழை - (இங்கே) மேக முழக்கம். தொங்கல் - அலங்காரத் தொங்கல். தோகை - மயிலின் தோகை. பிச்சம் -

மயிலின் தோகையால் அலங்கரிக்கப்பட்ட குடை. சுடரை - சூரியனது வெயிலை. திங்கள் - சந்திரன். மருள - மயங்க ; வியக்க. ]

**மந்திர கீத ஓசை, வலம்புரி முழங்கும் ஓசை,**
**அந்தணர் ஆசி ஓசை, ஆர்த்தெழு முரசின் ஓசை,**
**கந்துகோல் களிற்றின் ஓசை, கடிகையர் கவியின் ஓசை,**
**இந்திர திருவன் செல்ல, எழுந்தன திசைக ளெல்லாம்.**

[ வலம்புரி - வலம்புரிச் சங்கு. ஆர்த்து - ஆரவாரித்து. கந்துகோல் - கட்டுத்தறியை முறிக்கின்ற. களிறு - யானை. கடிகையர் - நாழிகை தெரிவித்துக் கவி சொல்லுவோர். இந்திர திருவன் - இந்திரனது செல்வம் போன்ற செல்வத்தையுடையவன். ]

**நோக்கிய திசைக ளெல்லாம் தன்னையே நோக்கிச் செல்ல,**
**வீக்கிய கழற்கால் வேந்தர் விரிந்தகைம் மலர்கள் கூம்பத்**
**தாக்கிய களிறும் தேரும் புரவியும் படைஞர் தாளும்**
**ஆக்கிய தூளி, விண்ணும் மண்ணுல காக்கப் போனான்.**

[ வீக்கிய - கட்டிய. கழல் - வீரக் கழல். கைம்மலர்கள் - கைகளாகிய தாமரை மலர்கள், கூம்ப - குவிய. தாக்கிய - (ஒன்றோடொன்று) மோதிக் கொண்டு போகிற. புரவி - குதிரை. படைஞர் தாள் - காலாட் படைகளின் கால்கள். தூளி - தூசி; புழுதி. ]

வலம்புரிச்சங்கு ஊதுகொம்பு எக்காளம் முழங்க, மங்களகரமான மேளதாளங்களோடும் விருதுகளோடும் வேத கோஷங்களோடும் ஆசிகளோடும் புறப்பட்டுப் போகிறான் சக்கரவர்த்தி, இரவிலும் பகலிலும் யாத்திரை செய்துகொண்டே. 'இந்த இராஜாதி ராஜனுடைய கடாட்சத்திற்கு எப்போது பாத்திரமாவோம்!' என்று திசைகளெல்லாம் தன்னையே நோக்கிச் செல்ல, இவன் பார்வை விழும்போதெல்லாம் இவனையே நோக்கிச் செல்லும் அரசர்களின் கைகள், 'என்ன பாக்கியம் பெற்றோம்!' என்று தாமே

குவிகின்றனவாம். அவனோடு செல்லும் நால்வகைச் சேனைகளும் எழுப்பும் புழுதித்திரள் விண்ணுலகத்தையும் மண்ணுலகமாக்கி விடுகிறதாம்.

சேனை பரிஜனங்களுடன் சென்று, சக்கரவர்த்தி சந்திரசைல மென்ற மலைச்சாரலை யடைந்து மலைவளம் கண்டு களிக்கிறான். மலைச் சாரலில் இரதங்கள் செல்லும் சிறப்பைப் பாருங்கள் :

தெருண்ட மேலவர் சிறியவர்ச் சேரினும், அவர்தம்
மருண்ட புன்மையை மாற்றுவர் எனுமிது வழக்கே :
உருண்ட வாய்தோறும் பொன்னுருள் உரைத்துரைத் தோடி,
இருண்ட கல்லையும் பொன்னிற மாக்கிய இரதம்.

[தெருண்ட - தெளிந்த. மருண்ட - மயங்கிய புன்மை - இழிவு; அசுத்தம். வழக்கு - நெறி; நீதி. வாய் - இடம். பொன்னுருள் - பொன்னாலான சக்கரங்கள். ]

இரதங்களின் பொற்சக்கரங்கள் உருண்ட இடமெல்லாம் பொன்னை உரைத்துக்கொண்டே ஓடுகின்றனவாம். இதனால் இருண்ட பாறுங்கற்களும் பொன்னிறமடைகின்றனவாம். இது, சிறியோரைச் சேர்ந்து அவர்தம் சிறுமையை மாற்றி அவர்களையும் தம்மைப்போலப் பெரியோர்களாக்கிக் கொள்ளும் பெரியோர் தன்மையை ஞாபகப்படுத்துகிறது.

தசரத சக்கரவர்த்தி சேனா சமுத்திரத்துடன் கங்கைக்கரையை அடைந்ததும், ஜனக மன்னன்,

வந்தனன் அரச னென்ன மனத்தெழும் உவகை பொங்கக்
கந்தடு களிறும் தேரும் கலினமாக் கடலும் சூழச்
சந்திரன் இரவி தன்னைச் சார்வதோர் தன்மை தோன்ற,
இந்திர திருவன் தன்னை எதிர்கொள்வான் எழுந்து வந்தான்.

[கந்தடு களிறு - கட்டுத்தறியை முறிக்கிற யானை. கலினம் - கடிவாளம். மா - குதிரை. இரவி - சூரியன். ]

சக்கரவர்த்தி அகமும் முகமும் மலர ஜனகனைத் தழுவிக் கொண்டு க்ஷேமம் விசாரித்தான். பின் இருவரும் மிதிலைநோக்கிச் சென்றார்கள். இராம லட்சுமணரும் மிதிலையிலிருந்து புறப்பட்டுத் தந்தையை எதிர்கொள்ள வந்தார்கள். தசரத ராமர்களுடைய சந்திப்பின் சிறப்பைத்தான் என்னென்று சொல்வது?

காவியும் குவளையும் கடிகொள்கா யாவும்ஒத்(து),
ஓவியம் சுவைகெடப் பொலிவதோர் உருவொடே
தேவரும் தொழுகழற் சிறுவன்,முன் பிரிவதோர்
ஆவிவந் தென்னவந்(து), அரசன்மா டணுகினான்.

[காவி - நீலோற்பல மலர். குவளை - கருங்குவளைமலர். கடி - வாசனை. காயா - காயாம்பூ. ஓவியம் - சித்திரம். கழல் - திருவடி மாடு - இடம்.]

தந்தையிடம் வந்து சேர்ந்த அருமைத் திருமகனின் அருமைத் திருமேனியைச் சிறப்பித்துக் காட்டுவதற்கே பாட்டின் ஒரு பாதியும் போதாதென்று மூன்றாம் அடியிலும் "தேவரும் தொழுகழற் சிறுவன்' என்கிறான். நீல மலர்களையெல்லாம் நினைப்பூட்டும் அந்தத் திருமேனியைப் பார்த்துவிட்டு, சித்திர நிபுணர்கள் தங்கள் மேதாவிலாசம் தோன்ற மிகமிக அழகியதாய்ச் சித்திரிக்கக்கூடிய எந்தச் சித்திர வடிவத்தைப் பார்த்தாலும், 'அந்த இயற்கைச் சௌந்தரியம் எங்கே? இந்தச் சித்திரம் எங்கே? இதில் சுவையில்லையே!' என்று சொல்லத் தோன்றுமாம்.

இத்தகைய தெய்விக சௌந்தரியத்தோடு கூடிய சிறுவன் சமீபமாக வந்ததும், தசரதனுக்கு எப்படியிருந்தது? முன்னே (விசுவாமித்திரரிடம் அடைக்கலமாக ஒப்பித்த நாளில்) பிரிந்துபோன உயிர் திரும்பிவந்து சேர்ந்தாற்போலிருந்ததாம். இதுவரை ஆவி பிரிந்த கூடுபோலிருந்ததாம் சக்கரவர்த்தியின் திருமேனி. விசுவாமித்திரரோடு புறப்பட்ட இராம லட்சுமணர், 'ஐயனும் மன்னன்

இன்னுயிர் வழிக்கொண்டாலென'ப் பிரயாணப்பட்டார்களென்று முன்னமே வருணித்ததை இப்போது ஞாபகப்படுத்திக்கொள்ள வேண்டும். இது கம்பனது நினைவாற்றல் அல்லது ஞாபக சக்தி மட்டுமன்று: கவிச் சிற்பத்திறமென்று சொல்லவேண்டும்.

இராமன் சக்கரவர்த்தியை நெருங்கியதும், சக்கரவர்த்தியின் சேனைகள் இராமனைத் தொழுதன. பிறகு இராமன் தந்தையை வணங்கத் தந்தை மைந்தனைத் தழுவிக்கொண்டான், — 'மலையை முறித்தமலை' என்று சொல்லத்தக்க தோள்கள் தன் மார்பிலே மறையும்படி.

அனிகம்வந்(து) அடிதொழக் கடிதுசென்(று), அரசர்கோன்
இனியபைங் கழல்பணிந் தெழுதலும், தழுவினன்
மனுவெனும் தகையன்மார் பிடைமறைந் தன,மலைத்
தனிநெடுஞ் சிலையிறத் தவழ்தடங் கிரிகளே.

[ அனிகம் - சேனை. கடிது - விரைவாக. பைங்கழல் - பசும்பொன்னால் செய்த வீரக்கழல். மனுவெனும் தகையன் - மனுச் சக்கரவர்த்தி யென்று சொல்லத்தக்க பெருமை வாய்ந்த தசரதன். மலைத் தனி நெடுஞ்சிலை - மேரு மலையாகிய ஒப்பற்ற பெரிய சிவதனுசு. இற - இற்றுப் போகும்படி. தடங் கிரிகள் - பெரிய (தோள்களாகிய) மலைகள். ]

இலட்சுமணன் வணங்க, அவனையும் தசரதன் தழுவிக் கொண்டான். பரதன் இராமனை வணங்க இராமன் அவனைத் தழுவிக் கொண்டான், தசரதன் தன்னைத் தழுவிக் கொண்டது போலவே.

உன்னுபே ரன்புமிக் கொழுகியொத்(து), ஒண்கணீர்
பன்னுதா ரைகள்தரத் தொழுதெழும் பரதனைப்
பொன்னின்மார் புறஅணைத்(து) உயிருறப் புல்லினன்,
தன்னைஅத் தாதைமுன் தழுவின னென்னவே.

[ உன்னு - (எப்போதும்) நினைத்துக் கொண்டிருக்கும். மிக்கு - மிகுந்து. ஒழுகியொத்து - ஒழுகினாற்போல. ஒண்கணீர் - ஒளி பொருந்திய கண்ணீர்.





பன்னு தாரைகள் - நெருங்கியதாரைகள். உயிருற - உயிரோடு பொருந்த, புல்லினுன் - தழுவினுன். தாதை - தந்தை. ]

சக்கரவர்த்தியின் கட்டளைப்படி இராமன் சேனையை நடத்திக் கொண்டு முன்னே சென்றுன். தம்பியர் குதிரை மேல் இருபக்க மும் வர, இராமன் தேர்மீது போய்,

பஞ்சிசூழ் மெல்லடிப் பாவைமார் பண்ணைசூழ்
மஞ்சுசூழ் நெடியமா ளிகையின்வந்(து) இடைவிராய்,
நஞ்சுசூழ் விழிகள்பூ மழையின்மேல் விழநடந்(து),
இஞ்சிசூழ் மிதிலைமா வீதிசென் றெய்தினுன்.

[ பஞ்சி - பஞ்சு ; (இங்கே) செம்பஞ்சுக் குழம்பு. பாவைமார் - சித்திரப் பதுமை போல் அழகிய பெண்கள். பண்ணை - கூட்டம். மஞ்சு - மேகம். இடை விராய் - இடந்தோறும் விரவிப் பொருந்தி. நஞ்சு சூழ் விழிகள் - நஞ்சு சூழ்ந்தாற்போன்ற மைதீட்டிய விழிகள். பூமழையின் மேல் - பூமழை யினும் அதிகமாக. நடந்து - (இங்கே) தேரில் சென்று. இஞ்சி - மதில். மா வீதி - பெரிய வீதிகள். ]

'மஞ்சுசூழ் நெடியமாளிகை' என்று சொல்லும்போதே அந்த உபரிகை வீடுகளின் உயர்வு தொனிக்கிறது. 'நஞ்சுசூழ் விழிகள்' என்றதும் அபாயம் தொனிக்கிறது! அந்த மாளிகைகளின் முன் புறத்திலுள்ள இடங்கள் தோறும் சித்திரப் பதுமைகள் பொருந்தி நின்று அழகு செய்வதுபோல வந்து நிற்கிறுர்களாம் பெண்கள். அவர்கள் இராமனைப் பார்க்க வந்திருக்கிறுர்கள். அவனைக் கண்டதும் பூமழை பொழிகிறுர்கள். அந்தப் பூமழையினும் அதிகமாக அவர் களுடைய 'நஞ்சுசூழ் விழிக'ளும் அவன் மீது விழுகின்றனவாம்.

## 19. பவனி வருதல்

மிதிலா பட்டணத்து வீதியில் இராமன் பவனி வருகிருன். அப்போது அந்த நகரத்துப் பெண்கள் அவனைக் காண்பதற்காக எங்கும் மொய்த்துக்கொள்ளுகிருர்கள்.

மானினம் வருவ போன்றும், மயிலினம் திரிவ போன்றும்,
மீனினம் மிளிர வானின் மின்னினம் மிடைவ போன்றும்,
தேனினம் சிலம்பி ஆர்ப்பச் சிலம்பினம் புலம்பி ஏங்கப்
பூநனை கூந்தல் மாதர் பொம்மெனப் புகுந்து மொய்த்தார்.

[ இனம் - கூட்டம். மீன் - நட்சத்திரம். மிளிர - ஒளிர. மின் - மின்னல் மிடைவ - நெருங்குவன. தேன் - வண்டு. சிலம்பி - ஒலித்து; (இங்கே) ரீங்காரஞ் செய்து. ஆர்ப்ப - ஆரவாரிக்க. சிலம்பு - பெண்களின் காலணி. பொம்மென - **போம்** என்னும் ஓசை யுண்டாக; விரைவாக. ]

மிதிலைப் பெண்கள் கூட்டங் கூட்டமாக வருகிருர்கள். சிலர் மான்களின் கூட்டம் வருவதுபோல மருண்ட பார்வையோடு வருகிருர்கள். சிலர் மயில்கள் கூட்டமாகச் சஞ்சரிப்பதுபோலவும், தோகை விரித்தாடுவதுபோலவும், தங்கள் சாயல் இனிது வெளிப்படுமாறு அங்குமிங்கும் திரிந்துகொண்டிருக்கிருர்கள். சில பெண்கள் வானளாவிய மேல்மாடங்களிலிருந்து வீதியை நோக்கிக்கொண்டிருக்கிருர்கள். அவர்கள் வானவீதியில் வைர மணிகளைப்போல் மிளிரும் நட்சத்திரக் கூட்டங்களைப்போல் காண்கிருர்கள். சில பெண்கள் மேல் மாடங்களில் மின்னற்கொடிகள் நெருங்கி நிற்பது போலக் கூடி நின்று பார்த்துக்கொண்டிருக்கிருர்கள். இவ்வாறு பொம்மெனப் புகுந்து மொய்த்துக்கொண்டபோது, இவர்கள் அணிந்

துள்ள பூக்களிலும் பூமாலைகளிலும் மொய்த்துள்ள வண்டுகள் கூட்டங் கூட்டமாக ரீங்காரஞ் செய்கின்றனவாம்; கால்களில் அணிந்துள்ள சிலம்பு முதலான அணிகள் புலம்பி ஏங்குகின்றனவாம்.

தேனை நுகர வரும் வண்டுகள் போல மொய்த்துக் கொள்ளும் அந்தப் பெண்மணிகள் இராமனைக் காணவரும் ஆத்திரம்தான் என்ன? இவர்களைப் பெண்குலத்தின் அருமையான ஆபரணங்கள் என்கிறான் கவிஞன்.

**விரிந்துவீழ் கூந்தல் பாரார், மேகலை அற்ற நோக்கார்,**
**சரிந்தபூந் துகில்கள் தாங்கார், இடைதடு மாறத் தாழார்,**
**நெருங்கினர், நெருங்கிப் புக்கு, 'நீங்குமின்! நீங்கும்!' என்றென்(று),**
**அருங்கலம் அனைய மாதர் தேன்நுகர் அளியின் மொய்த்தார்.**

[அற்ற - அறுந்து சிந்துவன. பூந்துகில் - பூப்போல் மெலிந்த பட்டாடை. தாழார் - தாமதியாதவர்களாய். அருங்கலம் - பெறுதற்கு அரிய ஆபரணம். அளியின் - வண்டுகள்போல. ]

இவ்வளவு பரபரப்பாக வந்து மொய்த்தவர்கள் இராமனைப் பார்த்ததும், எப்படிப்பட்ட மனநிலையை அடைகிறார்கள்?

**'கண்ணினால் காத லென்னும் பொருளையே காண்கின் றேம்; இப்**
**பெண்ணின்நீர் மையினால் எய்தும் பயன்இன்று பெறுதும்' என்பார்:**
**மண்ணும்நீர் உலந்து வானும் மழையற வறந்த காலத்(து),**
**உண்ணுநீர் கண்டு வீழும் உழைக்குலம் பலவும் ஒத்தார்.**

[ பொருள் - (இங்கே) குணம்; உண்மைக் கருத்து. பெண்ணின் நீர்மை - பெண்தன்மை, பெண்மை. பெறுதும் - பெறுவோம். வறந்த - வறண்ட. வீழும் - விழும். உழை - மான். குலம் - கூட்டம். ]

புருஷோத்தமனான இராமனைப் பார்த்ததும், ஒரு புருஷனைப் பார்ப்பது போலவா தோன்றுகிறது அப்பெண்களுக்கு? 'காதலென்ற

பொருளையே காண்கிறோம்!' என்று தோன்றுகிறதாம். யார் யார் எந்த எந்த அழகைக் காதலிக்கிறாரோ, அந்த அந்த அழகு களெல்லாம் இராமனிடம் காணப்படுகின்றனவாம். இராமனே தங்கள் அகக் காதலின் உருவம்; இராமனே காதலின் உண்மை அல்லது உண்மைக் கருத்து: காதலின் தத்துவமே இராமனாக வடிவம் பெற்று வருகிறது — என்றெல்லாம் எண்ணுகிறார்கள். 'இதுவரை கண்ணால் காணாத காதலென்ற பொருளையே இன்று கண்ணால் பார்க்கிறோம்: என்ன பாக்கியம் பெற்றோம்! நாம் பெண்ணாகப் பிறந்ததால் பெறக் கூடிய பயனை இன்றுதான் பெறுகிறோம்!' என்று கருதுகிறார்கள் மிதிலைப் பெண்கள்.

இத்தகைய நிலையிலுள்ளவர்கள் நெருங்கி வந்து இராமன் அழகை நோக்குவது எப்படி யிருக்கிறது? பூமியில் எங்கும் நீர்வற்றி வானமும் மழை பெய்யாமல் வறட்சி உண்டான காலத்திலே, தாகத் திற்குத் தண்ணீர் கிடையாமல் தவித்துக் கொண்டிருக்கும் மான்கள் ஓரிடத்தில் அருமையாகக் கிடைக்கிற நல்ல தண்ணீரைப் பார்த்து விட்டால், எவ்வளவு ஆசையோடு கூட்டங் கூட்டமாக வந்து விழும்! அப்படி வந்து கூடுகின்றனவாம் மாதர் கூட்டங்களும்.

அதோ ஓடிவருகிறார்களே, அந்தப் பெண்களைப் பாருங்கள். என்ன வேகம்! ஆ, என்ன ஆசை!

பள்ளத்துப் பாயும் நன்னீர் அனையவர், பானல் பூத்த
வெள்ளத்துப் பெரிய கண்ணார், மென்சிலம்(பு) அலம்பு மென்பூத்
தள்ளத்தம் இடைகள் நோவத் தமைவலித்(து) அவன்பாற் செல்லும்
உள்ளத்தைப் பிடித்தும் நாமென்(று) ஓடுகின் றாரும் ஒத்தார்.

[பானல் - கருங்குவளைப்பூ. வெள்ளத்துப் பெரிய கண்ணார் - வெள்ளத்தினும் பெரிய கண்களையுடையவர்கள். மென்சிலம்பு அலம்பு மென்பூ - மெல்லிய சிலம்புகள் ஒலிக்கும் மெல்லிய பூவை ஒத்த பாதங்கள். தள்ள - தள்ளாட. வலித்து - இழுத்து. பிடித்தும் - பிடிப்போம்.]

பொருளையே காண்கிறோம்!' என்று தோன்றுகிறதாம். யார் யார் எந்த எந்த அழகைக் காதலிக்கிறாரோ, அந்த அந்த அழகு களெல்லாம் இராமனிடம் காணப்படுகின்றனவாம். இராமனே தங்கள் அகக் காதலின் உருவம்; இராமனே காதலின் உண்மை அல்லது உண்மைக் கருத்து: காதலின் தத்துவமே இராமனாக வடிவம் பெற்று வருகிறது — என்றெல்லாம் எண்ணுகிறார்கள். 'இதுவரை கண்ணால் காணாத காதலென்ற பொருளையே இன்று கண்ணால் பார்க்கிறோம்: என்ன பாக்கியம் பெற்றோம்! நாம் பெண்ணாகப் பிறந்ததால் பெறக் கூடிய பயனை இன்றுதான் பெறுகிறோம்!' என்று கருதுகிறார்கள் மிதிலைப் பெண்கள்.

இத்தகைய நிலையிலுள்ளவர்கள் நெருங்கி வந்து இராமன் அழகை நோக்குவது எப்படி யிருக்கிறது? பூமியில் எங்கும் நீர்வற்றி வானமும் மழை பெய்யாமல் வறட்சி உண்டான காலத்திலே, தாகத் திற்குத் தண்ணீர் கிடையாமல் தவித்துக் கொண்டிருக்கும் மான்கள் ஓரிடத்தில் அருமையாகக் கிடைக்கிற நல்ல தண்ணீரைப் பார்த்து விட்டால், எவ்வளவு ஆசையோடு கூட்டங் கூட்டமாக வந்து விழும்! அப்படி வந்து கூடுகின்றனவாம் மாதர் கூட்டங்களும்.

அதோ ஓடிவருகிறார்களே, அந்தப் பெண்களைப் பாருங்கள். என்ன வேகம்! ஆ, என்ன ஆசை!

**பள்ளத்துப் பாயும் நன்னீர் அனையவர், பானல் பூத்த**
**வெள்ளத்துப் பெரிய கண்ணர், மென்சிலம்(பு) அலம்பு மென்பூத்**
**தள்ளத்தம் இடைகள் நோவத் தமைவலித்(து) அவன்பாற் செல்லும்**
**உள்ளத்தைப் பிடித்தும் நாமென்(று) ஓடுகின் றாரும் ஒத்தார்.**

[பானல் - கருங்குவளைப்பூ. வெள்ளத்துப் பெரிய கண்ணர் - வெள்ளத்தினும் பெரிய கண்களையுடையவர்கள். மென்சிலம்பு அலம்பு மென்பூ - மெல்லிய சிலம்புகள் ஒலிக்கும் மெல்லிய பூவை ஒத்த பாதங்கள். தள்ள - தள்ளாட. வலித்து - இழுத்து. பிடித்தும் - பிடிப்போம்.]

. பள்ளத்திலே பாயும் தண்ணீர்போல் இராமனை நோக்கி ஓடுகிற தாம் அவர்கள் உள்ளம். 'நன்னீர் அனையவர்' என்பதால், புருஷோத்தமனான இராமனிடத்தே வந்து விழும் உள்ளம் நல்ல உள்ளம் — சுத்தமான உள்ளம் என்பது குறிப்பு. இப்படி அவர்கள் ஓடி வரும்போதே அந்தக் கண்கள் நீலமலர்போல மலர்ந்து பார்க்கின் றனவாம். ஆம், அழகிலும் மென்மையிலும் மலர்ச்சியிலும் குளிர்ச்சி யிலும் நீலமலர்கள். ஆனால் அந்த நீலம் கடல்வெள்ளத்தையும் ஞாபகப்படுத்துகிறது. 'கடல்வெள்ளத்தினும் பெரிய கண்கள்' என்று சொல்லத் தோன்றுகிறது.

அவர்கள் பாதங்களையோ 'மென்சிலம்பு அலம்பு மென்பூ' என்றுதான் சொல்லத் தோன்றுகிறதாம். நீல மலர்போன்ற கண்கள் கடலினும் பெரிய கண்களாய்ப் பிரகாசிக்க, தாமரை மலர் போன்ற பாதங்கள் தள்ளாட, இடை நோவ ஓடிவருகிறார்கள். ஏன் இந்த ஓட்டம்? அவர்கள் உள்ளம் அவர்களை இழுத்துக்கொண்டு முன்னே ஓட, 'அந்த உள்ளத்தை நாம் பிடிப்போம்! அதை அவசியம் பிடித்துக் கொள்ளவேணும்!' என்று அதைத் தொடர்ந்து ஓடுகிறவர்களைப் போல் ஓடி வருகிறார்களாம். இராமனைக் காணும் பொருட்டு மனோவேகமாக வரும் ஆத்திரத்தையும் ஆசையையும் அழகையும் எவ்வளவு அதிசயமாகக் காட்டுகிறான் கவிஞன்!

சீதைக்காக வில் முறித்த தோளையும், அகலிகைக்குச் சாப விமோசனம் அருளிய தாளையும் காண அவ்வளவு ஆத்திரமும் வேண்டியதுதானே!

அரத்தம்உன் டனைய மேனி அகலிகைக்(கு) அளித்த தாளும்,
விரைக்கருங் குழலிக் காக வில்லிற நிமிர்ந்து வீங்கும்
வரைத்தடந் தோளும் காண, மறுகினின் விழு மாதர்,
இரைத்துவந்(து) அமிழ்தின் மொய்க்கும் ஈயினம் என்ன லானர்.

[அரத்தம் உண்டு அனைய - செந்நிறத்தை உட்கொண்டாற் போன்ற அளித்த - அருள் செய்த. விரை - வாசனை. கருங்குழலி - கரிய கூந்தலை

யுடைய சீதை. வரைத்தடந் தோள் - மலைபோன்ற பெரிய தோள். மறுகு - வீதி. இரைத்து - ஒலித்து. ஈ - (இங்கே) வண்டு. ]

தம்மைப்போன்ற இரு பெண்களுக்கு நன்மை செய்த தாளையும் தோளையுங் குறித்து விசேஷமாய்க் கேள்விப்பட்டிருந்ததால், அவற்றைக் காண விரும்பி வந்தார்கள். 'இரைத்துவந்(து) அமிழ்தின் மொய்க்கும் ஈயினம் என்ன லானர்' என்பதால், பெண்கள் இராமனது வீரத்தையும் அருளையும் புகழ்ந்துகொண்டே வந்தார்களென்றும், அமிர்தத்தைப் பருக ஆரம்பித்ததும் வண்டுகள் ரீங்காரத்தை நிறுத்தி விடுவதுபோல் இவர்களும் இராமாமிர்தத்தைக் கண்களால் பருகத் தொடங்கியதும் பேச்சை நிறுத்தி விடுகிறார்க ளென்றும் ஊகஞ் செய்யலாம்.

இமை கொட்டினாலும் அச்சமயத்தில் இந்த அழகின் காட்சி மறை படுமேயென்று கண்களை மலர 'விழித்து இமையாது' நின்று பார்த்துக்கொண்டே யிருக்கிறார்களாம். என்ன ஆச்சரியம்! வீதி வழியாகச் செல்லுகிறவன் இப்போது இந்தப் பெண்களின் கண் வழியாகச் செல்லுகிறானும், தேரோடும், தாவிப் பாயும் அந்தக் குதிரைகளோடும்.

> வீதிவாய்ச் செல்கின் றான்போல், விழித்திமை யாது நின்ற
> மாதரார் கண்க ளூடே வாவுமான் தேரிற் செல்வான்,
> யாதினும் உயர்ந்த தன்னை 'யாவர்க்கும் கண்ண' னென்றே
> ஓதிய பெயர்க்குத் தானே உட்பொருள் உணர்த்தி விட்டான்.

[ வீதிவாய் - தெருவில். வாவும் - தாவும். மான் - (இங்கே) குதிரை. ]

'கருநிறமுடையவன்' 'யாவர் மனத்தையும் ஆகர்ஷிப் பவன்' என்று பொருள்படும் 'கிருஷ்ணன்' என்ற வடமொழிச் சொல்லின் திரிபாகக் 'கண்ணன்' என்றபெயர் தமிழில் வழங்குகிற தென்பர். இப்பெயரைத் தமிழாகவே கொண்டு 'ஞானக் கண்ணை அளிப்பவன்' 'கண்ணோட்டமாகிய அருளையுடையவன்' 'யாவர்க்கும்

கண்ணைப்போல் அருமையாயிருப்பவன்' என்றெல்லாம் பொருள் சொல்வதுமுண்டு. இப்போது இந்த அருமைப் பெயருக்கு, 'பெண்களின் கண்களுக்குள்ளே செல்லுகிறவன்' என்பதுதான் உட்பொருள் என்று அந்தக் கண்ணனே உணர்த்திவிடுகிறானும்.

இரதம் போய்க்கொண்டே யிருக்கிறது; ஊர்வலமாக மெல்லப் போய்க்கொண்டே யிருக்கிறது. ஆனால் 'அது மனோவேகத்திலும் அதிவேகமாய்ப் போகிறதே! சிறிதும் தங்காமல் இன்று இப்படிப் போய்க்கொண்டே யிருக்கிறதே!' என்று பெண்கள் காதலால் தங்களுக்குள்ளே வருந்தி மயங்குகிறார்களாம்.

எண்கடந்(து), அல்கி லா(து)இன்(று) ஏகுறும் இவன்தே ரென்று,
பெண்கள்தாம் தம்மில் நொந்து பேதுறு கின்ற காலை,
மண்கடந்(து) அமரர் வைகும் வான்கடந் தானைத் தான்தன்
கண்கட வாது காத்த காரிகை பெரிய ளேகாண்!

[எண் - மனம். அல்கிலாது - தங்காமல். ஏகுறும் - செல்லாநிற்கும். பேதுறுகின்ற காலை - மயங்குகின்றபோது. அமரர் - தேவர். காரிகை - அழகுடைய சிறந்த பெண்; (இங்கே) சீதை.]

தம் பார்வைக்கு எட்டாத தூரம் இராமன் சென்றபோது, 'ஐயோ! இன்னும் நீடித்துக் காட்சி அளித்தானில்லையே!' என்று பெண்களெல்லாம் மயங்கி நிற்க, ஒரு மாது அவனைக் கண்ட அந்த க்ஷணமே தன் கண்ணுள் அடக்கி அதனை அவன் கடந்து போகாமல் காவல் செய்து கொண்டாளாம். அந்தச் சீதையின் பெருமையே பெருமை யென்பது கவிக்கூற்று.

'இராமனையே பார்த்துக்கொண்டிருக்கும் அந்தக் கண்களின் கருமையைத்தான் என்னென்பது? அக்கருங் கண்கள் இந்த மேனியின் ஒளி தோய்ந்துதான் அப்படியாகி விட்டனவோ? அல்லது அவர்கள் கண்ணொளி பாய்ந்துதான் இந்த மேனி இப்படி யாகிவிட்டதோ? ஒன்றும் தெரியவில்லையே!' என்று அதிசயிக்கிறான் கவிஞன்.

பஞ்சணி விரலி னூர்தம் படைநெடுங் கண்க ளெல்லாம்
செஞ்செவே ஐயன் மெய்யிற் கருமையைச் சேர்ந்த வோதான் ?
அஞ்சன மேனி யான்தன் அணிநிறம், மாத ரார்தம்
அஞ்சன நோக்கம் போர்க்க இருண்டதோ ? அறிகி லேமால் !

[ பஞ்சு அணி - செம்பஞ்சுக்குழம்பை அணிந்த. படைநெடுங்கண்கள் - ஆயுதம் போன்ற கண்கள். செஞ்செவே - மிகவும் செவ்வையாக. போர்க்க - போர்வைபோல் மூட. ]

என்று பிரமிக்கும்படி அந்தக் காட்சி அப்படியே வந்துவிடுகிறது கவிஞன் கண்களுக்குமுன்.

தங்கள் கண்களாகிய படைகள் அந்த அஞ்சன மேனியில் ஊன்றிப் பதியும்படி பார்த்துக்கொண்டே யிருக்கிறார்களாம், பெண்கள் யாவரும். ‘அதனால்தான் இந்த அஞ்சனமேனி அணிந்திருக்கும் திருநிறம் அந்த அஞ்சனம் தீட்டிய கண்களுக்கும் அப்படியே வந்துவிட்டதோ? அல்லது அந்த அஞ்சன நோக்கமே போர்வையாகி இந்த மேனியைப் போர்த்துத் தன்னிறமாக்கிக் கொண்டதோ?’ என்கிறான்.

இனி அந்தப் பெண்கள் கூட்டத்தில் ஒருத்தியைச் சுட்டிக் காட்டுகிறான் கவிஞன். ஏதோ ஒரு போர்க்களத்தில் நிற்பதுபோ லிருக்கும் அவளுடைய அவஸ்தையைத்தான் என்னென்பது ?

மாந்தளிர் மேனி யாளோர் வாணுதல், மதனன் எங்கும்
பூந்துணர் வாளி மாரி பொழிகின்ற பூசல் நோக்கி,
‘ வேந்தர்கோன் ஆணை நோக்கான், வீரன்வில் ஆண்மை பாரான் :
ஏந்திழை யாரை எய்வான் யாவனோ ஒருவன் ?’ என்றாள்.

[ வாணுதல் - வாள்நுதல் - ஒளி பொருந்திய நெற்றியையுடைய பெண். பூந்துணர் - பூங்கொத்து. வாளி மாரி - பாண வர்ஷம். பூசல் - போர். வேந்தர்கோன் - (இங்கே) ஜனக மகாராஜன். ஏந்திழையார் - தரித்த ஆபரணங்களையுடைய (மெல்லிய) பெண்கள். ]

'மாந்தளிர்போலச் சிவந்த மெல்லிய மேனியாயிற்றே!' என்றும் இரக்கப்படவில்லையாம்: 'என்ன ஒளி வீசும் நெற்றி!' என்று அந்த அழகிற்கும் அனுதாபமில்லையாம் மன்மதனுக்கு. சரமாரி பொழிந்து போர் புரிகிறானும். இந்த நிலையில் அந்த மாது, 'என்ன? எளியாரை வலியார் நலியாது காக்கும் ஜனக மகாராஜாவின் ஆணையையும் நோக்கவில்லை; சுத்தவீரனான இராமனது வில்லாண்மையையும் பார்க்கவில்லை: அச்சமில்லாமல், நாணமில்லாமல், இரக்கமில்லாமல் அபலைகளான மகளிர்மீது அம்பு எய்கிறானே, அவன் யாரோ?' என்கிறாள்.

வேறொருத்தி, அதோ எழுதிவைத்த சித்திரம்போல் நிற்கிறாளே, அவள் நிலையைச் சற்றுக் கவனிப்போம்.

சொன்னலம் கடந்த காமச் சுவையையோர் உருவ மாக்கி,
இன்னலம் தெரிய, வல்லான் எழுதிய தென்ன நின்றாள்,
பொன்னையும் பொருவும் நீராள், புனைந்தன எல்லாம் போகத்
தன்னையும் தாங்க லாதாள், துகிலொன்றும் தாங்கி நின்றாள்.

[சொன்னலம் - சொல் நலம். இன்னலம் - இனிமையோடு கூடிய அழகு. தெரிய - தெரியும்படி. வல்லான் - நிபுணனான சித்திரிகன். பொருவும் - ஒக்கும். நீராள் - நீர்மை அல்லது தன்மையுடையவள். புனைந்தன - அணிந்திருந்த ஆபரணங்கள்.]

சொல்லின் நலங்களை யெல்லாம் கடந்த காதற் சுவையையே ஓர் உருவமாக்கி, 'இனிமையோடு கூடிய அழகு இதுதான்!' என்று தெரியும்படி நிபுணனான சித்திரிகன் ஒருவன் சித்திரித்து வைத்த சித்திரமென்று சொல்லும்படி நிற்கிறாள் அவள். இராமனைக் கண்ட பரவசத்தால், அணிந்திருந்த ஆபரணங்களெல்லாம் நெகிழ்ந்து நீங்கத் தன்னையே தாங்கமாட்டாதவளாய் நிற்கிறாள். 'தன்னையும் தாங்க லாதாள், துகிலொன்றும் தாங்கி நின்றாள்!' என்று கூறும் கவிநயம் ரஸிகத்தன்மையின் வரம்பாக மதிக்கத்தக்கது.

ஒருத்தி, ஊன்றிய உள்ளத்தோடு, இராமனையே யன்றி வேறொன்றையும் காணுதவளாய், 'படைகளோடு எவ்வளவோ வைபவத்துடன் வரவேண்டிய இவன் தனியனாக வருவானேன் ?' என்கிறாளாம். பரவசம் பைத்தியமாகிறது !

விற்றங்கு புருவம் நெற்றி வெயர்வரப் பசலை விம்மச்
சுற்றெங்கும் எறிப்ப, உள்ளம் சோர,ஓர் தோகை நின்றாள்,
கொற்றஞ்செய் கொலைவே லென்னக் கூற்றெனக் கொடிய கண்ணாள்,
மற்றொன்றும் காண்கி லாதாள், ' தமியனோ வள்ளல் ?' என்றாள்.

[ விற்றங்கு - வில் தங்கு - வில்லின் தன்மை பொருந்திய. வெயர் - வேர்வை. பசலை - பசப்புநிறம். விம்ம - நிறைய; மிகுதியாக. சுற்றெங்கும் - சுற்று எங்கும் - சுற்றிடம் எங்கும். எறிப்ப - விளங்க. கொற்றம் - வெற்றி. கூற்று - யமன். தமியன் - தனியன். ]

இராமனைக் கண்ட அந்தக் கண்களால் வேறொரு பொருளையும் காணமுடியவில்லையாம். எனவே அவனுடன் சென்ற சேனைமுதலிய வற்றை இவள் கண்டாளில்லை ! 'தன்னந்தனியனோ வள்ளல் ?' என்று இரக்கப்படுகிறாள் ; அந்தத் தனிமைக்காகக் கவலைப்படுகிறாள். தானே கருணை கூர்ந்து வீதிவழியே வந்து அந்த அழகை யாவரும் கண்ணாரக் கண்டு களிக்கும்படி உபகரித்தருளிய வள்ளன்மை நோக்கி 'வள்ளல்' என்கிறாள்.

அதோ அவளுடைய காதற்பைத்தியம் இன்னும் எவ்வளவோ அதிகமாகிறது !

மைக்கருங் கூந்தற் செவ்வாய் வாணுதல் ஒருத்தி, உள்ளம்
நெக்கென உருகு கின்றாள், ' நெஞ்சிடை வஞ்சன் வந்து
புக்கனன் ; போகா வண்ணம் கண்ணெனும் புலங்கொள் வாயில்
சிக்கென அடைத்தேன் தோழி ! சேருதும் அமளி !' என்றாள்.

[ மை - மேகம். வாணுதல் - வாள்நுதல் - ஒளி பொருந்திய நெற்றி. நெக்கென - நெகிழ்ந்ததாக. புலம் - இந்திரியம். வாயில் - வாசல். சிக்கென - உறுதியாக. அமளி - படுக்கை. ]

இவள் இராமனைக் கண்ட தன் கண்களைக் கைகளால் இறுகப் பொத்திக்கொள்ளுகிறாள். பிறகு தோழியை அழைத்து, 'கண்வழி நுழைந்த கள்வன் வெளியே தப்பிப் போகாதபடி அவன் நுழைந்த அந்த வாசலைச் சிக்கென அடைத்து விட்டேன்!' என்கிறாள். கண்களைச் சிக்கென மூடிக்கொண்டதால், கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு போய் அமளியில் சேர்க்கவேணுமென்று தோழியைக் கூப்பிடுகிறாள். 'சேருதும் அமளி' என்பதால், இவள் சுக துக்கங்கள் தோழிக்கும் சுக துக்கங்கள் என்பது குறிப்பு. ஆம், பைத்தியத்திலும் பல ரகம்!

அதோ அந்தக் கண்களிலேயே ஒரு காதல் - நாடகம். என்ன களிப்பு! என்ன செருக்கு! அந்த நீண்ட கண்கள் எவ்வளவு கள்ளத்தை ஒளித்து வைக்கின்றன! ஒரு சமயம் அவை வெளிப்பட்டு ஓடப் பார்க்கின்றன! — என்று தோன்றுகிறது. ஒரு சமயம் அந்த வெண்மைதான் எவ்வளவு சுத்தமான பார்வைக்கு அறிகுறியாகக் காண்கிறது! நல்லது: அவள் ஏன் திடீரென்று தன் மாளிகைக்குள்ளே போய்விடுகிறாள்?

**களிப்பன, மதர்ப்ப, நீண்டு கதுப்பினை அளப்ப, கள்ளம்**
**ஒளிப்பன, வெளிப்பட்(டு) ஓடப் பார்ப்பன, சிவப்(பு)உள் ஊறி**
**வெளுப்பன, கறுப்ப வான வேற்கணாள் ஒருத்தி, உள்ளம்**
**குளிர்ப்பொடு காண வந்தாள்; வெதுப்பொடு கோயில் புக்காள்.**

[ மதர்ப்ப - இறுமாப்பைக் காட்டுவன. கதுப்பினை - கன்னத்தை. சிவப்பு - (இங்கே, உத்தம லட்சணமான சில ரேகைகளின்) சிவந்த நிறம். கறுப்பவான - கறுத்திருப்பனவுமான. வேற்கணாள் - வேலாயுதம் போன்ற கண்களை யுடையவள். கோயில் - வீடு. ]

இந்தப் பாட்டை அந்தக் காதல் ததும்பும் விழியிலே மிதந்து வந்த கவிதை யென்றே சொல்லலாம். பாட்டின் மூன்றடிகளாலும் கண்ணைச் சிறப்பித்துக்கொண்டே வந்து பளிச்சென்று அந்த

'வேற்கணுள்......குளிர்ப்பொடு காண வந்தாள்; வெதுப்பொடு கோயில் புக்காள்' என்று பாட்டின் முக்கியமான கருத்தை முடிப்பது எவ்வளவு சாதுரியமாயிருக்கிறது!

இப்படியெல்லாம் அந்த அழகைக் கண்டு மோகித்துப் போனவர்களெல்லாம் அந்த வடிவழகு முழுவதையும் பார்த்தார்களா? அதுதான் இல்லை!

**தோள்கண்டார் தோளே கண்டார்; தொடுகழற் கமலம் அன்ன**
**தாள்கண்டார் தாளே கண்டார்; தடக்கைகண் டாரு மஃதே:**
**வாள்கொண்ட கண்ணார் யாரே வடிவினை முடியக் கண்டார்?**
**ஊழ்கொண்ட சமயத்(து) அன்னான் உருவுகண் டாரை ஒத்தார்.**

[தொடு கழல் - அணிந்த வீரக்கழல். கமலம் - தாமரைப் பூ. தடக்கை - பெரிய கை. வாள்கொண்ட கண்ணார் - வாளை யொத்த கண்களையுடைய பெண்கள். ஊழ் - முறைமை; குணம். சமயத்து - சமயங்களில்.]

வில்லிறுத்த தோளைக் கண்டவர்கள் தோளழகில் ஈடுபட்டு அந்த அழகையே நோக்கிக்கொண்டிருந்தார்களாம். அகலிகைக்கு அருள் செய்த அடிமலரைக் கண்டவர்கள் அந்தத் தாளழகையே நோக்கிக்கொண்டிருந்தார்களாம். கையழகை நோக்கியவர்களும் அப்படியே. அம்மாதர்களில் யாரே அந்த வடிவை முடியக் கண்டவர்கள்? எனினும் அவரவர் கண்ட அழகே அழகென்று நினைத்து விட்டார்களாம். ஸர்வேச்வரனுடைய ஏதோ ஒரு 'முறை' அல்லது 'குண'த்தை வெளியிடும் தத்தம் மதங்களிலேயே முழு உண்மையும் அடங்கி விட்டதென்று வாதிக்கும் பலவேறு சமயிகளின் நிலைதான் அந்தப் பெண்களின் நிலையும் என்கிறான் கவிஞன்.

'ஒவ்வொரு மதமும் கடவுளின் ஏகதேசமான ஒரு அழகையோ, ஒரு குணத்தையோ, ஒரு சக்தியையோ கண்டு மயங்குகிறதன்றி, முழுத்தோற்றத்தையும் ஸர்வ சக்தியையும் அறிந்தபாடில்லை' என்பது கம்பன் மதம். தோள்கண்டவர் தோளே அழகியதென்று



26

கருதியதுபோல, ஒருமதத்தார் தாம் கண்ட உண்மையின் அம்சமே மிகச் சிறந்ததென்று கருதுகிறார்கள். இராமனது ஒவ்வோர் உறுப்பும் வசீகரமான அழகு வாய்ந்தது: அப்படியே எம்பெருமானைக் காண முயலும் ஒவ்வொரு பெருஞ்சமயத்திலும் உண்மைப் பொருளின் ஏகதேசமான அழகு வசீகரமாகப் பிரகாசிக்கிறது. இராமனைக் கண்ட மிதிலைப் பெண்களில் அந்த வடிவினை முடியக் கண்டவரில்லை. யானை கண்ட குருடர் போலத்தான் அவர்களும் இராமனைக் கண்டார்கள். உண்மையில், 'என்தெய்வம்! உன்தெய்வம்!' என்று உண்மைப் பொருளை முகமுகமாய்க் கண்டுவிட்டவர்கள் போலப் பூசலிடும் சமய வாதிகளின் நிலையும் இதுதானே. இத்தகைய சர்வ சமய சமரச உண்மையைக் கம்பன், இராமனைக் கண்ட மிதிலைப் பெண்களின் நிலையிலிருந்து வெளிப்படுத்துவதுபோல், காவிய முகப்பிலேயே சரயுநதியின் போக்கிலிருந்தும் வெளிப்படுத்திக் காட்டியதை ஞாபகப்படுத்திக் கொள்ளவேண்டும்.

இராமனது வடிவினை முடியக் கண்டவருமில்லை; ஒவ்வோர் உறுப்பின் அழகையே முடியக் கண்டவருமில்லை! (சமய வாதிகளில் தான் யாரே தத்தம் சமய உண்மைகளையாவது முடியக் கண்டார்?) இப்பெண்களில் ஒவ்வொருத்தியின் நிலையும் ஒரு இதிகாசம் என்று சொல்லும்படி வருணிக்கப்படுகிறது.

அதோ ஒருத்தி விசேஷ உணர்ச்சிநலம் வாய்ந்தவள். தானே அழகின் ராணியென்று இறுமாந்திருப்பவள். எத்தனையோ நெஞ்சங்களை எளிதில் சூறையாடி வெற்றி சூடியவள். தனது பேரழகால் இன்றும் ஜயமடையலாம் என்ற பெருநம்பிக்கையோடு வருகிறாள். அவளுக்குப் பின் தோழிகளும் வருகிறார்கள். தன் அழகை எடுத்துக் காட்டும் சில ஆபரணங்களை ஆராய்ந்தெடுத்து அணிந்திருக்கிறாள். அவள் வரும்போது கூந்தல் மிகுந்த பாரத்தால் அசைந்து கொண்டிருக்கிறது.

அவளுடைய நடையழகைத்தான் என்னவென்று சொல்வது! பூங்கொம்பிற்கு உள்ள அழகு போதாதென்று அதற்குப் புதிய

அழகும் உயிரும் பெய்துவிட்டால் அது எப்படி விளங்குமோ, அப்படி விளங்குகிருள் அவள் : அத்தகைய பூங்கொம்பு ஒன்று நடை பயில்வதுபோல நடந்து வருகிருள். அவளுடைய காலணி யாகிய சிலம்பும், மேகலையாகிய இடையணியும் அவள் வருகையைக் கட்டியங் கூறி அறிவிப்பதுபோல முன்கூட்டி முழக்குகின்றன. அந்த நடையில்தான் என்ன கம்பீரம்! என்ன உல்லாசம்! என்ன இறுமாப்பு! இந்தக்காட்சியைக் கம்பன்,

'அலம்பு பாரக் குழலியோ ராயிழை
சிலம்பும் மேகலை யும்மொலி செய்திட,
நலம்பெய் கொம்பின் நடந்துவந் தெய்தினுள்'

[ அலம்பு - அசைகிற. குழலி - கூந்தலையுடையவள். ஓர் ஆயிழை - ஆராய்ந்து அணிந்த ஆபரணங்களையுடைய ஒரு பெண். நலம் - அழகு. கொம்பின் - பூங்கொம்புபோல. ]

என்ற மூன்றடிகளில் வருணிக்கிருன்,

பிறகு அவள் இராமனைக் காண்பதையும், இவ்வளவு கம்பீரமாக வந்து சேர்ந்தவள் அடைந்த நிலையையும், கடைசி அடியாகிய ஒரே சிறு வாக்கியத்தில் அமைத்துக் காட்டுகிருன்,

'புலம்பு சேடியர் கைம்மிசைப் போயினுள்!'

என்று.

மேலே சொன்னபடி அழகின் அதிகார முத்திரையோடும், ஆடம்பர வைபவத்தோடும் வீட்டிலிருந்து வந்தவள் இராமனைக் கண்டபின், புலம்பிக்கொண்டிருக்கிற தோழிமாரது கைகளின் மேலே சென்ருளாம். அதாவது, தோழிமார் இரண்டு பக்கத்திலும் கைகொடுத்துத் தாங்க, அக்கைகளின் ஆதாரத்திலே சென்ருளாம், தன் வீட்டுக்குள்ளே. இம்மாதரசி இராமனைக் காண்பதும், மயல் கொண்டு அந்த உணர்ச்சிமிகுதியால் வசமிழந்து மூர்ச்சை யடைவதும், இதைக் கண்டு 'ஐயோ! எமது தலைவிக்கு என்னுகுமோ?'

என்று தோழியர் சோகித்து வருந்துவதும் வெளிப்படையாகக் கூறப் படாமல் நமது ஊகத்திற்கே விடப்படுகின்றன.

இப்படிப் பெண்கள் பலரும் இராமனது எல்லையில்லாத சௌந்தரியத்தில் ஈடுபட்டுக் காதல் கொண்ட நிலையை வருணித்துக் கொண்டு போகும்போதே கவிஞன், காதற் கடவுளான மன்மதனது கை சலியாத அந்தப் போர்த் திறத்தை வாசகர்களுக்குச் சிறிதும் சலிப்பு ஏற்படாதபடி எவ்வளவு ரஸமாக ஞாபகப்படுத்துகிறான், பாருங்கள் !

வையம் பற்றிய மங்கையர் எண்ணிலர் ;
ஐயன் பொற்புக்(கு) அளவிலை ; ஆதலால்
எய்யும் பொற்சிலை மாரனும் என்செய்வான் ?
கையம்(பு) அற்(று)உடை வாளினும் கைவைத்தான் !

[ வையம் - (இங்கே) நகரம். பொற்பு - சௌந்தரியம். பொற்சிலை. அழகிய வில். மாரன் - மன்மதன். கையம்பு - கையிலுள்ள மலரம்புகள். ]

மன்மதனுடைய மலரம்புகளெல்லாம் அற்றுப்போக, அவன் உடைவாளிலும் கைவைத்தானும். அத்தகைய மரண வேதனையில்,

நங்கை அங்கொரு பொன்,‘ நயந் தார்உய்யத்
தங்கள் இன்னுயி ரும்கொடுத் தார்தமர் :
எங்கள் இன்னுயிர் எங்களுக்(கு) ஈகலா
வெங்கண் எங்கண் விளைந்த(து) இவற் ’கென்றாள்.

[ பொன் - பொன் போன்றவள். நயந்தார் - விரும்பினவர்கள். உய்ய- பிழைக்கும்படி, தமர் - உறவினர் ; (இங்கே) குலத்தினர். ஈகலா - கொடுத் திடாத. வெங்கண் - கொடுமை. எங்கண் - எங்கேயிருந்து. ]

ஒரு பெண் — தங்கச் சிலைபோல் நின்றுகொண்டிருக் கிறாளே, அவள்தான் — அப்படிச் சொல்லுகிறாளாம். ‘ இவன் குலத்தைச் சேர்ந்தவர்கள் தானே சிபிச்சக்கரவர்த்தி முதலியோர் :

அவர்கள் விரும்பினவர்களுக்குத் தங்கள் இனிய உயிரையும் கொடுத்தார்களே! இவனோ எங்கள் இன்னுயிரையே எங்களுக்குக் கொடுக்கமாட்டேன் என்கிறான்: என்ன கொடுமை! அந்த வம்ச பரம்பரையில் இல்லாத இப்படிப்பட்ட கொடுமை இவனுக்கு எங்கேயிருந்துதான் விளைந்து வந்ததோ?' என்று வேதனைப்படுகிறாள். இவளுக்குத் தன் வேதனையோடு, தன்னைப்போன்ற பெண்கள் பலரது வேதனைகளும் நெஞ்சிலே படுகின்றன. அத்தனை அவஸ்தைகளோடும் அவர்களுக்கெல்லாம் பரிந்து பேசுவதுபோலப் பரிதவிக்கிறாள், இராமனை நொந்துகொண்டே.

இவ்வளவு கொடுமையுள்ளவனுக்குக் காதலே இருக்க முடியாதென்பது ஒருத்தியின் சித்தாந்தம். இராமனுக்குச் சீதையிடத்திலும் காதல் இருக்கமுடியாதென்று துணிகிறாள் அவள். ஆயின், எதற்காக வில்லை முறித்தானென்றால், தன் வில்வித்தையைக் காட்டுவதற்காகத்தான் என்று சித்தாந்தஞ் செய்துவிடுகிறாள்.

நாமத் தால்அழி வாள்ஒரு நன்னுதல்,
'சேமத் தார்வில் இறுத்தது தேருங்கால்,
தூமத் தார்குழல் - தூமொழித் தோகைபால்
காமத் தாலன்று; கல்வியி னா'லென்றாள்.

[நாமம் - பெயர். நன்னுதல் - அழகிய நெற்றியையுடைய பெண். சேமத்து ஆர் வில் - காவலுள்ள இடத்தில் தங்கிய வில். தேருங்கால் - ஆலோசிக்குமிடத்து. தூமத்து ஆர் குழல் - அகிற்புகை ஊட்டிய கூந்தல். தூமொழி - சுத்தமான பேச்சு. தோகை - (இங்கே) மயில்போலும் சாயலுள்ள சீதை. காமம் - காதல் கல்வி - (இங்கே) வில்லின் கல்வி ]

இராமனைப் பார்த்தபின், அந்தப் பெயரிலேயே மோகித்துப் போனாள். அந்த நாமத்தையே திரும்ப திரும்பச் சொல்லிக் கொண்டு மனம் அழிகிறாள். இந்த நிலையில், 'வில்லிறுத்த வெற்றி காதலின் வெற்றி' என்பதைக்கூட அவள் மறுக்கத் துணிகிறாளாம். 'வில்லிறுத்த வெற்றி காதலின் வெற்றிதான்'

என்ற தன் சித்தாந்தத்தைக் கவிஞன் எவ்வளவு சாதுரியமாக இங்கும் வற்புறுத்துகிறனென்பது கவனிக்கத் தக்கது.

இவ்வாறு மிதிலைமாநகரம் காதற்களிப்பிலே மூழ்கிக் கிடக்க, இராமன் அரசர்கூட்டம் புடைசூழ ஜனகமகாராஜாவின் சபா மண்டபத்தை அடைகிறன். அங்கே வசிஷ்ட விசுவாமித்திர மகரிஷிகளைக் கண்டு,

திருவின் நாயகன் மின்திரிந் தாலெனத்
துருவில் மாமணி யாரம் துயல்வரப்
பருவ மேகம் படிந்தது போல்படிந்(து),
இருவர் தாளும் முறையின் இறைஞ்சினன்.

[ திருவின் நாயகன் - இராமன். மின் திரிந்தாலென - மின்னல் உலாவினற்போல. துருவில் - குற்றமில்லாத. துயல்வர - அசைந்து புரள. ]

மின்னல் உலாவி வந்தாற்போல வந்து சேர்ந்த இராமன், இரத்தின ஆரம் மார்பிலே அசைந்து புரள, நீருண்ட நீலமேகம் நிலத்திலே வந்து படிந்தாற்போலத் தாழ்ந்து அந்த இரண்டு ஆசாரியர்களையும் வணங்குகிறன், — 'என்ன வசீகரமான அழகு! ஆ, என்ன பெரும் பணிவு!' என்று அவர்களும் பிரமிக்கும்படி.

'திருவின் நாயகன்' என்று குறிப்பிடுவது சீதாகல்யாணம் சமீபித்து விட்டதென்ற ஆத்திரத்தை மட்டும் காட்டவில்லை. விசுவாமித்திரர் வேள்வி செய்த காலத்திலேயே 'திருமகள் நாயகன்' என்று கவிஞன் குறிப்பிடுகிறன். ஏன்? விசுவாமித்திரரிடம் அடைக்கலமாக ஒப்பிக்கும் சமயத்திலும் இராமனைத் 'திருவின் கேள்வன்' என்று தசரதன் குறிப்பிடவில்லையா? கம்பனுடைய காவிய நாயகனை இராமன் என்று சொன்னல் போதாது; சீதாராமன் என்றே கருதவேண்டும்.

'கம்ப சித்திரம்' என்ற காவியப் பூங்கோயிலில், இராமன் பவனி வருதலைக் கூறும் 'உலாவியற் படலம்' என்ற இப்பாகத்தைச் 'சித்திரசாலைக்குள்ளே ஒரு சித்திரசாலை' யென்று சொல்லலாம்.

## 20. நிச்சய தாம்பூலம்

வசிஷ்ட விசுவாமித்திர முனிவர்களிடம் ஆசி பெற்று இராமன் தம்பியரோடு ஆசனத்தில் அமர்ந்ததும், தசரதனும் தன் சுற்றத்தாருடன் அந்த மண்டபத்தை அடைந்து அம் முனிவர்களை வணங்கித் தனக்குரிய ஓர் ஆசனத்தில் வீற்றிருந்தான். பல தேசத்து மன்னவர்களும் அம்மண்டபத்தில் வந்து நெருங்கினர்கள். தசரத சக்கரவர்த்திக்கு மகளிர் பல்லாண்டு பாடினர்கள்; சாமரங்கள் வீசினர்கள். அந்த வெண்சாமரங்கள் பக்கங்களிலே படர்வது, ஓங்கி ஓங்கி வளர்ந்துயரும் அவனுடைய மாசற்ற வெண் புகழின் பூங்கொழுந்து படர்வதுபோலிருந்ததாம்.

**தீங்க ரும்பினும் தித்திக்கும் இன்சொலார்**
**தாங்கு சாமரை, மாடு தயங்குவ,**
**ஓங்கி யோங்கி வளர்ந்துயர் கீர்த்தியின்**
**பூங்கொ ழுந்து படர்வன போன்றவே.**

[ தீங்கரும்பு - (இங்கே) இனிப்பான கருப்பஞ்சாறு. மாடு - பக்கங் களில். தயங்குவ - விளங்குபவை. ]

இழிந்தோர் உயர்ந்தோர் என்ற வித்தியாசம் பாராட்டாமல் ஜனகன் யாவரையும் பரிபூர்ண அன்புடன் உபசரித்தான். பரிபூர்ண அன்புக்கும் அதிகமாக அன்பு செய்வதென்பது சாத்தியமா? எனவே அந்த 'அன்புதான், இழிந்துளார்க்கும் இராமற்கும் ஒத்ததே!' என்கிறன் கவிஞன். 'இழிந்துளா'ரை முன்னும் 'இராம'னைப் பின்னுமாக வைத்திருப்பதால், ஞானியும் இராஜரிஷியு மான ஜனகன் 'தாழ்ந்தவர்கள்' என்று கருதப்பட்ட ஜனங்களைத் தனது ஒப்புயர்வற்ற மருமகனை இராமனைக் காட்டிலும் அதிகமாக உபசரித்தானென்பதுகூட ஒருவாறு தொனிக்கும்.

வசிஷ்ட மகாமுனிவர் ஜனக மகாராஜனிடம் 'சீதையை அழைத்து வருவாயாக' என்றார். அவன் அயல் நின்ற மாதர்களை ஏவ, அவர்கள் சென்று தோழிமார்களிடம் செய்தி சொன்னார்கள். தோழிமார் சீதையை அலங்கரிக்கலானார்கள்.

**அமிழ்இமைத் துணைகள் கண்ணுக்(கு) அணியென அமைக்கு மாபோல்,**
**உமிழ்சுடர்க் கலன்கள் நங்கை யுருவினை மறைப்ப தோரார்,**
**அமிழ்தினைச் சுவைசெய் தென்ன அழகினுக்(கு) அழகு செய்தார்:**
**இமிழ்திரைப் பரவை ஞாலம் ஏழைமை யுடைத்து மாதோ !**

அமிழ் - தாழ்கின்ற. துணை - இரண்டு. உமிழ் சுடர்க் கலன்கள் - உமிழ்கிற ஒளியையுடைய ஆபரணம். ஓரார் - ஆராயாதவராய். இமிழ் - ஒலிக்கிற. திரை - அலை. பரவை - கடல். ஞாலம் - உலகம். ஏழைமை - அறியாமை. உடைத்து - உடையது. மாது, ஓ - ஈற்றசைகள். ]

கண்ணை மூடி அதன் அழகை மறைக்கக்கூடிய இமையைக் கண்ணுக்கு அழகென்று இயற்கை அமைத்திருக்கிறதல்லவா? அப்படியே தோழிமார், ஒளி வீசும் ஆபரணங்களும் சீதையின் மேனி யழகை மறைத்து விடுமேயென்று அறிந்துகொள்ளாமல் அவளை அலங்கரிக்கத் தொடங்கினார்களாம். 'அழகுவேறு, தான் வேறு என்றில்லாமல் அழகே தானாகவுள்ள சீதையையும் அழகு செய்வதா? தேவாமிர்தத்துக்கு அதிகச் சுவை கொடுக்கவேணு மென்று வெல்லம் முதலியவற்றைச் சேர்ப்பவருண்டோ? அழகுக்கு அழகு செய்வது வீண் முயற்சியே யல்லவா? உலகம் அறியாமையிலே ஆழ்ந்திருக்கிறது!' என்கிறான் கவிஞன்.

எனினும் தோழிமார் சீதையைப் பலவிதமாக அலங்காரஞ் செய்தார்கள். கூந்தலில் மாலை சூட்டிக் காதணிகள் அணிந்ததும், அவை அசைந்தன ஊஞ்சல் போல. அவள் உள்ளமும் அச்சமயம் அப்படியே ஊஞ்சலாடுவது போலிருந்ததாம்.

**'வெள்ளத்தின் சடிலத் தான்தன் வெஞ்சிலை இறுத்த வீரன்,**
**தள்ளத்தன் ஆவி சோரத் தனிப்பெரும் பெண்மை தன்னை**

அள்ளிக்கொண்(டு) அகன்ற காளை அல்லன்கொல்? ஆங்கொல்?' என்பாள்
உள்ளத்தின் ஊச லாடும் குழைநிழல் உமிழ விட்டார்.

[ வெள்ளம் - (இங்கே) கங்கை வெள்ளம். சடிலத்தான் - ஜடையையுடைய சிவபெருமான். வெஞ்சிலை - பயங்கரமான வில். தள்ள - தடுமாற. சோர - தளர. காளை - கட்டிளமைப் பருவத்தான். அல்லன்கொல் - அல்லனே. ஆங்கொல் - (அவன்) தானே. உள்ளத்தின் - உள்ளம்போல. குழை - காதணி. நிழல் - ஒளி. இட்டார் - அணிவித்தார். ]

பயங்கரமான சிவதனுசை ஒடித்தவன் மகாவீரனாகத்தான் இருக்கவேணுமென்பதில் சீதைக்குச் சந்தேகமேயில்லை. ஆனால் 'அந்த வீரன்தானா அன்று தான் காதலித்த இளைஞன்?' என்ற சந்தேகம் இன்னும் கொஞ்சம் இருக்கத்தான் செய்கிறதாம், இவள் உள்ளத்திலே. 'சொல்லிய குறியின் அத் தோன்ற லே:அவன் — அல்லனேல், இறப்பனென்(று) அகத்துள் உன்னினாள்!' என்றபடி, ஏற்கெனவே சங்கற்பஞ் செய்துகொண்டவள். அந்தச் சந்தேகம் இன்னும் முற்றும் நீங்கிவிடவில்லையாம். நிச்சய தாம்பூலத்திற்காக அணி செய்யும்போதும், இவளுள்ளம் நம்பிக்கைக்கும் அவநம்பிக்கைக்குமிடையே ஊஞ்சலாடிக்கொண்டிருந்ததாம். இக் குறிப்புக்கள், கம்பன் வால்மீகத்தினின்று மாறுபட்டுச் சித்திரிக்கும் காதல் - மணத்துக்கு வாசகர் கவனத்தை இழுக்கின்றன.

கூந்தலில் மாலை சூட்டிக் கழுத்திலே ஆரமணிந்து, கையில் கடகமும், இடையில் மேகலையும், பாதங்களில் சிலம்பும் அணிந்தார்கள் தோழிமார். பிறகு கண்ணுக்கு மையிட்டார்கள்.

'நஞ்சினோ(டு) அமிழ்தம் கூட்டி நாட்டங்க ளான வென்னச்
செஞ்செவே நீண்டு மீண்டு சேயரி சிதறித் தீய
வஞ்சமும் களவு மின்றி மழையென மதர்த்த கண்கள்,
அஞ்சன நிறமோ? அண்ணல் வண்ணமோ? அறிதல் தேற்றும்'

[ நாட்டம் - கண். செஞ்செவே - நேராக. சேயரி - (உத்தம லட்சணமான) சிவந்த ரேகைகள். மதர்த்த - ஆவல் மிகுதியைக் காட்டும். அறிதல் தேற்றும் - தெளிவாக அறிகின்றோமில்லை. ]

என்று அந்தக் கண்களேயே காட்டிவிடுகிருன் கவிஞன்.

அணிகள் அணிந்தும், பூச்சூட்டியும், கண்ணுக்கு மையிட்டும், நெற்றியில் திலகமிட்டும் சீதையை அலங்கரித்தபின், தோழிமார் அவளேச் சுற்றிச் சுற்றி வந்து வசதியாக நின்று நின்று அந்த அழகைப் பார்த்துப் பார்த்து ஆனந்திக்கிருர்களாம்.

கஞ்சத்துக் களிக்கும் இன்தேன் கவர்ந்துணும் வண்டு போல,
அஞ்சொற்கள் கிள்ளேக் கெல்லாம் அருளினுள் அழகை மாந்தித்
தஞ்சொற்கள் குழறித் தத்தம் நிலேதடு மாறி நின்ருர்!
மஞ்சர்க்கும் மாத ரார்க்கும் மனமென்ப தொன்றே யன்ருே?

[கஞ்சம் - தாமரைப் பூ. உணும் - உண்ணும். அஞ்சொற்கள் - அழகிய சொற்கள். கிள்ளே - கிளி. மாந்தி - பருகி. மஞ்சர் - மைந்தர்; ஆடவர்.]

ஆனந்திப்பது மட்டுமா? தாமரைப் பூவினுள்ள மதுவைக் கொள்ளே கொண்டு பருகி மயங்கும் வண்டுகள்போல, அத்தோழிப் பெண்கள் சீதையின் அழகைப் பருகி வெறி கொள்ளுகிருர்கள். இதனுல் அவர்களுக்குப் பேச்சு இயற்கையாக வாராமல் குழறிப் போகிறதாம். அவர்கள், இயற்கைக் குணமே மாறுபட்டுத் தடுமாறி நிற்கிருர்களாம். பெண்களாக இருந்தபோதிலும் சீதையின் சௌந்தரியத்தைக் கண்டு காதல் கொள்ளுகிருர்களாம். என்ன ஆச்சரியம்! என்ன விபரீதம்! ஆனுல் 'இது விபரீதமுமன்று; ஆச்சரியமுமன்று' என்கிருன் கவிஞன். ஆண்மனமென்றும் பெண் மனமென்றும் மனங்களில் பேதமுண்டோ? 'மஞ்சர்க்கும் மாத ரார்க்கும் மனமென்ப தொன்றே யன்ருே?' என்று சமாதானஞ் சொல்லுகிருன்.

'ஒவ்வொரு பெண்ணிடத்தும் ஒவ்வோர் அழகு விரும்பத் தக்கதா யிருக்கும்: அப்படியிருக்க அழகுகளே யெல்லாம் ஒருங்கே கண்டால், யாவரே தாங்கவல்லார்?' என்றும் சமாதானஞ் சொல்லு கிருன் கவிஞன்:

இழைகுலாம் முலையி னுள இடையுவா மதியின் நோக்கி,
மழைகுலா(வு) ஓதி நல்லார் களிமயக் குற்று நின்றார் :
உழைகுலாம் நயனத் தார்மாட்(டு) ஒன்றொன்றே விரும்பற்(கு) ஒத்த(து);
அழகெலாம் ஒருங்கே கண்டால், யாவரே ஆற்ற வல்லார் ?

[ இழை - ஆபரணம். குலாம் - குலாவும்; விளங்கும். இடையுவா மதியின் - பௌர்ணமி திதியில் தோன்றுகிற சந்திரனைப்போல. மழை குலாவு - மேகம்போல விளங்குகிற. ஓதி - கூந்தல். நல்லார் - அழகிய பெண்கள். களிமயக்கு - களிப்பினலான மயக்கம். உழை-மான். நயனத்தார் மாட்டு - கண்களையுடைய பெண்களிடத்திலெல்லாம். ஆற்ற - பொறுக்க ; தாங்க. ]

தோழிமார் ஒருவர் முன் ஒருவராய் நெருங்கி வந்து சீதையைச் சூழ்ந்துகொள்ள, இளஞ் சந்திரன் ('இந்துவின் கொழுந்து') நட்சத்திர இனத்தோடு வருவதுபோலச் சீதை சபாமண்டபத்தை நோக்கி நடந்தாள். அந்த நடையழகையும், அந்த மணிமண்டபத்தை அடைந்த அழகையும் வருணிக்கும் ஐந்து கவிகளையும் 'பஞ்ச ரத்தினங்கள்' என்று சொல்லலாம்:

வல்லியை உயிர்த்தநில மங்கை,'இவள் பாதம்
மெல்லிய, உறைக்கு'மென அஞ்சி,வெளி யெங்கும்
பல்லவ மலர்த்தொகை பரப்பின ளெனத்தன்
நல்லணி மணிச்சுடர் தவழ்ந்திட நடந்தாள்.

[ வல்லி - பூங்கொடி ; (இங்கே) பூங்கொடி போன்ற சீதை. உயிர்த்த - பெற்ற. மெல்லிய - மென்மையானவை. உறைக்கும் - உறுத்தும். பல்லவ மலர்த்தொகை - தளிர்கள், பூக்கள் இவற்றின் தொகுதி. நல்லணி மணிச் சுடர் - சிறந்த ஆபரணங்களிலுள்ள இரத்தினங்களின் காந்தி. ]

தொழுந்தகைய மென்னடை தொலைந்து,களி அன்னம்
எழுந்திடை விழுந்தயர்வ தென்ன,அய லெங்கும்
கொழுந்துடைய சாமரை குலாவ,ஓர் கலாவம்
வழங்கநிழல் மின்னவரு மஞ்ஞையென வந்தாள்.

[ தொழும் தகைய - (யாவராலும்) வணங்கத் தக்க. மென்னடை தொலைந்து - மென்மையான (தனது) நடைக்குத் தோற்று. களி அன்னம் - களிப்பையுடைய அன்னப் பறவைகள். எழுந்து இடைவிழுந்து - இடையிடையே கீழே விழுந்தும், மீண்டும் எழுந்தும். அயர்வதென்ன - வருந்துவதுபோல. கலாவம் - கலாபம் - தோகை. வழங்க நிழல் - ஒளி வழங்க. மஞ்ஞை - மயில். ]

மண்முதல் அனைத்துலகின் மங்கையர்க ளெல்லாம்
கண்மணி யெனத்தகைய கன்னியெழில் கான,
அண்ணல்மர பிற்சுடர், அருத்தியொடு தான்அவ்
விண்ணிழிவ தொப்பதோர் விதானநிழல் வந்தாள்.

[ மண் முதல் - பூலோகம் முதலிய. எனத் தகைய - என்று சொல்லத் தக்க தன்மை வாய்ந்த. எழில் - அழகு. அண்ணல் - (இங்கே) இராமன். மரபின் சுடர் - குலத்தின் ஆதி புருஷனான சூரியன். அருத்தி - ஆசை. விண் இழிவது-ஆகாயத்திலிருந்து இறங்கி வருவது. விதானம் - மேற்கட்டி. ]

கற்றைவிரி பொற்சுடர் பயிற்றுறு கலாபம்,
சுற்றுமணி புக்கஇழை மிக்கிடை துவன்றி
விற்றவழ, வாள்திமிர, மெய்ப்பணிகள் மின்னச்
சிற்றிடை நுடங்கஒளிர் சீறடி பெயர்த்தாள்.

[ கற்றை விரி - தொகுதியாக விரிந்த. பொற்சுடர் பயிற்றுறு - பொன்னொளி அடர்ந்திருக்கப் பெற்ற கலாபம் - மாதர் இடையில் அணியும் பதினாறு மணிக் கோவை. சுற்றும் - சுற்றிலும். மணி - இரத்தினம். புக்க - பதித்த. இழை - (மற்றுமுள்ள) ஆபரணங்கள். மிக்கு - மிகுந்து. இடை துவன்றி - நடுவிலே நெருங்கி. விற்றவழ - வில்தவழ - ஒளி தவழ. வாள் திமிர - காந்தி விளங்க. நுடங்க - துவள. சீறடி - சிறு அடி. பெயர்த்தாள் - எடுத்து வைத்தாள். ]

பொன்னின்ஒளி, பூவின்வெறி, சாந்துபொதி சீதம்,
மின்னின்நிழல், அன்னவள்தன் மேனியது மான,
அன்னமும் அரம்பையரும் ஆரமிர்தும் நாண,
மன்னவை யிருந்தமணி மண்டபம் அடைந்தாள்.

[ வெறி - பரிமளம். சாந்து - சந்தனம். பொதி சீதம் - பொருந்தியுள்ள குளிர்ச்சி. மின்னின் நிழல் - மின்னலின் பிரகாசம். மான - ஒத்து விளங்க. அவை - இராஜ சபை. ]

'இவள் பாதங்கள் மிக மென்மையானவை: தரை உறுத்துமே!' என்று சீதையென்ற பூங்கொடியைப் பெற்ற பூமிதேவி அஞ்சினளாம். அஞ்சி, இவள் நடந்து செல்லும் தரைவெளியெங்கும் பல நிறமுள்ள தளிர்களையும் மலர்களையும் பரப்பி வைத்தாளென்று சொல்லும்படி, சீதை அணிந்திருந்த ஆபரணங்களின் பல வேறு இரத்தினங்களின் பல நிறமுள்ள காந்திகள் இவள் நடக்கும் பாதையில் பரவிச் சென்றன.

தோழிமார் பக்கங்களில் வெண்சாமரம் வீசியது, இவள் நடைக்குத் தோற்ற அன்னங்கள் ஓடிப்போகக் கருதிப் பல முறை பறந்தெழுந்து, பின்பு அயர்ந்து ஓடமாட்டாமல் விழுவது போலிருந்ததாம். இப்படியெல்லாம் சாமரை குலாவ, கலாபம் என்ற இடையணி விளங்கக் கலாப மயில்போலச் சென்றாளாம், ஜாஜ்வல்யமாயிருந்த ஒரு விதான நிழலின்கீழே. பெண்மணிகளெல்லாம் தங்கள் கண்மணியென்று கருதத் தக்க அந்தக் கட்டழகியைச் சமீபத்தில் வந்து பார்க்க வேணுமென்று, இராமனது குலமுதல்வனான சூரியனே அப்படியிறங்கி வந்ததுபோலிருந்ததாம் அந்த விதானம்.

அவள் நடந்து வரும்போது, கலாபமென்ற அந்த மேகலாபரணம் தான் எப்படியெல்லாம் 'பொற்சுடர்' வீசுகிறது! மற்றுமுள்ள இரத்தினபரணங்களும் 'வானவில்' வீசுகின்றன; மின்னல் போல் மின்னுகின்றன. இந்த ஆபரண சோபைகளுக்கும் மேலாக ஜொலிக்கும் ஜோதி இவள் அவயவ சோபை — இவள் தேககாந்தி. இவ்விதமாகச் சீதாதேவி சிற்றிடை துவள அடிபெயர்த்து வந்து, இரத்தின கசிதமான சபாமண்டபத்தை அடைகிறாள்.

இப்போது அந்த மண்டபமெல்லாம் ஒரு புதிய ஒளிபெற்றது போல் சோபிக்கிறது. அந்தத் தேககாந்தி ஒரு கணம் பொன்னொளி

போலப் பிரகாசிக்கிறது; ஒருகணம் பூவின் பரிமளமோ என்று பிரமிக்கும்படி அதிசூட்சுமமாகப் புலனுகிறது; ஒரு கணம் சந்தனத்தின் குளிர்ச்சியை நினைப்பூட்டுகிறது; ஒரு கணம் மின் வெட்டுவதுபோல் கண்ணைப் பறிக்கிறது. 'பொன்னின் சோதி, போதினில் நாற்றம் பொலிவேபோல்—தென்னுண் தேனின் தீஞ்சுவை, செஞ்சொற் கவியின்பம்' என்று கன்னிமாடத்தில் தோன்றிய சீதையை முதல்முதல் வருணித்தது இங்கே நினைவு கூரத் தக்கது.

'என்ன நடை! என்ன அழகு! என்ன இனிமை!' என்று தேவரம்பைகளும் தேவாமிர்தமும்கூட நாணும்படி வந்து சேர்ந்த சீதாபிராட்டியைக் கண்டதும், எல்லோரும் காட்சி யானந்தத்தில் ஆழ்ந்து, அந்த மண்டபத்திலே எழுதி வைத்திருந்த சித்திரப் பதுமைகள்போல் இமை கொட்டாமலும் மூச்சு விடாமலும் அசையாமலும் இருந்துவிட்டார்களாம்.

'முன்னே கன்னிமாடத்தின்மீது கண்டு காதல் கொண்டோமே, அவள்தானே இந்த ஜனகராஜகுமாரி?' என்று சந்தேகித்துக் கொண்டிருந்த இராமனும் அவளை இப்போது மண்டபத்திலே கண்டு சந்தேகம் தீர்ந்து களிப்படைகிறான்.

அன்னவளை அல்லளென, ஆமென அயிர்ப்பான்,
கன்னியமிர் தத்தையெதிர் கண்டகடல் வண்ணன்,
உன்னுயிர் நிலைப்பதோர் அருத்தியொ(டு) உழைத்(து)ஆண்(டு)
இன்னமிர் தெழக்களிகொள் இந்திரனை ஒத்தான்.

[அன்னவளை - அப்படிப்பட்டவளை. அயிர்ப்பான் - சந்தேகிப்பவனாய். கடல்வண்ணன் - கடல்போன்ற நிறத்தையுடைய இராமன். உன்னுயிர் - (அருமையானதாய்) கருதப்பட்ட உயிர். அருத்தி - விருப்பம். உழைத்து - வருந்தி; வேலைசெய்து. ஆண்டு - அவ்விடத்தில். இன்னமிர்து - இனிமையான அமிர்தம்.]

இந்திரன் அமிர்தம்பெற்று உயிர்நிலைக்கப் பெற்றான்: அப்படியே இராமன், 'கன்னியர் சமூகம்' என்ற பாற்கடலிலே தோன்றிய சீதையென்ற அமிர்தம் பெற்று உயிர் நிலைக்கப் பெறுகிறான். இவ்வளவு களிப்புடன் இராமன் அவளை எதிரே வரக்கண்டு, 'கன்னிமாடத்தை விட்டு என் நினைப்பினிடையே குடிபுகுந்திருக்கிறவள் என் உள்ளத்தையேயன்றி வெளியிலும் இருக்கிறாளோ?' என்று தன்னைத் தானே ஆச்சரியமாய்க் கேட்டுக்கொள்கிறான்.

'நறத்துறை முதிர்ச்சியுறு நல்லமிழ்து பில்குற்(று)
அறத்தின்விளை வொத்துமுக(டு) உந்தியரு(கு) உய்க்கும்
நிறத்துவர் இதழ்க்குயில், நினைப்பினிடை யல்லால்
புறத்துமுள தோ?'என மனத்தொடு புகன்றான்.

[நறத்து உறை - தேனிடம் தங்குகிற. பில்குற்று - துளித்து. முகடு - (கன்னிமாடத்தின்) மேலிடம். உந்தி - வெளிப்படுத்தி. உய்க்கும்-செலுத்தும். துவர் - சிவப்பு.]

சீதையின் அழகைப் பார்த்ததும் தசரதன், 'நான் எத்தனையோ காலம் அரசாளும் செல்வத்தை அடைந்திருந்தே னென்றாலும், இவளை என் மருமகளாகப் பெற்ற இன்றுதான் செல்வத்தை உண்மையாக அடைந்தேன்!' என்று எண்ணினான்.

துன்றுபுரி கோதையெழில் கண்(டு),உலகு சூழ்வந்(து)
ஒன்றுபுரி கோலொடு தனித்திகிரி உய்ப்பான்,
'என்றும்உல கேழும்அர செய்தியுள னேனும்,
இன்றுதிரு எய்தியது என்வயம'தென்றான்.

[துன்றுபுரி கோதை - அடர்ந்து மிகுந்த கூந்தலையுடைய சீதை. எழில் - அழகு. சூழ்வந்து - சுற்றிவந்து. ஒன்றுபுரி-ஒரே தன்மையாகப் பொருந்தின. கோல் - செங்கோல். திகிரி - ஆஜ்ஞா சக்கரம். உய்ப்பான் - செலுத்துபவனான தசரதன். வயம் - வசம்.]

சீதை சமீபமாக வந்த மாத்திரத்திலே சிலர் கைகள் தவிர ஏனையோர் கைகளெல்லாம் அவர்களை அறியாமலே தலைமீது சேர்ந் தனவாம், பக்தியோடு.

நைவளம் நவிற்றுமொழி நண்ணவர லோடும்,
வையம்நுகர் கொற்றவனும் மாதவரு மல்லார்
கைகள்தலை புக்கன; கருத்துளது மெல்லாம்
தெய்வமென உற்ற;உடல் சிந்தைவச மன்றே ?

[ நைவளம் - ஒருவகையான இசை. நவிற்றும் - பேசுகிற. மொழி - (இங்கே) மொழிகளையுடைய சீதை. நண்ண - சமீபமாக. வையம் (இங்கே) இராஜ்யம். நுகர் - (ஆண்டு) அனுபவிக்கிற. கொற்றவன் - வெற்றியை யுடைய மன்னன். மாதவர் - முனிவர்கள். கருத்து உளதும் எல்லாம் - கருத்தும் மற்றுமுள்ள அந்தக்கரணங்கள் எல்லாமும். உற்ற - (இங்கே) கருதின. ]

சீதாலட்சுமியல்லவா ? கண்டதும் தெய்வமென்றே கருதி விட்டன மனமும் புத்தி முதலிய அந்தக்கரணங்களும். குருமார்க ளான ரிஷிகள், தசரதன், ஜனகன், இராமன் முதலிய சிலரே இவளைக் கைகூப்பித் தொழவில்லையாம். இவள் வணங்குதற்குரிய அச்சிலர் தவிர மற்றையோர் யாவரும் இவளை வணங்கினர்களாம். சீதை, வசிஷ்ட விசுவாமித்திர மகரிஷிகளை நமஸ்கரித்துப் பின்பு தசரத சக்கரவர்த்தியின் பாதங்களைத் தொழுது, தந்தைக்கருகே இடப்பட்டிருந்த ஆசனத்தில் அமர்ந்தாள்.

மாதவரை முற்கொள வணங்கி,நெடு மன்னன்
பாதமல ரைத்தொழுது, கண்கவ்பனி சோரும்
தாதைஅரு கிட்டதவி சில்தவி யிருந்தாள்,
போதினை வெறுத்(து)அரசர் பொன்மனை புகுந்தாள்.

[ முற்கொள - முன்கொள - முன்னே. நெடு மன்னன் - சக்கரவர்த்தி. பனி - (இங்கே) கண்ணீர். சோரும் - கசியும். தவிசு - ஆசனம். போது - தாமரைப் பூ. ]

அப்போது ஜனகன் கண்ணுக்குக் குளிர்ந்த, இனிமையான, பனி சூழ்ந்ததுபோன்ற ஒரு தோற்றம் ஏற்பட்டதாம்: அந்தக் கண்களில் ஆனந்தக் கண்ணீர் கசிந்தது, 'என் அருமைத் திருமகள் என்ன பாக்கியம் செய்தாள்!' என்ற நினைப்பால். ஆனல் அந்த இராஜ ரிஷிதான் அறிவானு அந்தத் தேவ ரகசியத்தை? தன் திரு மகள், இயற்கைப் பொற்கோயிலான செந்தாமரைப்பூவை வெறுத்துத் தன்னுடைய பொன்மனை புகுந்தவளல்லவா, தான் செய்த பாக்கியத்தால்?

சீதையைக் கண்டு வியந்த விசுவாமித்திர முனிவர், 'சரி, சரி: இப்போது விளங்கிவிட்டது, இராமன் அவ்வளவு அனுயாசமாக அந்த வில்லிறுத்த இரகசியம்!' என்று எண்ணுகிருராம்:

> அச்சென நினைத்தமுதல் அந்தணன் நினைந்தான்:
> 'பச்சைமலை ஒத்தபடி வத்(து)அடல் இராமன்,
> நச்சுடை வடிக்கண்மலர் நங்கையிவ ளென்றல்,
> இச்சிலை கிடக்க,மலை ஏழையும் இருதே ?'

[அச்சு - அச்சாணி; ஆதாரம். படிவம் - வடிவம். அடல் - வலிமை. நச்சுடை - நஞ்சு உடைய. வடி - கூர்மை.]

இராமனுடைய வலிமையை நன்ருக அறிந்தவர்தான் : எனினும் 'இந்த நங்கை இந்தக் கண்ணுல் பணித்த பணி இது என்ருல், இந்த வில் கிடக்கட்டும்; ஏழு மலைகளையும் வேண்டுமென்ருலும் முறிக்கமாட்டானே? இத்தகைய காதலுலகத்திலே ஆகாதது முண்டோ?' என்பது விசுவாமித்திரர் நினைப்பு. லௌகிக விஷயங் களிலும் மேதாவியான இம்முனிவர் இராமன் காதலை ஒருவாறு ஊகித்தறிந்திருக்க வேண்டும். இப்போது சீதையைக் கண்டதும் அந்த ஊகம் உறுதிப்படுகிறது. இவ்விதமாக விசுவாமித்திரர் வாயி லாகவும், இராமன் வில்லிறுத்த வெற்றி காதலின் கன்னிவெற்றி யென்பது வற்புறுத்தப்படுகிறது.

விசுவாமித்திரரை 'அச்சென நினைத்த முதல் அந்தணன்' என்று குறிப்பிடுவது கவனிக்கத் தக்கது. அரசனுயிருந்து தன் முயற்சியால் 'வேத பாரகர் வேறிலர் நீயலால் !' என்று போற்றும்படி பிரம ரிஷியானவரல்லவா? இப்பெரியாரைச் சமுதாயம் என்ற தேரை அச்சாணிபோல் தாங்கி நிற்கும் முதன்மையான அந்தணன் என்று குறிப்பிடுவது பொருத்தம் தானே.

சீதையும் தன் சந்தேகத்தைப் பிரத்தியட்சப் பிரமாணத்தால் முழுதும் தீர்த்துக்கொள்ளும் பொருட்டு இராமனைப் பார்க்க விரும்புகிறுள்: விரும்பி ஒரு தந்திரம் செய்கிறுள்.

எய்யவில் வளைத்ததும் இறுத்ததும் உரைத்தும்,
மெய்வினை விடத்துமுதல் ஐயம்விட லுற்ருள்,
ஐயனை அகத்துவடி வேயல, புறத்தும்,
கைவளை திருத்துபு, கடைக்கணின் உணர்ந்தாள்.

[முதல் ஐயம் - முன் ஏற்பட்ட சந்தேகம். திருத்துபு - திருத்தத் தொடங்கி.]

நாணத்தால் நிலம் நோக்கி நின்ற கண்பார்வையைக் கைவளையல் களைத் திருத்தும் வியாஜத்தால் புறத்தே செல்ல விடுகிறுள்: அந்த வளையல்களைப் பார்ப்பதுபோல, இராமனைக் கடைக்கண்ணுல் நோக்குகிறுள். நோக்கவே,

கருங்கடை நெடுங்கணெளி யாறு,நிறை கண்ணப்
பெருங்கடலின் மண்ட,உயிர் பெற்றினி துயிர்க்கும்
அருங்கலன் அணங்கரசி, ஆரமிழ் தனைத்தும்
ஒருங்குடன் அருந்தினரை ஒத்துடல் தடித்தாள்.

[கருங்கடை நெடுங்கண் - கருமையான நீண்ட கடைக்கண். ஒளியாறு - ஒளியாகிய நதி. கண்ணப் பெருங்கடல் - கண்ணனுகிய பெருங்கடல். மண்ட - நெருங்கிப் பாய. இனிது உயிர்க்கும் - இனிமையாக மூச்சுவிடுகிற. அருங்

கலன் - ஆபரணம். அணங்கு அரசி - சிறந்த பெண்களுக்கு அரசியான சீதை. ஆரமிழ்து - பெறுதற்கு அருமையான அமிர்தம். ]

சீதையின் கடைக்கண்ணிலிருந்து உற்பத்தியாகும் ஒளியாறு, இராம சௌந்தரியமாகிய பெருங்கடலில் மண்டிப் பாய்ந்து கலக்கிறது. இப்போதுதான் சீதை உயிர்பெறுகிருள். இந்நிலையில் இப்பெண் ணரசி அடைந்த பேரானந்தத்தை என்னென்று கூறுவது? ஆனந்த மிகுதியால் உடம்பு பூரித்தாளென்று சொல்வது போதாது. எத்தனையோ தேவர்கள் பங்கிட்டு உண்ட அமிர்தம் முழுவதையும் வேறு எவரோடும் பகிர்ந்துகொள்ளாமல் தாமே உண்டவரைப்போல் உடல் தடித்தாள் என்று கவி கூறுகிருன்.

இவ்விதமாகக் காதலர்கள் ஒருவரை யொருவர் மீண்டும் கண்டு கொண்டு பேரானந்தத்தை அனுபவிக்கிருர்கள். அப்போது தசரதன் விசுவாமித்திரரை நோக்கி, 'என்று கல்யாணத்துக் குரிய நன்னுள்?' என வினவுகிருன். விசுவாமித்திரர் 'திருமணம் நாளைக்கு' என்று மறுமொழி சொல்லுகிருர். பிறகு எல்லாரும் எழுந்து அவரவர் இருப்பிடம் அடைகிருர்கள். சூரியனும் அஸ்தமன மடைகிருன்.

அன்னம்அரி திற்பிரிய, அண்ணலும் அகன்(று)ஓர்
பொன்னின்நெடு மாடமனை புக்கனன்; மணிப்பூண்
மன்னவர் பிரிந்தனர்கள்; மாதவர்கள் போனர்:
மின்னுசுடர் ஆதவனும் மேருவில் மறைந்தான்.

[ அன்னம் - (இங்கே) சீதை. அண்ணல் - (இங்கே) இராமன். மணிப் பூண் - இரத்தினுபரணம். ஆதவன் - சூரியன். மேரு - மேருமலை. ]

## 21. சீதா கல்யாணம்

ஜனக மன்னனால் இனிமையாக உபசரிக்கப்பெற்று எல்லாரும் தேவ போகத்தை இவ்வுலகிலேயே அடைந்தார்களென்று சொல்லும்படி ஆனந்த மடைந்தார்கள். ஆனால் சீதைக்கு மட்டும் அன்றிரவு ஒரே தவிப்பாயிருந்தது. தாகத்தால் வருந்துகிறவர்கள் ஒரு குளத்தின் பக்கத்திலே சேர்ந்தும் இறங்கிப்போய்த் தாக சாந்தி செய்துகொள்ள வழி காணாதவராயின், அவர்கள் எவ்வளவு தளர்ச்சியும் ஏக்கமும் அடைவார்கள்! சீதையும் அப்படியே தளர்கிறாள்; ஏங்குகிறாள்.

தேடரு நலத்தபுன லாசைதெற லுற்றார்,
மாடோர்தடம் உற்றதனை எய்தும்வழி காணார்,
ஈடழி வுறத்தளர்வொ(டு) ஏமுறுவ ரன்றே!
ஆடக வனைக்குயிலும் அந்நிலைய ளானள்.

[தேடரும் - தேடிப் பெறுதற்கு அருமையான. நலத்த புனல் - நல்ல தண்ணீர். தெறல் - வருத்தப்படுதல். மாடு - பக்கம். தடம் - தடாகம். உற்றதனை - உற்று அதனை. ஈடு - வலிமை. ஏமுறுவர் - ஏக்கமுற்று மயங்குவர். ஆடகம் - தங்கம். குயில் - குயிலோசை போல் இனிய குரலுடைய சீதை.]

'இந்த இரவுக்குத் தான் என்ன கொடுமை!' என்று இரவை நொந்து கொள்ளுகிறாள்.

'உரவே தும்இலர் உயிர்ஈர் துமெனக்
கரவே புரிவா ருளரோ? கதிரோன்
வரவே, எனையா ளுடையான் வருமே:
இரவே! கொடியாய்! விடியாய்' எனுமால்.

[ உரவு ஏதுமிலார் - வலிமை ஏதும் இல்லாதவர்கள்; அதாவது, அபலைகளான பெண்கள். ஈர்தும் - அறுத்திடுவோம். கரவு - வஞ்சனை. கதிரோன் - சூரியன். எனையாளுடையான் - என்னை ஆட்கொண்ட இராமன். விடியாய் - விடிவாயாக. ஆல் - அசை. ]

'எவ்வளவு கொடுமையுடையவர்களும் வலியாரை யெதிர்த்து அழிக்கத் தொடங்குவரே யன்றி, வலிமை யில்லாதவர்களை அழிக்க மாட்டார்கள். இரவே! நீ மாத்திரம் "அபலைகளான பெண்களின் உயிரை ரம்பத்தால் அறுப்பதுபோல் அறுத்திடுவோம்" என்று வீரவாதஞ் செய்து வஞ்சனை செய்கிறாய்!' என்கிறாள். 'இரவே! கொடியாய்!' என்பதால், கொடுமை செய்யவே அந்த இரவு கொடி கட்டி வந்திருப்பதுபோலத் தோன்றுகிறது. 'நாளை உதயத்தில் என் தலைவன் வந்து விடுவான்; அநியாயமாக என்னை வருத்தும் உன்னைத் தண்டித்து விடுவான்: அதற்குள் நீ ஓடிப்போ ('விடியாய்')' என்று பயமுறுத்துவதுபோல் பேசுகிறாள். இப்படி நயமும் பயமுமாக இரவோடு வாதஞ் செய்கிறவளுக்கு அந்த இரவு எத்தனையோ யுகங்கள் போலக் கழிந்துகொண்டிருக்க வேண்டும்!

'இரவோ விடியாது!' என்று தோன்றிய போதிலும், நிலவு வெயில் போலக் காய்கிறதாம். அனல் - வாயோடும் சந்திரிகை யென்ற பற்களோடும் 'தென்றற் புலியே இரைதேடுகியோ?' என்று நடுங்குகிறாள். 'கடலே! எழுகிறாய்; விழுகிறாய்; புரளுகிறாய்; அலறுகிறாய்! நீயும் என்னைப்போல் உறங்கவில்லையே! நீயும் மன்மத பாணத்துக்கு அஞ்சிய கன்னிகை தானோ?' என்று கடலைக் குறித்தும் இரங்குகிறாள்.

'என் மனம்தான் என்னை என்ன பாடு படுத்துகிறது!' என்கிறாள்:

கருநா யிறுபோல் பவர்கா லொடுபோய்,
வருநாள் அயலே வருவாய்: மனனே!
பெருநா ளுடனே பிரியா துழல்வாய்!
ஒருநாள் தரியா தொழிவார் உளரோ?

[ கரு நாயிறு - கருநிறத்தை யுடைய ஒரு சூரியன். போல்பவர் - ஒப்பவர். மனனே - மனமே. பெருநாள் - மணநாள். தரியாது - பொறுத் திருக்காமல். ]

உலகத்திலுள்ள பொருளொன்றுமே தன் காதலனுக்கு ஒப்பாகா தென்று, 'கருநாயிறு' என இல்லாத பொருளொன்றை உவமையாக்கு கிறாள், அந்த அழகையும் தேஜஸையும் அப்படியாவது ஆசை தீர உவமித்துப் பார்க்கலாமோவென்று. திடீரென்று நீல ஜோதியோடு கூடிய ஒரு சூரியன் அற்புதமாக உதயமானது போல் அன்று மிதிலை வீதியில் தோன்றிய புருஷோத்தமனைக் கண்டதும், கண்ணைப் பறிக்கும் அந்த அழகு கருத்தையும் பறித்துக் கொண்டு போய்விட்ட தென்கிறாள். இவள் மனம் இராம பாதார விந்தம் என்ற அந்த 'அடிச்சோதி' யுடனே போய்விட்டதாம். அவனை மீளவும் சபா மண்டபத்திலே கண்டபோதுதான் இவள் மனம் இவளுக்கருகில் வந்ததாம். மறுபடியும் அவன் மறைந்ததும் இவள் மனமும் மறுபடி போய்விட்டதாம் அந்த அடிமலர்களோடு. 'அவனுடனே பிரியாமலிருக்கும் நிலை, நாளை நேர்ந்து விடுமே! அப்படி யிருந்தும் ஒரு நாள்கூட நீ பொறுத்திருக்க மாட்டேன் என்கிறாய்!' என்று தன் மனத்தையும் நொந்து கொள்ளுகிறாள்.

சீதையைப் போல் இராமனும் இரவை வருத்தத்தோடு தான் கழித்துக் கொண்டிருந்தான். 'அவளை இருதரம் கண்டும், எப்போதும் கருதியிருந்தும், அந்த அழகுக் கடலின் கரையைக் கண்டேனில்லை!' என்கிறான்.

'முன்கண் டு,முடிப் பருவேட் கையினுல்,
என்கண் துணைகொண்(டு) இதயத் தெழுதிப்
பின்கண் டுமோர்பெண் கரைகண் டிலனுல்!
மின்கண் டவர்எங் கறிவார் வினையே ?'

[ முடிப்பரு வேட்கை - முடிப்பதற்கு முடியாத காதல். கண்துணை - இரண்டு கண்கள். ஓர்பெண் - அந்த ஒப்பற்ற பெண். மின் - மின்னல். வினை - தொழில். ]

என்று திகைப்படைகிறுன்.

'நான் முன்னே கன்னிமாடத்திலே கண்டதும் முடிவில்லாத காதல் கொண்டேன். கண்ட என் கண்களையே எழுதுகோலாகக் கொண்டு அந்த வடிவத்தை என் இதயத்திலேயே சித்திரித்து ஜாக்கிரதையாக வைத்துக்கொண்டேன். இன்று கொலுமண்டபத்தில் நேரிலும் கண்டேன். எனினும் அந்தப் பெண்மையென்ற சமுத்திரத்தின் கரை கண்டேனில்லை! மின்னலைக் கண்ணெதிரே கண்டவர்போல், அந்த அழகையும் கண்டு திகைத்துப் போனேன்!' என்று சொல்லிக்கொண்டே, சந்திரனைப் பார்க்கிறுன். ஆ, அங்கும் அந்த முகம்தான்!

'திருவே அனையாள் முகமே! உயிரின்
கருவே! கனியே! வினைகா மவிதைக்(கு)
ஏருவே! மதியே! இதுஎன் செய்தவா?
ஒருவே னெடுநீ உறவா கலையோ?'

[திருவே அனையாள் - லட்சுமியே போன்ற சீதை. மதி - சந்திரன். என் செய்தவா-என்ன செய்தவாறு. ஒருவேனெடு-ஒருத்தனை என்னேடு.]

என்கிறுன்.

சந்திரனை அந்த முகமண்டலமாகவே கண்டவன், தன் உயிரின் கருவும் கனியும் அதுதானென்று தீர்மானித்தான். காதல் - வித்து வளர்வதற்குக் 'கரு' அல்லது உற்பத்தி - காரணமாயிருப்பதுபோல், துணைக் காரணமான ஊமும் அதுதான் என்கிறுன். பிறகு 'அது அவள் முகசந்திரன் அன்று; சாதாரணமான சந்திரன்தான்' என்ற நினைவு வருகிறது. உடனே 'என்ன?' அந்த முகத்துக்கு அப்படி உறவாகி என்னை என்ன பாடு படுத்திவிட்டாய்!' என்று, அந்த நிலையை விவரிக்கவும் கூசி, 'இது என் செய்தவாறு?' என்று குறிப்பிடுகிறுன். 'அவளுக்கு உறவாகி என்னை வருத்துகிற நீ, துணையின்றித் தனித்திருக்கும் என்னையும் பகைத்து வருத்தாமல் எனக்கும் உறவாகமாட்டாயா?' என்று வேண்டிக்கொள்ளுகிறுன்.

அந்த இரவு வளர்ந்துகொண்டே யிருக்கிறது ! 'அந்தக் கட்டழகி யின் விழிபோல, அளவில்லாமல் வளர்ந்து கொண்டிருக்கிறதே !' என்கிறுன்:

கழியா உயிருந் தியகா ரிகைதன்
விழிபோ லவளர்ந் தது;வீ கிலதால்:
அழிபோர் இறைவன் படஅஞ் சியவன்
பழிபோ லவளர்ந் ததுபா யிருளே !

[ கழியா - கழியாத ; நீங்காத. உந்திய - தள்ளிய. காரிகை - (இங்கே) சீதை. வீகிலது - நீங்கும் தன்மையுள்ளதன்று. அழி போர் - அழிதற்கு இடமான போரில். இறைவன் - தலைவன். பட - இறந்துபோக. அஞ்சியவன் - அஞ்சி ஓடிப்போனவன். பாயிருள் - பரவிய இருள். ]

இராமனும் தன் மனத்தை நொந்துகொள்ளுகிறுன்:

நினையாய் ஒருகால்: நெடிதோ நெறிதான் ?
வினவா தவர்பால் விடைகொண் டிலையோ ?
புனமான் அனையா ரொடுபோ யினஎன்
மனனே! எனைநீ யுமறந் தனையோ ?

[ நெறி - வழி. புனமான் - மலைச் சார்பான கொல்லையிலுள்ள மான். அனையார் - ஒத்துள்ளவர். ]

'என் மனமே! என்னை நீ ஒருபோதும் நினைக்கிறுயில்லை! நீ அவளுடன் சென்றுயே: இன்னும் என்னிடம் திரும்பிவர முடியாதபடி அந்த வழி நீண்டதோ? உனக்குரிய "மனோவேக"த் திலும் வரமுடியாதபடி அவ்வளவு நீண்டதோ? "நீ யார்? எங்கே வந்தாய்? ஏன் வந்தாய்?" என்றுகூட யோகக்ஷேமம் விசாரியாதவரை உடனே விட்டு நீங்காமல், தொடர்ந்து திரிந்துகொண்டிருக் கிறுயே: என்ன பைத்தியம்! நீயும் என்னை மறந்துவிட்டாயோ?' என்றெல்லாம் புலம்புகிறுன்.

'வினவாதவர்பால்' என்பதை 'வினவாது அவர்பால்' என்றும் பிரித்துப் பொருள் கொள்ளலாம். 'யோகக்ஷேமம் விசாரியாதவரிடம் நீயும் உத்தரவு கேளாமலே மீண்டு வாராயோ?' என்பது குறிப்பு. 'என் மனமே! எனை நீயும் மறந்தனையோ?'—அதாவது, 'அவர் தான் மறந்துவிட்டார்! அவரோடு சென்ற நீயும் அவரைப்போலவே என்னை மறந்தாயோ?' — என்று கேட்கிறான். இந்த நிலையில் 'நினையாய் ஒருகால்!' என்பதற்கு 'நீ என்னை ஒருதரமாவது நினைக்கவேணும்; அவளோடிருக்கும் நீ என்னை ஒருகால் நினைத்தாலும் ஆனந்தமாயிருக்குமே!' என்றுகூடப் பொருள் கொள்ளலாம்.

சீதாராமர் இரவை இங்ஙனம் வருத்தத்தோடு கழிக்க, ஜனக மன்னன் அதே இரவில் யானைமேல் முரசறைந்து 'நாளைத் திரு மணம்: பட்டணத்தை அலங்கரிக்கவேணும்' என்று ஜனங்களுக்குத் தெரிவித்தான்.

முரசறை தலும்,மான முதியரும் இளையோரும்
விரைசெறி குழலாரும் விரவினர், விரைகின்றார்,
உரைசெறி கிளையோடும் உவகையின் உயர்கின்றார்,
கரைசெய அரிதாகும் இரவொரு கரைகண்டார்.

[மான முதியர் - பெருமையையுடைய வயது முதிர்ந்தவர். விரை - வாசனை. செறி - மிகுந்த. குழலார்-கூந்தலையுடைய பெண்கள். விரவினர் - கலந்தவர்களாய். உரை செறி கிளை - (க்ஷேமம்) விசாரித்தல் மிகுந்த சுற்றத்தார்.]

பேரிகை மூலமாகச் செய்தி தெரிந்ததும், வயது முதிர்ந்தவர்கள் இளைஞர்கள் பெண்கள் என்ற வித்தியாசமில்லாமல் எல்லோரும் துரிதமாக நகரத்தை அலங்கரிக்கத் தொடங்கினார்கள். காதலர்களான சீதாராமருக்கு இரவு நீண்டுகொண்டே யிருந்ததுபோல், சீதா கல்யாணம் கண்டு களிக்க விரும்பிய நகர மாந்தர்களுக்கும் அந்த இரவு நீடித்ததாகவே தோன்றியதாம்.

இரவு விடியச் சூரியன் தோன்றுகிறான், தன் குலத்தில் உதித்த இராமனது திருமணம் காண வந்தவன்போல:

அஞ்சன ஒளியானும் அலர்மிசை உறைவாளும்,
எஞ்சலில் மணம்நாளைப் புரிகுவ ரெனலோடும்,
செஞ்சுடர் இருள்கீறித் தினகரன் ஒருதேர்மேல்
மஞ்சனை அணிகோலம் காணிய எனவந்தான்.

[ அலர் - மலர் ; (இங்கே) தாமரை மலர். அலர்மிசை உறைவாள் - தாமரை மலர்மீது வாழ்கிற மகாலட்சுமியின் அம்சமான சீதை. எஞ்சலில்- குறைவில்லாத. தினகரன் - சூரியன். மஞ்சன் - மைந்தன்; (இங்கே) வம்ச பரம்பரையில் வந்த மைந்தன். மஞ்சனை - மைந்தனாகிய இராமனுடைய. அணிகோலம் - அழகிய கல்யாணக் கோலம், காணிய - காண்பதற்கு. ]

கல்யாணம் பார்க்க வேணுமென்று பல தேசத்து அரசர்களும் ஜனங்களும் வந்து சேருகிறார்களல்லவா? சூரியனும் தன் வம்ச பரம்பரையில் வந்த மைந்தனான இராமனது மணக்கோலத்தைப் பார்க்க வருபவன் போலத் தன் சிவந்த கிரணங்களால் இருளாகிய திரையைக் கீறிக்கொண்டு பொன்மயமாகிய ஒரு தேரின்மேல் வந்தானென்று கவி கற்பித்துக் கூறுகிறான்.

மிதிலை ஜனங்கள் தங்கள் நகரத்தைப் பலவிதமாக அலங்காரஞ் செய்கிறார்கள்.

தோரணம் நடுவாரும், தூண்உறை பொதிவாரும்,
பூரண குடமெங்கும் புனைதுகில் புனைவாரும்,
காரணி நெடுமாடம் கதிர்மணி அணிவாரும்,
ஆரண மறைவாணர்க்(கு) இன்னமு(து) அடுவாரும்,

[ தூண்உறை பொதிவாரும் - தூண்களுக்கெல்லாம் (பலவகை வர்ணச் சீலைகளாலான) உறைகள் பொதிந்து அலங்கரிப்பவர்களும். புனை துகில் - அழகிய ஆடை. காரணி - மேகங்கள் வந்து பொருந்துகிற. கதிர்மணி - ஒளி

யுள்ள இரத்தினங்கள். ஆரண மறைவாணர் - வேதங்களிலுள்ள இரகசியங்களை அறிந்து வாழும் அந்தணர்கள். அடுவாரும் - சமைப்பவர்களும்.]

அன்னமென் னடையாரும் மழவிடை அனையாரும்,
கன்னிநன் னகர்வாழை கமுகொடு நடுவாரும்,
பன்னரு நிரைமுத்தம் பரியன தெரிவாரும்,
பொன்னணி அணிவாரும், மணியணி புனைவாரும்,

[மழவிடை அனையாரும் - இளங்காளையின் நடைபோன்ற கம்பீரமான நடையுடைய ஆடவர்களும். பன்னரு நிரைமுத்தம்-சிறப்பித்துச் சொல்ல முடியாத கூட்டமான முத்துக்கள். பரியன - பருத்துள்ளன.]

சந்தனம் அகில்நாறும் சந்தொடு தெருவெங்கும்
சிந்தினர் திரிவாரும் செழுமலர் சொரிவாரும்,
இந்திர தனுநாணும் எரிமணி நிரைமாடத்(து)
அந்தமில் விலையாரக் கோவைகள் அணிவாரும்,

[நாறும் - பரிமளம் வீசுகிற. சந்து - சந்தனம்; (இங்கே) அகிற் கட்டையைத் தேய்த்துத் தயார் செய்யும் சந்தனக் குழம்பு. இந்திர தனு - (பல நிறங்களையுடைய) வானவில். எரிமணி - (பலவகை நிறமாக) விளங்குகிற இரத்தினங்கள். நிரை - வரிசை. மாடத்து - உபரிகை வீடுகளின் வெளியிலே. அந்தமில் - அளவிலாத. ஆரக்கோவைகள் - முத்து வடங்கள்.]

நகரமெங்கும் காணப்படுகிறார்கள்.

சிலர் இரத்தின தீபங்களையும் பாலிகைக் கிண்ணங்களையும் திண்ணை யோரங்களிலெல்லாம் வைக்கிறார்கள். சிலர் வெயில் விழாதபடி முத்துப்பந்தல் அமைக்கிறார்கள். சிலர் வண்டிகளில் வாசனையுள்ள பூக்களைக் கொண்டு வருகிறார்கள். சிலர் சோலைகளிலுள்ள வாழை முதலிய இலைகளையும், பல வகைக் கனிகளையும் கொண்டு வருகிறார்கள். சிலர் யானைகளின் நெற்றியிலே பட்டங்களை அணிகிறார்கள்.

மிதிலாபட்டணத்தைச் சிங்காரிப்பதோடு ஜனங்கள் தங்களையும் சிங்காரித்துக் கொள்ளுகிறார்கள், பலவகை ஆபரணங்களாலும் பூமாலைகளாலும் சித்திரப் பட்டாடைகளாலும். இன்னும்,

**கலவைகள் புனைவாரும், கலைநல தெரிவாரும்,**
**மலர்குழல் மலைவாரும், மதிமுகம் மணியாடித்**
**திலகமுன் இடுவாரும், சிகழிகை அணிவாரும்,**
**இலவிதழ் பொலிகோலம் எழில்பெற இடுவாரும்,**

[ கலவை - கலவைச் சந்தனம். கலைநல - நல்ல ஆடைகள். மலைவார் - சூட்டிக்கொள்வார். மணியாடி - அழகிய கண்ணாடி. சிகழிகை - ஒருவகை மாலை. இலவிதழ் - இலவு இதழ் - இலவம் பஞ்சு மரத்தின் பூப்போலச் சிவந்த அதரம். பொலி - பொலிகிற. கோலம் - செந்நிறக் கோலம். ]

பல இடங்களில் காணப்படுகிறார்கள்.

சிலர் வீணாகானம் செய்வதும், வேறுசிலர் அதைச் செவியால் பருகி இன்புறுவதுமாயிருக்கிறார்கள். அரசர்கள் நெருங்கிவருவதால் கிரீடங்கள் ஒன்றோடொன்று தாக்கிப் பொன்னையும் இரத்தினங்களையும் சிந்துகின்றனவாம். போர்வீரர்கள் ஆயுதபாணிகளாக மதம் கொண்ட யானைபோலத் திரிகிறார்களாம். நர்த்தனஞ் செய்து கொண்டிருக்கும் பெண்கள் தங்கள் புன்சிரிப்பினால் உயிரைக் கொள்ளை கொள்ளுகிறார்களாம்.

எங்கும் பொன்னொளி வீசுதலால் தேவர்களின் பொன்னகரம் போல் விளங்கும் மிதிலைமாநகரில், சிலர் இரதங்களிலும், சிலர் பல்லக்குகளிலும், சிலர் யானைகளின்மேலும், சிலர் வேறு வாகனங்களின்மேலும் வருகிறார்கள். அந்தக் கல்யாண நாள் இந்திரன் முடி சூடும் திருநாளை ஒத்திருக்கிறதாம்.

கல்யாண மண்டபம் தங்கத் தகடுகளும் இரத்தினங்களும் பதிக்கப் பெற்று விளங்குகிறது. தசரத சக்கரவர்த்தி அந்த மண்டபத்தை

அடைந்து, பொன்னால் அமைத்து இரத்தினங்கள் பதிக்கப்பட்டுள்ள ஆசனத்தில் வீற்றிருக்கிறான். ஜனகமன்னனும் தன் பந்துவர்க்கம் சூழ்ந்துநிற்க ஓர் ஆசனத்தில் வீற்றிருக்கிறான். மற்ற அரசர்களும் முனிவர்களும் தத்தம் தகுதிக் கேற்ற ஆசனங்களில் அமர்ந்திருக் கிறார்கள்.

இராமனும் தன்னை அலங்கரித்துக் கொள்ளுகிறான்.

அழிவரு தவத்தினோ(டு) அறத்தை ஆக்குவான்,
ஒழிவருங் கருணையோர் உருவு கொண்டென,
எழுதரு வடிவுகொண்(டு) இருண்ட மேகத்தைத்
தழுவிய நிலவெனக் கலவை சாத்தியே,

[ அழிவரு - (அரக்கர்களால்) அழிந்து வருகிற. ஒழிவருங் கருணை - ஒழிக்க முடியாத கருணை. எழுதரு - (சித்திரத்தில்) எழுதுதற்கும் கூடாத. சாத்தி - தரித்து. ]

ஏதமில் இருகுழை, இரவு நன்பகல்
காதல்கண் டுணர்ந்தன கதிரும் திங்களும்
சீதைதன் கருத்தினைச் செவியின் உள்ளுறத்
தூதுசென் றுரைப்பன போன்று, தோன்றவே,

[ ஏதமில் - குற்றமில்லாத. குழை - குண்டலங்கள். இரவு நன்பகல் - இரவிலும் நல்ல பகற்காலத்திலும். உணர்ந்தன கதிரும் திங்களும் - அறிந் தவையாகிய சூரியனும் சந்திரனும். ]

மண்ணுறு சுடர்மணி வயங்கித் தோன்றிய
கண்ணுறு கருங்கட லதனைக் கைவளர்
தண்ணிறப் பாற்கடல் தழீஇய தாமென,
வெண்ணிறப் பட்(டு)ஒளி விளங்கச் சாத்தியே,

[ மண்ணுறு - சாணை பிடிக்கப்பட்டு விளங்குகிற. சுடர்மணி - சுடர் வீசும் இரத்தினங்கள். வயங்கி - விளங்கி. கண்ணுறு - கண்ணில் படுகிற.

கைவளர் - (அலைகளாகிய) கைகள் வளரப்பெற்ற. தண் - குளிர்ந்த. தழீஇயது ஆமென - தழுவியதாகும் என்று சொல்லும்படி. ]

இன்னணம் ஒளிர்தர, இமைய வர்க்கெலாம்
தன்னையே அனையதோர் கோலம் தாங்கினுன்,
பன்னக மணிவிளக்(கு) அழலும் பாயலுள்
அன்னவர் தவத்தினுல் அனந்தர் நீங்கினுன்.

[ இன்னணம் - இவ்வாறு. இமையவர் - தேவர்கள். பன்னகம் - ஆதி சேஷன். அழலும் - விளங்கும். பாயல் - சயனம். அனந்தர் - நித்திரை. ]

மணமகன் கல்யாண மண்டபத்தை அடைந்து, அங்கிருந்த வசிஷ்டர் விசுவாமித்திரர் முதலிய முனிவரையும் தந்தையாகிய தசாதனையும் தொழுது, பக்கத்திலே இட்டிருந்த ஆசனத்தில் வீற்றிருக்கிறுன். அதே சமயத்தில்,

சிலையுடைக் கயல்வாள்-திங்கள் ஏந்தி,ஓர் செம்பொற் கொம்பர்,
முலையிடை முகிழ்ப்பத் தேர்மேல் முன்திசை முளைத்த தன்னுள்,
அலைகடற் பிறந்து, பின்னை அவனியில் தோன்றி மீள
மலையிடை உதிக்கின் ருள்போல், மண்டப மதனில் வந்தாள்.

[ சிலை - வில். (நெற்றி.) கயல் - மீன். (கண்.) வாள் திங்கள் - ஒளியை யுடைய சந்திரன். (முகம்.) செம்பொற் கொம்பர் - சிவந்த பொன்மயமான பூங்கொம்பு. முகிழ்ப்ப - அரும்ப. முன்திசை - கிழக்குத் திசை. அன்னுள் - போன்றவள். அவனி - பூமி. ]

ஒளிமயமான தேர்மேல் கீழ்த்திசையிலே இளஞ்சூரியன் உதய மாவதுபோல், கல்யாண மண்டபத்தின் கிழக்கு வாசலை நோக்கிச் சீதை தேரில் வந்தாளென்பதும், அப்படி அவள் வருவதைப் பார்க்கும் நிலையில் இராமன் கிழக்கு முகமாக வீற்றிருந்தா னென்பதும் குறிப்பு.

சீதை மகாலட்சுமியாகப் பாற்கடலில் தோன்றிய காலத்தில், மகாவிஷ்ணுவாக இருந்த இராமன் மணஞ்செய்து கொண்டா

னல்லவா? அன்றைத் திருக்கல்யாணத்தைக் காட்டிலும் இன்றைத் திருக்கல்யாணம் அதிக அழகுடையதென்று இரண்டு கல்யாணங்களையும் காணப்பெற்ற தேவர்கள் சொல்லுகிறார்களாம். இப்படிப் பட்ட அழகைக் கண்டு களிக்க இந்திரனும் சிவபெருமானும் பிரமதேவனும் தேவியருடன் வருகிறார்கள்.

இந்திரன் சசியோடும் எய்தி னான்;இளஞ்
சந்திர மௌலியும் தைய லாளுடன்
வந்தனன்; மலரயன் வாக்கி னளுடன்
அந்தரம் புகுந்தனன் அழகு காணவே.

[ சசி - இந்திராணி. இளஞ்சந்திர மௌலி - பிறைச்சந்திரனை முடியில் அணிந்த சிவன். தையலாள் - (இங்கே) மனைவியான உமாதேவி. மலரயன் - தாமரை மலரில் வாழ்கிற பிரமன். வாக்கினள்-வாக்கின் அதிதேவதையான சரஸ்வதி. அந்தரம் - ஆகாயம். ]

வசிஷ்ட முனிவர் மணச் சடங்குக்கு ஆயத்தஞ் செய்கிறார். சீதையும் இராமனும் மணத் தவிசில் நெருங்கி வீற்றிருக்கிறார்கள், போகமும் யோகமும்போல.

மன்றலின் வந்து மணத்தவி சேறி,
வென்றி நெடுந்தகை வீரனும் ஆர்வத்(து)
இன்றுணை அன்னமும் எய்தி யிருந்தார்,
ஒன்றிய போகமும் யோகமும் ஒத்தார்.

[ மன்றலின் - கல்யாணத்தின் பொருட்டு. மணத் தவிசு - மணத்துக்கு உரிய ஆசனம். வென்றி - வெற்றி. நெடுந்தகை - பெருமைக்குணம். ஆர்வம்- அன்பு. இன்றுணை - இன்துணை - இனியதுணை. அன்னம் - அன்னத்தை ஒத்த சீதை. ஒன்றிய - ஒன்றோடொன்று நெருங்கிப் பொருந்திய. ]

ஜனகன் மணமகனுக்கு எதிரே நின்று, 'நீ என் மகளோடு திருமாலும் திருமகளும்போல நீடூழி வாழ்க' என்று தாரைவார்த்துக் கொடுக்கிறான்.

கோமகன் முன்சன கன்,குளிர் நன்னீர்,
‘ பூமக ளும்பொரு ளும்மென நீஎன்
மாமகள் தன்னொடு மன்னுதி ’ யென்னுத்
தாமரை யன்ன தடக்கையின் ஈந்தான்.

[ கோமகன் - சக்கரவர்த்தியின் குமாரனை இராமன். பூமகள் - தாமரைப் பூவில் வாழும் திருமகள். பொருள் - பரம்பொருளாகிய திருமால். மாமகள் - பெருமையும் அழகும் வாய்ந்த மகள். மன்னுதி - நிலைபெற்று வாழ்க. என்னு - என்று சொல்லி. தாமரையன்ன - செந்தாமரை மலரை ஒத்த. தடக்கை - பெரிய கை. ]

அப்படிக் கன்னிகாதானம் செய்யும்போது அந்தணர்கள் ஆசீர் வாதம் செய்யும் ஓசையும், பெண்கள் பல்லாண்டு பாடும் இசையும், மன்னர்கள் வந்தனஞ் செய்யும் ஆரவாரமும், முனிவர்கள் வாழ்த்தும் ஒலியும், மங்கள பேரிகைகளோடு முழங்குகின்றன.

அந்தணர் ஆசி, அருங்கல மன்னுர்
தந்தபல் லாண்டிசை, தார்முடி மன்னர்
வந்தனை, மாதவர் வாழ்த்தொலி போல
முந்தின பேரி முழங்கின மாதோ.

[ அருங்கலம் அன்னுர் - அருமையான ஆபரணங்களை ஒத்து அழகு வாய்ந்த பெண்கள். பேரி - பேரிகை. ]

வானவர்கள் பூமழை பொழிகிறுர்கள்; மன்னவர்கள் பொன்மழை பொழிகிறுர்கள் ; மற்றவர்கள் முத்து முதலியவற்றை வாரிச் சொரிகிறுர்கள். அப்பொழுது இராமன் முறைப்படி ஓமம் செய்து சீதையைப் பாணிக்கிரகணஞ் செய்கிறுன்.

வெய்ய கனற்றலை, வீரனும் அந்நாள்
மையறு மந்திரம் முற்றும் வழங்கா,
நெய்யமை ஆகுதி யாவையும் நேர்ந்தான்,
தையல் தளிர்க்கை தடக்கை பிடித்தான்.

[ வெய்ய - வெப்பமான. கனற்றலை - கனல் தலை - அக்கினியினிடத்தில். அந்நாள் - அப்பொழுது. மையறு-குற்றமற்ற. வழங்கா - வழங்கி; சொல்லி. நெய் அமை ஆகுதி - நெய்யால் அமைந்த ஆகுதிகள். நேர்ந்தான் - முறைப்படி கொடுத்தவனாகி. தடக்கை - பெரிய கை. ]

சீதையின் தளிர்போன்ற மெல்லிய கையைத் தனது பெரிய கையால் பிடித்துக்கொண்டு மங்களத் தீயை வலம் வருகிறான் இராமன். உயிரைத் தொடரும் உடம்புபோலச் சீதையும் தன் பிராண நாயகனைத் தொடர்ந்து செல்லுகிறாள். இவர்கள் தீவலம் வந்த பின், அம்மி மிதித்து அருந்ததி காணும் கிரியைகள் நடைபெறுகின்றன. பின்பு தம்பதிகள் பெரியோரை வணங்குகிறார்கள். இராமன் சீதையின் கையைப் பிடித்துக்கொண்டு அரண்மனைக்குள் செல்லுகிறான்.

**ஆர்த்தன பேரிகள், ஆர்த்தன சங்கம் ;**
**ஆர்த்தன நான்மறை, ஆர்த்தனர் வானோர் ;**
**ஆர்த்தன பல்கலை, ஆர்த்தன பல்லாண்(டு) ;**
**ஆர்த்தன வண்டினம், ஆர்த்தன வேலை.**

[ ஆர்த்தன - ஆரவாரஞ் செய்தன. நான்மறை - நான்கு வேதங்கள். பல் - பல. வண்டினம் - வண்டுகளின் கூட்டம். வேலை - கடல். ]

பலவகையான மங்கள கோஷங்களும் கடல்போல் கோஷிக்க, இராமன் முதல்முதல் கைகேயியின் பாதங்களை வணங்கினான். தாயான கௌசல்யா தேவியிடமுள்ள அன்பைக் காட்டிலும் அதிக அன்புடன் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தான். பின்புதான் தன் தாயான கௌசல்யா தேவியை வணங்கினான். அதன் பின்பு சுமித்திரா தேவியையும் நமஸ்கரித்தான். சீதையும் அத்தாய்மார் மூவரையும் வணங்கினாள்.

**கேகயன் மாமகள் கேழிரு பாதம்**
**தாயினும் அன்பொடு தாழ்ந்து வணங்கா,**

ஆயதன் அன்னை அடித்துணை சூடித்
தூய சுமித்திரை தாள்தொழ லோடும் ;

[ கேகயன் மாமகள் - கேகயராஜனது சிறந்த மகளான கைகேயி. கேழ் - ஒளி. வணங்கா - வணங்கி. ஆய - ஆகிய; பொருந்தின. தூய - பரிசுத்தமான. ]

அன்னமும் அன்னவர் அம்பொன் மலர்த்தாள்
சென்னி புனைந்தனள் : சிந்தை மகிழ்ந்தார்,
கன்னி அருந்ததி காரிகை காணு,
' நன்மக னுக்(கு)இவள் நல்லணி ' யென்ருர்.

[ அன்னம் - (இங்கே) சீதை. அன்னவர் - அத்தாய்மார். அம் - அழகிய. சென்னி புனைந்தனள் - தலைக்கு அணியாகக் கொண்டு வணங்கினுள். கன்னி அருந்ததி காரிகை - அழிவில்லாத அருந்ததிபோன்ற கட்டழகுடைய சீதை. காணு - கண்டு. நல்லணி - நல்ல ஆபரணம். ]

சீதை வணங்கியதும் அத்தாய்மார் சிந்தை மகிழ்ந்தவர்களாய், 'நமது நன்மகனுக்கு இவள் நல்ல ஆபரணம்' என்று தழுவி நின்ருர்கள். அவளையும் இராமனையும் திரும்பத் திரும்பக் கண்ணும் மனமும் களிப்பேற நோக்கி நோக்கி, 'அழகனுகிய இராமனுக்குப் பொருத்தமான மனைவி இவளைத் தவிர வேறு யார்தான் இருக்க முடியும் ?' என்று கொண்டாடினுர்கள்.

சங்க வளைக்குயி லைத்தழி நின்ருர்,
' அங்கண னுக்(கு)உரி யாருள ராவார்
பெண்கள் இனிப்பிறர் ஆருளர் ? ' என்ருர்,
கண்கள் களிப்ப மனங்கள் களிப்பார்.

[ சங்க வளை - சங்கினுலாகிய வளை . குயில் -குயில்போன்ற குரலையுடைய சீதை. தழி- தழீஇ-தழுவி. அங்கணனுக்கு-அழகிய கண்களையுடைய இராமனுக்கு. ]

பங்குனி மாசத்து உத்தர நட்சத்திரம் கூடியுள்ள சுபதினமாகிய அன்றைய தினத்திலே சீதாகல்யாணம் இனிது நிறைவேறியது.

பங்குனி உத்தர மான பகற்போ(து),
அங்கண் இருக்கினில் ஆயிர நாமச்
சிங்க மணத்தொழில் செய்த திறத்தால்,
மங்கல அங்கி வசிட்டன் வளர்த்தான்.

[ அங்கண் - அவ்விடத்திலே. இருக்கினில் - வேத விதிப்படி. ஆயிர நாமச் சிங்கம் - ஆயிரம் திருநாமங்களையுடைய சிங்கம்போற் சிறந்த இராமன். அங்கி - அக்கினி; (இங்கே) ஓமாக்கினி. ]

இங்ஙனம் மணவேள்வி வசிஷ்டரால் நடந்தபோதிலும், உண்மையில், சித்தாச்ரமத்திலே ('தருவனத்துள்') தான் இயற்றிய வேள்வியை வியாஜமாகக் கொண்டு திருமணத் தூதராகச் சென்று இராமனை அழைத்து வந்த விசுவாமித்திர முனிவராலேயே காவிய நாயகனுக்கும் காவிய நாயகிக்கும் மணவேள்வி இனிது நிறைவேறியதென்று சொல்ல வேண்டும்.

திருமணம் நிறைவேறியபின், விசுவாமித்திர முனிவர் சீதா ராமர்களுக்கு ஆசி கூறிவிட்டுத் தாம் நித்தியவாசஞ்செய்யும் இமய மலையிலே தவஞ்செய்யப் போய்விடுகிறார். இனி இவரை நாம் இராமாயணத்தில் சந்திப்பதேயில்லை.

## 22. பரசுராம கர்வபங்கம்

தசரதன் புதல்வர்களுடனும் சுற்றம் பரிவாரம் சேனை முதலியவற்றுடனும் அயோத்திக்குப் புறப்பட்டான். சக்கரவர்த்தி முன்னே செல்ல, மிதிலை வாசிகள் மனம் பின்னே தொடர, தம்பிமார் அருகேவர, இராமன் சீதையுடன் இனிமையாக வழிச் சென்றான்.

'முன்னேநெடு முடிமன்னவன் முறையிற்செல, மிதிலை
நன்மாநகர் உறைவார்மனம் நனிபின்செல, நடுவே
தன்னேர்புரை தருதம்பியர் தழுவிச்செல, மழைவாழ்
மின்னேயெனும் இடையாளொடும் இனிதேகினன் வீரன்.

[நெடுமுடி மன்னவன் - பெரிய கிரீடத்தை அணிந்த சக்கரவர்த்தி. உறைவார் - வாழ்கிறவர்கள். நனி - மிகுதியாக. தன்னேர்புரைதரு - தன்னை நேராக ஒத்த. தழுவி - நெருங்கி.]

இவ்விதமாக வீரனான இராமன் காதலியோடு சந்தோஷமாக அயோத்தியை நோக்கிச் செல்லும்போது, பரசுராமன் மின்னும் சடையோடும் தன் ஆயுதமான கோடாலியுடனும் வில்லுடனும் ஒரு பொன்மலை இடம் பெயர்ந்து நடந்து வருவதுபோன்ற பயங்கரமான தோற்றத்தோடு வருகிறான். அவன் முகமும் கண்ணும் நெருப்பைக் கக்குகின்றனவாம்; வார்த்தை இடியிடிப்பது போலிருக்கிறதாம். வரும்போதே கையிலுள்ள அந்த வில்லை வளைத்து அம்பு தொடுக்குமாறு நாணேற்றிக் கைவிரலால் தெறிக்கிறான். 'இவ்வளவு பெருங்கோபத்திற்குக் காரணம் யாதோ?' என்று அயலிலுள்ளவர் எல்லாரும் கருதுகிறார்கள். இந்நிலையில் பரசுராமனுடைய தோள்கள் திக்குக்களை முட்டுவதுபோலவும்,

ஜடைமுடி ஆகாயத்தை எட்டுவதுபோலவும் காண்கின்றன. அவன் சர்வசங்கார காலத்திலே உயிர்களையும் உலகங்களையும் கொன்று நடனஞ்செய்யும் ஸ்மசான ருத்திரமூர்த்திபோலத் தோன்றுகிறான்.

தன் தாய் தந்தையர்க்குக் கேடு செய்த கார்த்தவீரியார்ச்சுனன் என்ற அரசனது ஆயிரம் தோள்களையும் வெட்டி வீழ்த்தியும், கோபம் தணியாமல் இருபத்தொரு தலைமுறை க்ஷத்திரிய அரசர்களைக் கொன்ற பரசுராமன் இப்போது தனக்கெதிரே ரௌத்திராகாரமாக வருவதுகண்டு, தசரதன் 'இக்கொடியவன் இங்கு எதற்காக வருகிறான்?' என்று கொடிய வருத்தத்தை அடைகிறான், தன் அருமை மகனாகிய இராமனுக்குக் கேடு விளையுமோவென்று. சக்கரவர்த்தியின் சேனைகள் பயந்தோடுகின்றன. பரசுராமனோ பேரிடிபோல ஆரவாரித்துக்கொண்டு இராமன் எதிரே செல்லுகிறான். சக்கரவர்த்தியின் வருத்தமும் கவலையும் அதிகப்படுகின்றன.

இராமன் 'இவன் யாரோ ?' என்று எண்ணிக்கொண்டிருக்கும் போதே தசரதன் இராமனுக்கும் பரசுராமனுக்குமிடையே சென்று தரையில் முடி படியப் பரசுராமன் காலில் விழுகிறான். பரசுராமனோ கோபம் சிறிதும் தணியாமல் தசரதனை லட்சியம் செய்யாமலே இராமனைநோக்கி,

'இற்றோடிய சிலையின்திறம் அறிவென் :இனி யானுன்
பொற்றோள்வலி நிலைசோதனை புரிவான்நசை யுடையேன் ;
செற்றோடிய திரள்தோளுறு தினவும்சிறி துடையேன் ;
மற்றோர்பொருள் இல(து);இங்கிதென் வர'வென்றனன் உரவோன்.

[ இற்று ஓடிய - முறிந்து ஒழிந்த. பொற்றோள் - அழகான தோள். வலி - வலிமை. நசை - விருப்பம். செற்று - (அரசர்களை) அழித்து. திரள் தோள் உறு - திரண்ட (என்) தோள்களில் பொருந்திய. இங்கிது என் - இங்கு இது என். உரவோன் - பலசாலியான பரசுராமன். ]

'இராமா! சிவ வில்லை முறித்துவிட்டேனென்று கர்வம் கொள்ளாதே! நீயா முறித்தாய்? நீ தொட்டதும் அது தானாகவே முறிந்தொழிந்தது: அந்த வில்லின் திறத்தை அறிவேன்! இனி நான் உன் அழகான தோளின் திறத்தையும் பரீட்சித்துப் பார்க்க விரும்புகிறேன். கண்ணுக்கு அழகான தோள்கள்: ஆனால் வலிமையிருக்கவா போகிறது? உன் தோள்களைப் பரீட்சை செய்வதோடு, என் தோள்களின் தினவையும் தீர்த்துக்கொள்ள வேண்டியிருக்கிறது! ஆம், என் திரண்ட தோள்களிலும் சிறிது தினவு இருக்கிறது: உன்னைப்போன்ற அரசர்களை ஒழித்து எவ்வளவு காலம் ஓடி விட்டது! இதுதான் என் வரவுக்குக் காரணம்; வேறொரு காரணமுமில்லை' என்று முரசு முழங்குவது போல் இராமன் எதிரே நின்று பரசுராமன் முழக்குகிறான்.

'அவன் அப்படி யெல்லாம் பயமுறுத்தும் சமயத்தில் வீரனை தசரத சக்கரவர்த்தியும் உள்ளபடி பயந்தே போகிறான், ஐயோ! 'இராமனுக்கு ஆபத்து வந்துவிட்டதே!' என்று. தாடகை முதலானவர்களை வதஞ் செய்த வீரத்தையும் வில்லிறுத்த வெற்றியையும் மறந்து விடுகிறான், அபிமானத்தாலும் பயத்தாலும். எவ்வளவு பரிதாபமாகப் பரசுராமனிடம் அபயதானம் வேண்டுகிறான்! பாருங்கள்:

அவன்அன்னது பகரும்மள வையின், மன்னவன் அயர்வான்,
'புவனம்முழு வதும்வென்றொரு முனிவற்கருள் புரிவாய்!
சிவனும்அயன் அரியும்அலர், சிறுமானிடர் பொருளோ?
இவனும்என துயிரும்உன தபயம்இனி!' யென்றான்.

[அளவையின் - சமயத்தில். அயர்வான் - மனம் தளர்பவனாய். புவனம் - பூமி.]

பரசுராமனைச் சமாதானம் செய்ய விரும்பி முகஸ்துதியாகப் பேசுகிறான் தசரதன். 'பூமி முழுவதையும் வென்று உமக்கென ஒன்றும் வைத்துக் கொள்ளாமல் காசியப முனிவருக்குக் கருணை

கூர்ந்து உதவிய உதார சீலரே!' என்று அழைக்கிறான், க்ஷத்திரிய அரசர்களை யெல்லாம் அழித்த அந்தச் செயலையும் பாராட்டுவதுபோல. 'சிவன் அயன் அரி என்ற மும்மூர்த்திகளும் உமக்கு ஒரு பொருளல்லர்: அற்ப மானிடராகிய நாங்கள் ஒரு பொருளோ?' என்று பதறுகிறான். 'இவனும் எனது உயிரும் உனது அபயம் இனி!' என்று பிரார்த்திக்கிறான்.

'பூமி முழுவதையும் ஒருவருக்குத் தானம் செய்த நீ எங்களுக்கும் அபயதானம் செய்யவேணும்' என்று மன்றாடுகிறான். 'எனதுயிரும்' என்பதற்கு முன் 'இவனும்' என்று இராமனைக் குறிப்பிடுவதால் தன் உயிரினும் இனியவன் இராமனென்பதும், இராமன் இருந்தால்தான் தனக்கும் உயிர் இருக்குமென்பதும் குறிப்பு. எனவே இராமனைக் காப்பாற்ற வேணுமென்றும், அவனைக் கண்டு இன்புற்றிருக்கவே தனக்கும் உயிர்ப் பிச்சை கொடுக்கவேணுமென்றும், இராமனும் தன் உயிரும் பரசுராமனது அடைக்கலப் பொருளாகு மென்றும் சொல்லித் தோத்திரம் செய்கிறான். ஆசையும் அபிமானமும் அதிகமாக அதிகமாகத் தசரதனைப் போன்ற வீரனுக்கும் பயமும் கவலையும் அதிகரிக்கின்றன.

பரசுராமன் அந்தச் சமாதான முயற்சியைச் சிறிதும் கவனியாமல், காலில் விழுந்த வீரமன்னனை இகழ்ந்து, இராமனை நோக்கிப் பெருஞ்சினத்தோடு, 'நீ முறித்த சிவதனுசு முன்னமே சிவனுக்கும் விஷ்ணுவுக்கும் ஏற்பட்ட போரில் முறிந்துபோனதுதான்! "அந்த ஊனவில்லை முறித்துவிட்டோமே!" என்று அந்த வலிமையைப் பெரிதாக மதித்திருப்பது ஊக்கமன்று' என்ற பீடிகையோடு தான் வந்த காரியத்தை விவரமாய்க் கூறுகிறான்.

'ஊனவில் இறுத்த மொய்ம்பை நோக்குவ(து) ஊக்க மன்றால் ;
மானவ! மற்றும் கேளாய் : வழிப்பகை யுடையேன் நும்பால் ;
ஈனமில் எந்தை சீற்றம் நீக்கிறு னென்ன, முன்னாள்
தானவன் அனைய மன்னன் கொல்ல,யான் சலித்து மேனாள்,

[ ஊனம் - குறைவு; அழிவு. மொய்ம்பு - வலிமை. மானவ - மனுகுலத் தவனே. நும்பால் - உங்களிடத்தில். ஈனமில் - குற்றமற்ற. எந்தை - என் தந்தை. தானவன் - அசுரன். சலித்து - வெறுத்து; கோபங்கொண்டு. ]

'மூவெழு முறைமை, பாரின் முடியுடை வேந்தை யெல்லாம்
மேவெழு மழுவின் வாயால் வேரறக் களைகட்(டு), அன்னுர்
தூவெழு குருதி வெள்ளத் துறையிடை, முறையின் எந்தைக்(கு)
ஆவன கடன்கள் நேர்ந்தேன்; அருஞ்சினம் அடக்கி நின்றேன்;

[ மூ எழு முறைமை - இருபத்தொரு தலைமுறை. பாரின்-பூலோகத்தின். மேவு எழு மழுவின் வாயால் - விரும்பியெழுகிற கோடாலியின் கூர்முனை யால். களை கட்டு - களை பறித்து. தூ - தசை. எழு குருதி - பெருகுகிற இரத்தம். முறையின் - முறைப்படி. கடன்கள் - நீர்க்கடன்கள்; ஜல தர்ப்பணங்கள். ]

'உலகெலாம் முனிவற்(கு) ஈந்தேன்; உறுபகை ஒடுக்கிப் போந்தேன்;
அலகில்மா தவங்கள் செய்(து)ஓர் அருவரை யிருந்தேன்: ஆண்டைச்
சிலையைநீ இறுத்த ஓசை செவியுறச் சீறி வந்தேன்!
மலைகுவன் வல்லை யாயின்; வாங்குதி வில்லை' யென்ருன்.

[ உறு - மிக்க. அலகில் - அளவில்லாத. அருவரை - அருமையான மலை. ஆண்டை - அவ்விடத்தில். மலைகுவன் - போர் செய்தேன். வல்லையாயின் - (நீ) வலிமையுடையவனுனல். வாங்குதி - வளைத்திடு. ]

'அந்தப்போரில் வெற்றிபெற்ற வில் இதோ இருக்கிறது: இதுதான் அந்த விஷ்ணுவின் வில். இதை நீ வளைக்க முடியுமானுல் வளைத்துப்பார்! உனக்கு வலிமையிருந்தால், உன்னுடன் போர் செய்யவும் சித்தமாயிருக்கிறேன்' என்று பரசுராமன் சொன்னதும், என்ன நடக்கிறது? எவ்வளவு விரைவாக அந்தக்காரியம் நடக்கிறது,— பயமுறுத்துகிறவன் தானேபயந்து நடுங்கும்படி?

என்றனன்; என்ன, நின்ற இராமனும் முறுவல் எய்தி
நன்றுஒளிர் முகத்த னகி, நாரணன் வலியின் ஆண்ட

வென்றிவில் தருக' என்னக் கொடுத்தனன்; வீரன் கொண்டான்,
துன்றிருஞ் சடையோன் அஞ்சத் தோளுற வாங்கிச் சொல்லும் :

[ முறுவல் - புன்சிரிப்பு. நன்று ஒளிர் முகத்தான் - நன்றாக ஒளி செய்யும் முகத்தையுடையவன். வலி - வலிமை. வென்றி - வெற்றி. துன்று இருஞ்சடையோன் - நெருங்கிய பெரிய சடைகளோடு கூடிய பரசுராமன். வாங்கி - வளைத்து. ]

'பூதலத் தரசை யெல்லாம் பொன்றுவித் தனையென் றாலும்,
வேதவித் தாய மேலோன் மைந்தன்நீ; விரதம் பூண்டாய்;
ஆதலிற் கொல்ல லாகா(து); அம்பிது பிழைப்ப தன்றால்;
யாதிதற்(கு) இலக்க மாவ(து)? இயம்புதி விரைவின்' என்றான்.

[ பொன்றுவித்தனை - அழியச் செய்தாய். வேதவித்து - வேதங்களை நன்கு அறிந்தவன். ஆய - ஆகிய. பிழைப்பதன்று - தவறுவதன்று. இலக்கம் - குறிப்பொருள். இயம்புதி - சொல்லுவாய். ]

'நான் அரசர்களைக் கொன்று வேறு பகைவர்களில்லை யென்று துறவியாகி ஒரு மலையில் தவஞ்செய்து கொண்டிருக்கும் போது, நீ வில்லிறுத்த ஓசை செவியில் விழுந்து என் தவத்தைக் கலைத்து விட்டது. "ஆ! ஆ! இன்னும் வீரனான ஒரு க்ஷத்திரியன் உயிரோடிருக்கிறானே!" என்று சீறிப் போர் செய்ய வந்தேன். முதல்முதல் அதற்குச் சோதனையாக இந்த வில்லை வளைத்துப் பார்!' என்று பரசுராமன் கூறியதும், இராமன் புன்சிரிப்புச் சிரிக்கிறான். அந்தப் புன்சிரிப்பு அந்த முகமண்டலத்தை நன்றாக ஒளிரச் செய்ய, 'அந்த வில்லைத் தந்துவிடு' என்று தன் கையில் வாங்கிக் கொள்ளுகிறான்.

திடீரென்று பரசுராமனுக்கு ஏன் இந்த நடுக்கம்? இராமன் எவ்வளவு அனாயாசமாக அந்த விஷ்ணு தனுசையும் வளைத்து விடுகிறான்! தவ வலிமையும் ஜாதி கர்வமும் ஒழுக்க வலிமையின் முன் ஓடி ஒளிக்கின்றன. அறிவைப் புகைத்து எழுந்த துவேஷ

உணர்ச்சி, அமைதியும் பணிவும் தழுவிய பெருவலி முன் பணிந்து விடுகிறது. பரசுராமன் மதியிழந்து வாயிழந்து நிற்கிறான்.

இராமனது இளநகை இளநிலவுபோலக் குளிர்ந்து வீசுகிறது. அந்த இளநகையின் மாட்சியில் கூசி ஒடுங்குகின்றன, நெருப்பைக் கக்கும் சொற்களும் கண்களும். அந்த இளநகையிலே தோய்ந்து வரும் சொற்கள் பரசுராமன் செவியில் கம்பீரமாக ஒலி செய்கின்றன.

அந்த வாக்கிலேதான் என்ன பேராண்மை! ஆம், அருள் தழுவிப் பழுத்த பேராண்மை. 'பரசுராமா! நீ உலகத்திலுள்ள அரச குலத்தாரையெல்லாம் கொன்ற கொலைஞன்; எனவே என் தண்டனைக்குரியவன். அப்படியிருந்தும் உன்னை நான் மன்னிக்கப் போகிறேன். இந்த மன்னிப்பு வேதவித்தான உன் தந்தையார் பொருட்டேயாகும். மேலும் நீ தவ வேஷத்தோடு விரதம் பூண்டிருக்கிறாய். இனியாவது நல்வழிப்படுவாயென்று நம்புகிறேன்; ஆகையால் உன்னை நான் கொல்லப் போவதில்லை. வில்லில் தொடுத்த அம்போ வீணாகப் போவதுமில்லையே! இதற்கு இலக்குயாது? விரைவாகச் சொல்லு' என்று கேட்கிறான். 'இயம்புதி விரைவின்' என்பதால், இராம பாணம் வெளிப்பட்டு அபாயத்தை உண்டாக்குவதற்கு முன்னமே அவன் தப்ப வேணுமென்பது குறிப்பு.

பிறப்பால் பிராமணனாகிய பரசுராமனை இராமன் 'வேதவித்தாய மேலோன்' (அதாவது பார்ப்பனப் பெரியோன்) என்று ஒப்புக்கொள்ளாது, 'வேதவித்தாய மேலோன் மைந்தன்' என்று கூறுவது கவனிக்கத் தக்கது. இந்தக் கொள்கை அடுத்த பாட்டில் பரசுராமன் வாக்காகவும் வற்புறுத்தப்படுகிறது. அவன் க்ஷத்திரியனாகிய இராமனை 'வேதியா!' என்றழைப்பது சிந்திக்கத் தக்கது. கோபமும் பகையும் துறந்து நீதியும் அருளும் நிறைய உடையவராய், வித்தையில் (வேதத்தில்) ஓங்குவோரே வேதியர் என்பது குறிப்பு.

'நீதியாய்! முனிந்திடேல்; நீஇங்(கு) யாவர்க்கும்
ஆதியான்; அறிந்தனன்; அலங்கல் நேமியாய்!
வேதியா! இறுவதே யன்றி வெண்மதிப்
பாதியான் பிடித்தவில் பற்றப் போதுமோ?'

[முனிந்திடேல் - கோபங் கொள்ளாதே. ஆதியான் - ஆதியான தலைவன். அலங்கல் - மாலை. நேமி - சக்கரம். நேமியாய் - மகாவிஷ்ணுவின் அம்சமானவனே. இறுவது - முறிபடுவது. வெண்மதிப் பாதியான் - வெண்மையான சந்திரனது துண்டத்தைத் தரித்திருக்கும் சிவபெருமான். பற்ற - பிடித்தற்கும். ]

என்று பரசுராமன் துதிப்பதைப் பாருங்கள்.

பிறகு அவன் தன் கர்வத்திற்குக் காரணமான தபோ பலத்தை இராமன் வளைத்த வில்லின் அம்புக்கு இலக்காக்குகிறன். அதனுல் கர்வபங்கமாகி,

'எண்ணிய பொருளெலாம் இனிது முற்றுக;
மண்ணிய மணிநிற வண்ண! வண்துழாய்க்
கண்ணிய! யாவர்க்கும் களைக ணுகிய
புண்ணிய! விடை'யெனத் தொழுது போயினுன்.

[மண்ணிய - செப்பமிட்ட. வண்துழாய் - அழகிய திருத்துழாய். கண்ணிய - மாலையையுடையவனே. களைகண் - புகலிடம். ]

'புண்ணியத்தின் வடிவமே! நீ எண்ணிய காரியமெல்லாம் இனிது நிறைவேறுக' என்று பரசுராமன் வாழ்த்தித் தொழுது விடைபெற்றுப் போனபின், இராமன் தசரதனைப் பேரன்போடு தொழுதான். அவனே ஐம்புல உணர்ச்சியும் ஒழிந்து உயிர் போனுன் போலக் கிடந்தானும். இராமன் தொழுது அவன் கண்ணெதிரே வந்து நின்று அவனைத் துயர் நீங்கச் செய்தான்.

அழிந்தவன் போனபின் அமலன், ஐயுணர்(வு)
ஒழிந்துதன் உயிருலந்(து) உருகு தாதையைப்
பொழிந்தபே ரன்பினுல் தொழுது, முன்புபுக்(கு),
இழிந்தவான் துயர்க்கடற் கரைநின் றேற்றினுன்.

[ அழிந்தவன் - (செருக்கு) அழிந்த பரசுராமன். அமலன் - குற்ற மற்ற இராமன். ஐயுணர்வு - ஐம்புல உணர்ச்சி. இழிந்த - இறங்கியிருந்த ; விழுந்திருந்த. வான்துயர்க் கடல் - பெரிய துக்க சாகரம். ]

பரசுராம கிரகணத்திலிருந்து விடுபட்டுக் குறைவில்லாமல் விளங்கிய இராமசந்திரனை 'அமலன்' என்கிறுன். அந்த விஜய செளந்தரியத்தோடும் பேரன்போடும் தொழுதுகொண்டு இராமன் கண்ணெதிரே வந்ததும், அந்தத் தோற்றமே தசரதன் பரசுராம னுக்கு அஞ்சி விழுந்து அமிழ்ந்துகிடந்த துக்க சமுத்திரத்திலிருந்து அவனைக் கரையேற்றி விட்டதென்பது குறிப்பு.

துயர்க்கடலில் ஆழ்ந்திருந்தவன் இப்போது களிப்புக்கடலில் ஆழ்ந்து விடுகிறுனும்.

வெளிப்படும் உணர்வினன், விம்மல் நீங்கினன்,
தளிர்ப்புறு மதகரித் தானை யான்,இடைக்
குளிப்பருந் துயர்க்கடற் கோடு கண்டவன்,
களிப்பெனும் கரையிலாக் கடலுள் ஆழ்ந்தனன்.

[ விம்மல் - துன்பம் ; ஏக்கம். தளிர்ப்பு உறும் - மனஎழுச்சி அடைகிற. கரி - யானை. தானையான் - சேனையையுடைய தசரதன். இடை - (பரசு ராமன் வந்துபோனதற்கு) இடையே. குளிப்பு - மூழ்குதல். கோடு - கரை. ]

உள்ளடங்கியிருந்த உணர்வு கொஞ்சம் கொஞ்சமாக வெளிப் பட்டதாம், 'இராமன் பொழிந்த பேரன்பினுல்.' உணர்வு சிறிது வெளிவரப் பெற்றதும் தசரதன் அரைக்கண் திறந்து பார்த்தான். இராஜகுல பயங்கரனை பரசுராமன் இல்லாததையும், இராமன்

க்ஷேமமாக வந்து தொழுவதையும் கண்டு ஏக்கம் நீங்கினன். எதிரே வந்து நின்ற அந்த விஜய சௌந்தரியத்தைக் கண்டதும், துன்பக் கடலின் கரையையும் கண்டு, கரையில்லாத களிப்புக் கடலிலும் ஆழ்ந்துவிட்டானும். தசரதன் அடைந்த அளவற்ற இன்பம் வாசகரும் விசேஷ இன்பத்துடன் அனுபவிக்கும்படி வருணிக்கப்படுகிறது. தசரதன் அனுபவித்த துன்பம் முடிவுற்றது போலன்றி, அவன் அனுபவித்த இன்பம் முடிவற்றது: இதைக் குறிக்கவே துயர்க் கடலுக்குக் கரையும் களிப்புக் கடலுக்குக் கரையின்மையும் கற்பிக்கிருன் கவிஞன்.

தந்தை மைந்தனை ஆலிங்கனஞ் செய்துகொண்டு உச்சி மோந்து ஆனந்தக் கண்ணீர் உகுக்கிருன். ஆனந்தக் கண்ணீராட்டுகிருனென்றே சொல்லவேண்டும், ஏதோ மங்கள ஸ்நானம் செய்விப்பது போல.

பரிவறு சிந்தைஅப் பரசு ராமன்கை
வரிசிலை வாங்கி,ஓர் வசையை நல்கிய
ஒருவனைத் தழுவிநின்(று) உச்சி மோந்து, தன்
அருவியங் கண்ணெனும் கலசம் ஆட்டினன்.

[ பரிவு அறு - அன்பில்லாத. வரிசிலை - கட்டமைந்த வில். ஓர் - ஒப்பற்ற. நல்கிய - கொடுத்த. ]

இவர்கள் அயோத்தியடைந்து சிலநாள் சென்றபின், பரதன் தன் தாயார் பிறந்த நாடாகிய கேகய நாட்டுக்குச் சென்ருன். இவனும் தந்தையைப்போல் இராமனை அன்றி உயிர் வேறு இல்லாதவனுதலால், உயிரைப் பிரிந்து உடல் சென்ருற்போலச் சென்ருனும். சென்று சத்துருக்கனனுடன் கேகய நாட்டை அடைந்தான்.

# 23. முன்வாசற் பூஞ்சோலை

கைதேர்ந்த சிற்பி ஒருவன் மண்ணையும் கல்லையும் பொன்னையும் மணியையும் கொண்டு மனோகரமான மாளிகை அமைக்கிறான். அப்படியே கவிச் சிற்பியும் தன் சொல்லை இசைத்துச் சுந்தரமான காவிய மாளிகையை நிர்மாணஞ் செய்கிறான். கட்டடங்களில் எத்தனை வகைகள் இருக்கின்றன! அவ்வண்ணமே காவிய மாளிகைகளும் கவிஞர் பெரு மக்களின் மனோபாவத்திற்கு ஏற்றவாறு பலவகையாக நிர்மாணஞ் செய்யப்படுகின்றன.

கம்பராமாயணம் மகாகாவிய உலகின் அற்புத மாளிகைகளில் ஒன்று. உண்மையில், இராமாயணம் அயோத்தியா காண்டத்திலே தான் தொடங்குகிறது. இது யுத்த காண்டத்திலே இராவண வதத்தோடு முற்றுப்பெறுகிறது. இராவண வதமே இராமாயணத் தின் மத்திய சம்பவம் அல்லது முக்கிய நிகழ்ச்சி. சீதையை இராவணன் சந்தித்தது இராவண வதத்துக்கு நெருங்கிய காரண மாக அமைகிறது. எனவே, சீதையும் இராமனும் நகர் நீங்கிக் காடு செல்லும் நிகழ்ச்சியைக் கூறும் அயோத்தியா காண்டத்தை இராமாயணத்தின் முதற் பெரும் பகுதி யென்று சொல்லலாம்.

அயோத்தியா காண்டத்திலே தொடங்கி யுத்த காண்டத்தோடு முற்றுப்பெறும் இப்பெருங் காவிய மாளிகைக்குக் கம்பன் தனது பால காண்டத்தை ஒரு முன்வாசற் பூஞ்சோலை ('முன்றிற் சோலை') யாக அமைத்திருக்கிறான். இராம ராஜ்ய வாசிகள் தங்கள் மாளிகை களின் முன்வாசலில் அழகிய பூஞ்சோலைகளும் முத்துப் பந்தல் களும் அமைப்பது வழக்கமாம். 'முன்றில்கள் அல்லன முத்தின் பந்தரே' என்பது கவிஞன் வாக்கு.

## முன்வாசற் பூஞ்சோலை

அத்தகைய மாளிகை ஒன்றில் பிரவேசிக்க விரும்புகிறவர்கள் முன்வாசற்சோலை வழியாக ஆனந்தமாய் உலாவிச் செல்லுவார்கள். அப்படியே, கம்ப ராமாயணத்துக்குள் பிரவேசித்து அதன் அழகுச் செல்வத்திலே மூழ்கிக் களிக்குமுன், வாசகருள்ளம் இராமாயணத்தின் முகப்பிலே அமைக்கப் பெற்றதோர் அழகிய சோலையாகக் காணப்படும் பாலகாண்டத்திலே உலாவிச் செல்லுகிறது.

இத்தகைய சோலைக்கு அழகும் இனிமையும் தரும் கவிமலர் களும் கவிதைப் பூங்கொத்துக்களும் பாலகாண்டத்தின் பலவேறு படலங்களிலும் காணப்படுகின்றன. இக்காண்டத்தின் பெரும் பகுதியான படலங்களும், இரு பெரு நிகழ்ச்சிகளான திருஅவதாரம் திருமணம் என்பவற்றைத் தழுவி அமைகின்றன.

பால காண்டத்தின் முதல் நான்கு படலங்களும் ஐந்தாவது படல மாகிய திரு அவதாரப்படலத்தை அணிசெய்கின்றன. அடுத்த கையடைப் படலத்திலேயே திருமணத் தூதாகிய விசுவாமித்திரர் விஜயஞ் செய்கிறார். ஏழாவது தாடகைவதைப் படலமும், எட்டாவது வேள்விப் படலமும், சீதை காதலனான இராமனது — சிவதனுசை முறிக்கப்போகும்—‘ கைவண்ண ’த்தையும், ஒன்பதாவது அகலிகைப் படலம் அவனது அருளழகான ‘ கால் வண்ண ’த்தை யும் முன்கூட்டியே அறிவிக்கின்றன. பத்தாவது மிதிலைக் காட்சி தொடக்கமான பதினொரு படலங்களும் கடிமணப் படலத்துக்கு அணியாகிச் சீதாராமரின் காதல்மணத்திற்காகச் சிங்காரித்த ஒரு சிங்காரப் பூங்காவனம்போலத் திகழ்கின்றன. இக்காண்டத்தின் இறுதியிலுள்ள ‘ பரசுராம கர்வ பங்கம் ’ மணமாலையோடு இராமன் அணிந்துகொண்ட ஒரு வெற்றிமாலையாக மதிக்கத்தக்கது.

சிவதனுசை முறித்தபோது இராமன் காட்டிய வீரத்தின் உயிர் நிலையாக ஜொலித்தது காதலே யென்பது கம்ப சித்திரத்தில் வெளிப்படையாகக் காண்கிறது. ‘ மின்னேயெனும் இடையா ளொடும் இனிதேகினன் வீரன் ’ என்றவாறு காதலியோடு வீரனான

இராமன் சந்தோஷமாக அயோத்தியை நோக்கி வரும்போது ஏற்பட்ட பரசுராம கர்வ பங்கமும், வில்லிறுத்த வெற்றியை அடுத்து வரும் காதலின் வெற்றியே யென்பது குறிப்பு. கம்ப சித்திரத்தில், வில்லை முறித்தது முதல் இராவண வதம் ஈறாகவுள்ள வீர நிகழ்ச்சிக ளெல்லாம் காதலின் வெற்றியென்றே ஊகிக்கலாம்.

இனி, இக்காவிய மாளிகையின் முன்வாசற் பூஞ்சோலையான பால காண்டத்தின் அளவைப் பெருக்குவதற்கு, விசுவாமித்திரர் வாக்காக வரும் சில கதைப் பூங்கொத்துக்களும், பதின்மூன்றாவது எழுச்சிப் படலம், பதினான்காவது வரைக்காட்சிப் படலம், பதினைந்தாவது பூக்கொய் படலம் முதலான படலங்களில் பொதிந் துள்ள கவிதைப் பூங்கொத்துக்களும் சாதனமாகின்றன என்று கூறலாம். இப்படலங்கள் சீதா ராமர்களின் காதல்மணத்திற்கு ஏற்றதொரு சிங்காரப் பூங்காவனமாகத் திகழ்வதோடு, இவற்றி லுள்ள பல கவிமலர்களும் இந்த முன்வாசற் பூஞ்சோலைக்கு வாடாத அழகும் இனிமையும் தருகின்றன. இம்மலர்களில் சிலவற்றை நாம் இப்போது கண்டு களிப்போம்.

சீதா கல்யாணத்தை முன்னிட்டுத் தசரதனுடைய சேனை மிதிலைக்குப் புறப்பட்டபோது, போர்வீரர்களோடு அவர்களுடைய பத்தினிகளும் செல்லுகிறார்களாம். அப்பெண்களில் சிலர் தங்கள் கணவர்மீது பிணக்குக் கொண்டவர்கள். அவர்கள் கணவரைப் பாராமல் வேறு எங்கேயோ பார்த்துக்கொண்டு போகிறார்களாம். ஒருவேளை கணவரைப் பார்க்க நேர்ந்தபோதிலும் அன்போடு பார்க்க வில்லையாம். அப்பெண்களுக்குக் கோபம் அதிகம்: உள்ளுக் குள்ளே வருத்தமும் அதிகமாய்த்தானிருக்கிறது. ஊடல் கொண்ட அவர்கள் ஆடவர்களைப் பிரிந்து தூரத்திலே செல்ல மனமில்லாமல், அவர்களது சமீபத்திலேயே போய்க்கொண்டிருக்கிறார்கள். அப்படிச் செல்லும் பெண்மணிகளின் தோற்றத்தை என்னென்று சொல்லு வது? ஆடவர்களது உயிரே இங்ஙனம் பெண்ணுருக்கொண்டு செல்லுகிறதோவென்று சொல்லும்படி யிருக்கிறதாம்:

ஊடிய மனத்தினர், உருத நோக்கினர்,
நீடிய உயிர்ப்பினர், நெரிந்த நெற்றியர்,
தோடவிழ் கோதையும் துறந்த கூந்தலர்,
ஆடவர் உயிரென அருகு போயினர்.

[ உருத - பொருந்தாத. உயிர்ப்பு - மூச்சு. தோடு அவிழ் கோதை - இதழ்கள் மலர்ந்த மாலை. ]

ஃ ஃ ஃ

மிதிலைக்குப் போகும் வீரருள் ஒருவன் தன் காதலியை வண்டியில் ஏற்றிவைத்துத் தான் மற்ற ஆடவரோடு நடந்து போகிறான். போகும் வழியில் இடையிடையே வண்டிக்கு அருகில் வர நேரும்போது, அவள் அவனை ஆசையோடு கடைக்கண்ணால் பார்க்கிறாள். அவள் கண்களில் மைதீட்டப் பெற்றிருப்பதால், கண்ணின் ஓட்டம் தெளிவாக விளங்குகிறதாம்: இதனால் அவளது ஆசைக் குறிப்பு அந்த நோக்கிலே நன்கு வெளிப்படுகிறதாம். அவள் அதுவரை மறைத்து வைத்திருந்த காதலைக் கண்ணுக்கு இட்டிருக்கும் அஞ்சனம், புதையற் பொருளைக் காட்டும் அஞ்சனம் போல் வெளிப்படுத்திவிடுவதால், அவள் மையிட்டுக் கொண்டிருப்பது காதலனுக்குத் தேவாமிர்தம் போலிருக்கிறதாம். அவன் நீண்ட வழி ஓடிச் சென்ற களைப்பையும் மறந்து விடுகிறானாம், அந்த இன்பத்திலே:

பாண்டிலின் வைத்தனர் பாவை தன்னொடும்,
ஈண்டிய அன்பினன் ஏகு வான்,இடைக்
காண்டலும், நோக்கிய கடைக்கண் அஞ்சனம்
ஆண்டகைக்(கு) இனியதோர் அமுத மாயதே.

[ பாண்டில் - வண்டி. ஈண்டிய - நிறைந்த. இடை - இடையில். ஆண் தகை - ஆடவன். ]

ஃ ஃ ஃ

ஒரு பெண் ஏறிச் செல்லும் குதிரை துள்ளிப் பாய்கிறது. இதனல் அவள் தவறிக் கீழே விழத் தொடங்குகிருள். அப்போது அருகேயிருந்த காதலன் அவளுக்கு அபாயம் நேராமல் அவளைத் தன் கையால் பிடித்துக்கொள்ளுகிருன். ஆனல் அவன் அவளைத் தரைமேல் இறக்காமலும் இறங்க விடாமலும் தழுவியபடியே, தன்னை மறந்து பரவசமாக நிற்கிருனும். இக்காட்சி,

‘சுழிகொள் பாய்பரி துள்ள,ஓர் தோகையாள்
வழுவி வீழலுற் ருளை,ஓர் வள்ளல்தான்
எழுவின் நீள்புயத் தால்எடுத் தேந்தினுன்,
தழுவி நின்ருெழி யான்,தரை மேல்வையான்’

[சுழிகொள் - (நல்விலக்கணமான) சுழிகள் அமைந்த. பரி - குதிரை. எழுவின் - இருப்புத் தூண்போன்ற.]

என்ற பாட்டில் பிரதிபலிக்கிறது.

ஃ ஃ ஃ

ஒரு வீரன் தன் காதலியின் கண்களைப் பார்த்துத் திடுக்கிட்டு, ‘ஆ! ஆ! இவை எவ்வளவு கூர்மையானவை!’ என்று பிரமிக்கிருன். பிறகு அவன் ‘இந்தக் கண்களைப்போல் நமது கையிலுள்ள வேலாயுதத்திற்குக் கூர்மை இருக்கிறதா?’ என்று சந்தேகிக்கிருன். எனவே அவளுடைய கண்களையும் தன்னுடைய வேலாயுதத்தையும் அடிக்கடி ஒப்பிட்டுப் பார்க்கிருன். முடிவில், தன் வேலாயுதத்தைக் காட்டிலும் தன் காதற் பெண்ணின் கண்களே மிகக் கூரியவை யென்று சித்தாந்தஞ் செய்கிருனும். இதனல் அவனது வீர உள்ளத்தில் கொஞ்சம் பொருமை ஏற்பட்டபோதிலும், அவனல் உண்மையை ஒளிக்க முடியவில்லை. அவனுடைய வேல் எதிரிகளின் தசையில் மாத்திரமே பாய்கிறது. ஐயோ! அக்கண்களோ அவனுடைய உயிரிலேயே பாய்ந்து துளைக்கின்றன அல்லவா? இந்த நாடகக் காட்சி,

'சுழியும் குஞ்சி மிசைச்சுரும்(பு) ஆர்த்திடப்
பொழியும் மாமத யானையிற் போகின்ருன்,
கழிய கூரிய என்ரெரு காரிகை
விழியை நோக்கித்தன் வேலையும் நோக்கினன்!'

[சுழியும் குஞ்சி மிசை - சுழிந்துள்ள (தன்) மயிர்மீது. சுரும்பு - வண்டுகள். யானையின் - யானைபோல. கழிய - மிகவும்.]

என்ற பாட்டில் எவ்வளவு அழகாகச் சித்திரிக்கப்படுகிறது!

ஃ ஃ ஃ

ஒரு வீரன் தன் காதலியோடு சம்பாஷிக்க விரும்புகிருன். அவளோ கோபங் கொண்டிருப்பதால் அவனேடு உரையாட விரும்ப வில்லை. அவள், கோபத்தையும் தன் வாயால் வெளியிட மறுக்கிருள். அவளுடைய உள்ளத்திலே பொங்கிக் கொண் டிருக்கும் கோபம் கண்களில் ஜொலிக்கிறது. 'ஆ, என்ன கண்கள்! உயிரையும் உடம்பையும் பிரித்துவிடும் யமனைப்போலக் காண்கின்றனவே!' என்று வீரன் அஞ்சுகிருன். அவள் தன் கொலைக் கண்களால் பேசுகிருளே யொழிய, வாய் திறந்து ஒரு வார்த்தையும் பேசவில்லை. அவர்கள் செல்லும் வழியில் ஒரு நதி குறுக்கிடுகிறது. அதைக்கண்ட காதலன் அந்த நதியை மனமார வாழ்த்தித் தன் காதலியை நோக்கி, 'இப்போது நீர் என்னேடு பேசமாட்டேனென்கிறீர். அந்த ஆற்றில் இறங்கிச் செல்லும்போது உம்மை யார் கையால் தூக்கிக் கரைமேல் ஏற்றுவார்? வாய்திறந்து பேசினல்தான் அப்படிச் செய்வேன் என்று நான் சொன்னல், நீர் பேசித் தீரவேணுமே! இந்த மௌன விரதம் எவ்வளவு காலத்துக்கு நிலைநிற்கும்?' என்று குறும்பாகக் கேட்கிருன்:

கூற்றம் போலும் கொலைக்கண்ணி னலன்றி
மாற்றம் பேசுகி லாளை, ஓர் மைந்தன்தான்
'ஆற்று நீரிடை அங்கைக ளாலெடுத்(து)
ஏற்று வார்உமை யாவர்கோ லோ?' என்ருன்.

[ கூற்றம் - எமன். மாற்றம் - விடை. அங்கை - அழகியகை. ]

இக்கேள்வியில் 'இப்போது பேச்சுக்கும் உரியவன் அல்லாத வனாகிய நான் இனிமேல் உம்மைத் தொடுவதற்கு உரியவன் ஆவேனோ?' என்ற கேள்வியும் தொனிக்கிறது. அவளைத் தீண்டும் பாக்கியத்தைப் பெறப் போவதால், இக்காதலன் தன் கைகளை 'அழகிய கைகள்' என்று பாராட்டிப் பேசுகிறானோ? — என்று கூட ஒரு கேள்வி நமது உள்ளத்திலும் எழுகிறது.

ஃ ஃ ஃ

தசரதனுடைய சேனைகள் சந்திரசைலம் என்ற மலைச்சாரலில் இரவைக் கழித்துவிட்டு மறுநாள் உச்சிப்பொழுதில் சோணையாற்றை அடைந்தன. மைந்தர்களும் மாதர்களும் பூக்கொய்யவும் நீராடவும் விரும்பித் தடாகங்கள் நிறைந்த ஒரு சோலைக்குச் சென்றார்கள். மகளிர் பூககொய்யுமாறு பூங்கொம்புகளைத் தாழ்த்தும் அந்த அழகைத்தான் பாருங்கள் :

நஞ்சினும் கொடிய நாட்டம் அமுதினும் நயந்து நோக்கிச்
செஞ்செவே கமலக் கையால் தீண்டலும், நீண்ட கொம்பர்
தஞ்சிலம் படியில் மென்பூச் சொரிந்துடன் தாழ்ந்த வென்றால்,
வஞ்சிபோல் மருங்கு லார்மாட்(டு) யாவரே வணங்க லாதார் ?

[ நாட்டம் - கண். நயந்து - விரும்பி. செஞ்செவே - நன்றாக. கொம்பர் - பூங்கொம்பு. தம் சிலம்படியில் - தமது சிலம்பணிந்த அடிகளில். வஞ்சி - வஞ்சிக்கொடி. மருங்குலார் மாட்டு - இடையையுடைய பெண்க ளிடத்து. ]

ஆடவர்களுக்கு அந்தக் கண்கள் நஞ்சைக் காட்டிலும் கொடி யனவாக இருக்கின்றனவாம். அத்தகைய கண்களை அமுதினும் இனியனவென்று கருதும்படி அவ்வளவு பிரியத்தோடு பார்க்கிறார் களாம், அந்தப் பூக்களை அந்தப் பெண்கள். பார்த்து அந்தப் பூங் கொம்புகளைத் தங்கள் கைகளால் தாழ்த்துகிறார்களாம். அவை

பூச்சொரிந்த வண்ணம் தாழும் அந்தக் காட்சி எப்படியிருக்கிறது? அந்த மலர்க் கைகள் தீண்டியதும், உடனே பூங்கொம்புகள் அந்தப் பார்வையிலும் ஸ்பரிசத்திலும் மயங்கிச் சிலம்பணிந்த அந்த அடி மலர்களில் தாமே பூச் சொரிந்து தாழ்வதுபோலத் தோன்றுகின்றனவாம். 'உணர்ச்சியில்லாத பூங்கொம்புகளே அப்படித் தாழ்ந்து அவர்கள் பாதங்களில் மலர்சொரிந்து வணங்கினவென்றால், அவர்களுக்கு வசியப்பட்டு வணங்காதவருண்டோ?' என்கிறான் கவிஞன்.

ஃ ஃ ஃ

பூப் பறிக்குமிடத்தில் ஒரு காதற்காட்சி:

**போரென்ன வீங்கும் பொருப்பன்ன பொலங்கொள் திண்தோள்**
**மாரன் அனையான் மலர்கொய்திருந் தானை, வந்(து)ஓர்**
**காரன்ன கூந்தற் குயிலன்னவள் கண்பு தைப்ப,**
**ஆரென்ன லோடும், அவளென்ன அயிர்த்து யிர்த்தாள்.**

[ பொருப்புஅன்ன - மலையை ஒத்த. பொலம் - அழகு. திண்தோள் - வலிய தோள்கள். மாரன் - மன்மதன். காரன்ன - மழையை ஒத்த. புதைப்ப - பொத்த. அயிர்த்து - சந்தேகித்து. உயிர்த்தாள் - பெருமூச்செறிந்தாள். ]

போரென்று சொல்லக் கேட்டதும் அந்த வீரத்தோள்கள் ஆசையால் பூரித்துப் போகுமாம். அவன் பூப்பறித்துக் கொண்டிருக்கிறான். அவனுடைய வீரசௌந்தரியம் தன்னுள்ளத்தைப் பறித்துக் கொள்ள அவனை மணஞ்செய்து கொண்டவள் அவள். கணவனும் கட்டழகியான தன் மனைவி மீது காதல் கொண்டவன் தான். அவள் இப்போது சத்தம் காட்டாமல் பளிச்சென்று வந்து அவன் கண்ணைப் பொத்துகிறாள். அவனும் அசதியாக ஆரென்று கேட்டுவிடுகிறான். அவ்வளவுதான்: உடனே அவளுக்குச் சந்தேகம் கோபம் எல்லாம் வந்து விடுகின்றனவாம். ஏன்? 'நம்மைப்போல இவரிடம் விளையாடும் வேறு பெண்ணுமுண்டோ?

இல்லையானால் இப்படிக் கேட்பானேன்?' என்று எண்ணாததெல்லாம் எண்ணுகிறாளாம்.

'ஆரென்னலோடும் அனலென்ன அயிர்த்து, உயிர்த்தாள்!' — என்ன சப்த சித்திரம்! துருத்தியால் ஊதப்பட்டு உலைநெருப்பி லிருந்து புறப்படும் காற்றுப்போல அவள் பெருமூச்செறிவதையும், — கோபத்தால் உலைநெருப்புப்போலச் சிவந்திருக்கும் அந்த முகத்தையும்கூட — இந்தச் செய்யுளடி அப்படியே படம் பிடித்துக் காட்டுகிறது.

ஃ ஃ ஃ

மகாலட்சுமி போலிருக்கிறாள்: அவளுடைய சொல், காதல னுக்கு வீணகானம் போலிருக்கிறது. அவன், ஒப்பற்ற அந்த அழகு - ராணிக்கு இசைந்த ஒப்பற்ற வலிமையோடு விளங்கும் வீரமன்னன். அவர்களுக்கிடையே காதல் இவ்வளவுதானென்று ஒருவராலும் அளவிட்டுக் கூறமுடியாது. எனினும், இக்காதலர்கள் இப்போது ஒருவரோடொருவர் சண்டைபோட்டுக் கொள்ளுகிறார்கள். இப்படிப்பட்ட சண்டைகளும் அவர்களுக்குள் ஏற்படுவதுண்டு. இவ்விளையாட்டுச் சண்டைகள் அல்லது ஊடல்களால் அவர்களுடைய காதல் மேலும் மேலும் அதிகமாக வளர்கிறது; ஒருபோதும் குறைவதில்லை.

இப்போது நடைபெறும் சண்டையிலும், காதலன் வழக்கம் போலத் தோல்வியடைந்து காதலிக்குத் தாழ்ந்து விடுகிறான். அவளோ சிறிதும் கோபம் தணியாதவளாய், மனம் இரங்காதவளா யிருக்கிறாள். காதலன் அவ்விடத்திலிருந்து வேறோரிடத்திற்குப் போகிறான். அவன் பிரிந்துபோனதும் அவள் மனம் இளகுகிறது; கோபம் தணிகிறது. அவள் பச்சாத்தாபப்படுகிறாள்.

இந்நிலையில் காதலி எப்படியாவது கணவனை அடையவேண்டு மென்று நினைக்கிறாள். தானே அவனை நாடி வலியச் செல்வ

தென்றால், அது தலைவியாகிய தன்னுடைய தலைமைக்கு எவ்வாறு பொருந்தும்? எனவே, அவள் ஆழ்ந்து யோசனை செய்து கள்ளத் தனமாகத் தன் நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ளவேண்டு மென்று துணிகிறாள். அவள் செய்த அந்தக் கள்ளம்தான் என்ன என்று நினைக்கிறீர்கள்? தான் அன்போடு வளர்த்து வந்த கிளிப் பிள்ளையைத் தன் காதலன் தங்கியிருந்த இடத்திற்கு முன்கூட்டி அனுப்பி விடுகிறாள். பிறகு அதைத் தேடிச் செல்பவள் போல அங்கே செல்லுகிறாளாம். அப்படிச் சென்றால், அவனே தன்னிடம் மீண்டும் காதல் காட்டக் கூடும் என்பது அவள் கருத்து. அந்தக் கருத்தை முகக்குறி முதலியவற்றால் வெளிப்படாமல் மறைக்க வேண்டித் தன் கள்ள நினைப்பை உள்ளத்தின் ஆழத்திலே வைத்துக் கொண்டாள். ‘ஆழத்துள்ளும் கள்ளம் நினைப்பாள்’ என்கிறான் கவிஞன்.

இக்காட்சியை,

‘யாழோக் கும்சொற் பொன்னனை யாள், ஓர் இகல்மன்னன்
தாழத் தாழாள்; தாழ்ந்த மனத்தாள் தளர்கின்றாள்;
ஆழத் துள்ளும் கள்ளம் நினைப்பாள்; அவன்நின்ற
சூழற் கேதன் கிள்ளையை ஏவித் தொடர்வாளும்’

[ பொன் - லட்சுமி. இகல் - வலிமை. தாழாள் - (மனம்) இளகாத வளாகி. சூழல் - இடம். கிள்ளை - கிளி. ]

என்ற பாட்டு எவ்வளவு அழகாகச் சித்திரிக்கிறது, பாருங்கள்!

கள்ளத்தனமான இந்த யோசனையால் கணவனை அடைந்தபின் என்ன நிகழ்கிறது?— என்பதைக் குறித்துக் கவிஞன் ஒன்றும் கூற வில்லை. அந்தக் காட்சியை நமது ஊகத்திற்கே விட்டுவிடுகிறான். காதலியின் கள்ளத்தால் கிடைத்த அரிய சந்தர்ப்பத்தைக் காதலன் அவளோடு மீண்டும் சமாதானம் செய்துகொள்வதற்குப் பயன்

படுத்திக் கொள்ளுகிறுனென்றும், இந்தக் காதலர் சண்டை மங்களமாகவே முடிகிறதென்றும் ஊகித்துக் கொள்ளலாம்.

ஃ ஃ ஃ

பூக்கொய்தபின் மகளிரும் ஆடவரும் நீர்நிலைகளில் விளையாடு கிறுர்கள். ஒரு நீர்நிலையில் பெண்கள் பலர் நீராடுவதால், அலைகள் கரையில் தள்ளி ஓடி மோதுவதும் மீள்வதுமாகித் தடுமாறுகின்றன. அப்போது செந்தாமரைப் பூக்கள் நீரில் முழுகி அமிழ்ந்து போகின் றன. இப்பூக்கள், நீராடும் பெண்களின் முகத்தைக் கண்டு அவற்றை ஒத்திருக்கமாட்டாமல் வெட்கம் கொண்டு ஒளித்துக்கொள்ளுகின்றன என்று கவிஞன் கற்பிக்கிறுன் :

தள்ளி ஓடி அலைதடு மாறலால்,
தெள்ளு நீரில் முழுகுசெந் தாமரை,
புள்ளி மான்அனை யார்முகம் போல்கிலா(து),
உள்ளம் நாணி ஒளிப்பன போன்றவே.

[ தெள்ளு நீர் - தெளிவாகவுள்ள நீர். ]

ஃ ஃ ஃ

நீராட்டு முடித்து மகளிரும் மைந்தரும் கரையேறுகிறுர்கள். அச்சமயம் சூரியன் அஸ்தமித்துச் சந்திரன் உதயமாகிறது. அந்தச் சந்திரோதயத்தின் வசீகரமான அழகை அப்படியே சித்திரித்துக் காட்டும் கம்ப சித்திரத்தைப் பாருங்கள் :

வெண்ணிற நறைநிறை வெள்ள மென்னவும்,
பண்ணிறம் செறிந்திடை பரந்த தென்னவும்,
உண்ணிறை காமம்மிக்(கு) ஒழுகிற் றென்னவும்,
தண்ணிறை நெடுநிலாத் தழைத்த தெங்குமே.

[ நறை - கள். பண் - இசை. செறிந்து - இறுகி ; நெருங்கி. உண் ணிறை-உள்நிறை - உள்ளே நிறைந்துள்ள. தண்நிறை-குளிர்ச்சி நிறைந்த. ]

கலந்தவர்க்(கு) இனியதோர் கள்ளு மாய்ப்பிரிந்(து)
உலந்தவர்க்(கு) உயிர்சுடு விடமு மாய்,உடன்
புலந்தவர்க்(கு) உதவிசெய் புதிய தூதுமாய்
மலர்ந்தது நெடுநிலா, மதனன் வேண்டவே.

[ உலந்தவர்க்கு - மனம் அழிந்தவர்களுக்கு. விடம் - விஷம். புலந்தவர்க்கு - (ஊடலால்) பிணங்கினவர்களுக்கு. மதனன் - மன்மதன். ]

கள்ளுண்டு மகிழ்ந்து இன்பமநுபவிப்பவர்கள் அநுபவிக்கும் சந்திரிகை இது. அழகு என்ற கள்ளையுண்ட ரஸிகர்களும் சந்திரிகையை இப்படியெல்லாம் அநுபவிப்பதுண்டு. இத்தகைய சந்திரிகையில், நதிகளெல்லாம் வெண்ணிறமுள்ள கங்காநதியாகவே தோன்றுகின்றனவாம்; கருங்கடல்கள் பாற்கடல்போலத் தோன்றுகின்றனவாம்; மலைகள் யாவும் வெள்ளிமலைகள் போலக் காண்கின்றனவாம்:

ஆறெலாம் கங்கையே ஆய; ஆழிதான்
ஊறுபாற் கடலையே ஒத்த ; குன்றெலாம்
ஈறிலான் கயிலையே இயைந்த ; என்இனி
வேறுயாம் புகல்வது நிலவின் வீக்கமே ?

[ ஆழி - கடல்கள். ஈறிலான் - இறுதியில்லாத சிவ பெருமான். என் - என்ன. வீக்கம் - பூரிப்பு. ]

ஃ ஃ ஃ

இந்த நிலவைக் காதலர்களுக்கு 'உதவிசெய் புதிய தூது' என்று வருணிப்பது எவ்வளவு பொருத்தமானது! இந்தத் தூது போதாதென்று ஒரு காதலி, காதலனிடம் தன் தோழிமார்களை யெல்லாம் ஒருத்தி பின் ஒருத்தியாகத் தூது அனுப்பிக்கொண்டேயிருந்தாளாம், 'தூது போய் வருவதற்குக் கொஞ்சம் நேரம் பிடிக்காதா ?' என்ற நினைப்பேயில்லாமல். தோழிகளாயுள்ளவர்களை யெல்லாம், பின்னே போனவர் முன்னே போனவரைத் தொடர்ந்து

போகும்படி அனுப்பிவிட்டுப் பின்னும் அனுப்புவதற்குத் தோழிமார் இல்லாமையால், தானும் அவர்கள் பின்னே தனியளாய்ப் போகிறு ளாம், காதலன் உள்ள இடம் நாடி. காதலின் வேகம்தான் என்ன !

> **மான்விழி யொருத்தி,ஓர் மதுகை வேந்தன்பால்**
> **ஆனதன் பாங்கிய ராயி னுரெலாம்,**
> **போனவர் போனவர்த் தொடரப் போக்கினுள் ;**
> **தானுமங் கவர்கள்பின் தமியள் ஏகினுள்.**

[மதுகை - வலிமை. தமியள் - தனிப்பட்டவள்.]

ஃ ஃ ஃ

ஒருத்தி.— காதலாகிய கடலிலே மிதந்துகொண்டிருப்பவள் — என்ன செய்கிறுள் ! பாருங்கள்:

> **விரைசெய்பூஞ் சேக்கையந் தெப்ப மீமிசைக்**
> **கரைசெயா ஆசையங் கடலு ளாள்,ஒரு**
> **பிரசமென் குதலையாள், கொழுநன் பேரெலாம்**
> **உரைசெயும் கிள்ளையை உவந்து கூவினுள்.**

[ விரை - வாசனை. சேக்கை - படுக்கை. அம் தெப்பம் - அழகிய தெப்பம். மீமிசை - மீது. பிரசம் - தேன். என் குதலையாள் - என்று சொல்லத் தக்க மழலைச் சொற்களையுடைய ஒருத்தி. கிள்ளை - கிளி. ]

ஃ ஃ ஃ

வேறொரு காதலி பந்தும் கையுமா யிருக்கிறுள். எனினும் அந்த விளையாட்டில் புத்தி செல்லவில்லை. தன் பிரிவுத் துயரத்தை மறக்கமுடியவே யில்லை. காதலனுக்குத் தூது அனுப்புகிறுள். ‘எப்போது வரப்போகிறுனே ?’ என்று துடித்துக்கொண்டிருந்தவள், அவன் வாசலில் வந்து சேர்ந்ததும், கதவை அடைத்து விடுகிறுள், தன்னுடைய ‘சுந்தரன்’ உள்ளே வரமுடியாதபடி ! இந்தச் சுந்தரி பந்தும் கையுமாக வந்து, பந்தை அணி செய்யும்

அந்தக் கைவிரல்களைக் கொண்டே தயை தாட்சிணியம் இல்லாமல் கதவை அடைப்பதற்குக் காரணமென்ன?

பந்தணி விரலினள் ஒருத்தி பையுளாள்,
சுந்தர னொருவன்பால் தூது போக்கினள்,
வந்தன னெனக்கடை அடைத்து மாற்றினள்;
சிந்தனை தெரிந்திலம்: சிவந்த நாட்டமே!

[ அணி விரலினள் - அழகு செய்கிற விரலையுடையவள். பையுள் - துன்பம்; (இங்கே) பிரிவுத் துன்பம். கடை - வாசல்; (இங்கே) வாசற் கதவு. நாட்டம் - கண்கள். ]

இவள் தூதனுப்பினதும், அவன்தான் கொஞ்சமும் தாமசமில்லாமல் வந்துவிட்டானே: எனினும் அந்தக் கண்கள் அப்படி ஏன் சிவந்தன? 'என் தூதினால் தானே வந்தாய்; உன் விருப்பத்தால் வந்தாயில்லையே!' என்ற கோபமா? 'சிந்தனை தெரிந்திலம்' என்று கவிஞனே சொல்லும்போது, நாம் எப்படிப் பகுத்தறிய முடியும், காதலருலகின் — தர்க்க ரீதிக்கு அதீதமான — அந்த விந்தைகளை?

ஃ ஃ ஃ

மன்மதனும் வெட்கமடையும்படி அழகு வாய்ந்த புருஷர்கள், கட்டழகு வாய்ந்த தங்கள் காதலிகளோடு உல்லாசமாய்ப் பொழுது போக்கிக் கொண்டிருக்கிறார்கள். அச்சமயம் அப்பெண் மணிகள் ஆடவர்களோடு கொஞ்சிக் கொஞ்சிப் பேசுகிறார்கள். அப்பேச்சு அறிவு மயமாகவாவது தர்க்க ரீதியாகவாவது அமையவில்லையென்றும், அதில் விஷய கௌரவத்திற்கு மாறாகப் பேதைமைக் குணமே வெளிப்படுகிறதென்றும், பேசும் சொற்களோ நிரம்பாத மென்சொற்களாகிய மழலைச் சொற்களேயென்றும் கவிஞன் குறிப்பிடுகிறான்.

ஆனால் இப்படிப்பட்ட பேச்சைக் காதலர்கள் எவ்விதமாக அனுபவிக்கிறார்கள்?

'செய்யிற் கொள்ளும் தெள்ளமு தச்செஞ் சிலையொன்று
கையிற் பெய்யும் காமனும் நாணும் கவினர்,தம்
மையற் பேதை மாதர் மிழற்றும் மழலைச்சொல்,
தெய்வப் பாடற் சொற்கலை யென்னத் தெரிவாரும்'

[செய் - வயல். தெள்ளமுதச் செஞ்சிலை - தெளிவான இரசத்தோடு கூடிய (கரும்பு என்ற) செந்நிறமுள்ள வில். காமன் - மன்மதன். கவினர் - அழகையுடைய ஆடவர்கள். மையல் - காதல் மயக்கம். பேதை மாதர் - பேதைமைக் குணமுடைய மாதர். மிழற்றும் - மெல்லக் கூறும். தெய்வப் பாடல் - கவிதா சன்னதத்தால் வரும் பாடல்கள். சொற்கலை - 'சொல் அமையும்' முறை யென்ற கலை. தெரிவார் - ஆராய்பவர்.]

என்று அந்தக் காதலர்களை அவர்களுடைய காதலிமார்களோடு சுட்டிக் காட்டுகிறான் கவிஞன்.

அந்த மழலைச் சொற்களைக் காதலர்கள், கவியின்பத்தை ரஸிகர்கள் அனுபவிப்பதுபோல அனுபவிக்கிறார்களாம்.

ரஸிகர்கள் கவிதையை எப்படி அனுபவிக்கிறார்கள், தெரியுமா? கவிதைவெறி அல்லது கவிதா சன்னதம் கொண்டு உத்தமக் கவிஞன் பாடும் பாட்டைத் 'தெய்வப் பாடல்' என்று சொல்வதுண்டு.

உத்தமக் கவிஞன் ஒரு மந்திரவாதி. அவன் மாத்திரைக்கோலை உயர்த்துகிறான்: உடனே சொற்கள்—சரியான சொற்கள்—சரியான இடங்களில் வந்து விழுகின்றன. சொற்களில் இல்லாத இன்பம், சொற்களின் விசேஷ அமைப்புமுறையினால் பொங்கிப் பெருகுகிறது. இத்தகைய அமைப்பு முறையைத் 'தெய்வப்பாடல்'களின் 'சொற்கலை' யென்று சொல்லலாம்.

இச்சொற்கலையை ரஸிகர்கள் எத்தனை விதமாக ஆராய்ந்து அனுபவிக்கிறார்கள்! 'இந்தச் சொல் எதுகையில் அமைந்திருப்பது எவ்வளவு அழகாயிருக்கிறது! இது மோனையில் இருப்பது—அடடா! — எவ்வளவு பொருத்தமாயிருக்கிறது! இந்தச் சொற்றொடரினுள்ள

ஓசையின்பம், குறித்த விஷயத்தை எவ்வளவு நன்ருக நம் மனக்கண் முன் கொண்டுவருகிறது! இந்த வாக்கியத்தில் அமைந்திருக்கும் மெல்லோசை வல்லோசைகள், அப்படியே நமது உள்ளத்தை வசீகரித்து விடுகின்றன அல்லவா ?' என்ன சொற்செட்டு! என்ன தொனிப் பொருள்! எப்படிப்பட்ட சப்த சித்திரங்கள்!' என்றெல்லாம் ரஸிகர்கள் தெய்வப் பாடல்களில் அமைந்துள்ள சொற்கலையைத் தெரிந்து தெரிந்து இன்பமடைகிருர்கள்.

இந்த ரஸிகர்களைப்போலக் காதலர்களும் தங்கள் காதலிகளின் மழலைச் சொற்களை அவர்களிடம் கொண்ட காதலின் மிகுதியால் ரஸித்து ஆனந்தமடைகிருர்கள். 'ஆ, ஆ! இந்தச் சொல், நிரம்பாத மென்சொல்லாக இருப்பதே எவ்வளவு அழகாயிருக்கிறது! இந்தச் சொற்களின் ஓசையின்பம் தேவகானம்போல் இனிமை தருகிறது! இன்ன வார்த்தையை அவள் இன்னவிதமாக உச்சரித்தாளே: அதுவே என்மேலுள்ள பெருங்காதலை வெளியிடுகிறதல்லவா ?' என்றெல்லாம் காதலர்கள் எண்ணி யெண்ணி இன்பமடைகிருர்கள். இக்கருத்தை 'மையற் பேதை மாதர் மிழற்றும் மழலைச்சொல், — தெய்வப் பாடற் சொற்கலை யென்னத் தெரிவாரும்' என்ற அடிகள் ஆச்சரியமான ஓசையின்பத்தோடு சித்திரித்துக் காட்டுகின்றன.

'பித்தர் சொன்னவும், பேதையர் சொன்னவும், — பத்தர் சொன்னவும் பன்னப் பெறுபவோ ?' என்ற அவையடக்கச் செய்யுளடிகள் இங்கே நினைவுகூரத் தக்கன. 'பேதையர்' என்பது 'மையற்பேதை மாதர்'. காதலிமார் சொல்லும் காதற் சொற்களைக் காதலர் அனுபவிப்பதுபோல், தெய்வப்பாடல் அல்லது தெய்வமாக் கவிதையையும் நாம் ரஸித்து ரஸித்து அனுபவிக்க வேண்டுமென்பது குறிப்பு.

ஃ ஃ ஃ

இப்படியெல்லாம் அனுபவிக்கத்தக்க கவிமலர்களும் கவிதைப் பூங்கொத்துக்களும், எழுச்சி, வரைக்காட்சி, பூக்கொய்தல் முதலான

படலங்களில் மட்டுமல்ல, கம்பனது காவியப் பூங்கோயிலின் முன் வாசற் பூஞ்சோலையான பால காண்டத்தின் பல படலங்களிலும் காணப்படுகின்றன.

பொதுவாக நோக்குமிடத்து, இப்பகுதியில் கம்பன் கவிதை 'மழலைச் சொல்'லின் இனிமையையும், அருணோதயத்தின் அழகையும் ஞாபகப்படுத்துகிறது. கவிகதி, சோலை மலர்களோடு கொஞ்சும் காலை யிளங்காற்றைப்போல், 'மந்த மந்த நடந்தது வாடையே' என்ற வருணனைக்கு இசைய மந்தமாகவே நடக்கிறது.

முன்வாசற் பூஞ்சோலையில் இளந்தென்றல்போல் தவழ்ந்து வரும் கவிதாசன்னதம், காவியப் பூங்கோயிலுக்குள் பிரவேசித்ததும், — அதாவது, அயோத்தியா காண்டத்துக்கு வந்ததும், — கதைப் போக்கிற்கு இசைய மலைவீழருவிபோலப் பாய்ந்து செல்லுகிறது.

முற்றிற்று



# செய்யுள் முதற்குறிப்பகராதி

## செய்யுள் முதற்குறிப்பகராதி